அனைத்திந்திய நூல் வரிசை

# சூரியகாந்திப் பூவின் கனவு

அஸாமிய மூலம்
ஸையத் அப்துல் மலிக்

தமிழாக்கம்
கரிச்சான் குஞ்சு



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ஊக்குவிப்பாளர் விற்பனையாளர்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
41 - பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 600 098.

---

*1993 (சக. 1914)*



Original Title : SURAJ MUKHIRI SWAPNA (Assamese)
Tamil Translation : SURIYAKANTHIPPUVIN KANAVU,
ISBN 81-237-0372-4

ரூ. 52.00

*வெளியீடு : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,*
*ஏ-5 கிரீன் பார்க், புது டில்லி - 110 016.*

---

# முன்னுரை

அஸாமி மொழியில் நவீனம் எழுதுவதற்கான முயற்சி- 'அருணோதயகாலம்' 1846க்கும் 1882க்கும் இடைப்பட்ட வருஷங்களிலேயே நடந்திருக்கிறது. அந்த அருணோதய காலத்தில் அந்த மொழி தன் பழைய வடிவத்தையும் உருவத்தையும் விட்டுப் புதிய வடிவத்தையும் உருவத்தையும் எவ்வாறு ஏற்றுக் கொண்டதோ, அதனுடைய அமைப்பிலும் எப்படிப் புதுமை வந்திருந்ததோ அதற்கேற்பவே அந்த மொழி இலக்கியத்திலும் புதுவகையான நூல்களைப் படைக்கும் வழியும் திறந்தது. இந்தப் புதுவகைதான் நாவல்; பெருங்கதையின் (வடமொழியில் பிரஹத் கதா) காலத்திலிருந்தே இந்திய இலக்கியத்தில், கதைகளும் உபகதைகளும் எழுதும் மரபு இருந்ததென்றாலும், நாவல் என்றதும் இலக்கியத்தின் எந்தவகை நம் மனத் திரையில் பளிச்சிடுகிறதோ, அந்தவகை நூல்கள் அந்தக் காலத்தில் இயற்றப் படவில்லை; அதனால் பண்டைய அஸாமி இலக்கியத்திலும், இந்தக் காலத்து நாவலின் முன்னோடியான உருவம் இருக்க வில்லை. "பெருங்காப்பியத்திற்கும் நாவலுக்கும் இடையில் அடிப் படையான வித்தியாசம் இல்லை" என்று ரவீந்திரநாத டாகூர் சொன்னது குறிப்பிடத்தக்கதும், அவசியமானதும் ஆன கருத்தே ஆகும். ஏனென்றால் இரண்டுமே அடிப்படையாக ஒரு கதையைத் தான் வர்ணிக்கின்றன.

அருணோதய காலத்தில், 'யாத்திரிகன் யாத்திரை' என்ற பெயருடன் "ஜான் புன்யன்" அவர்களுடைய, "பில்கிரிம்ஸ் ப்ரோக்ரெஸ்" என்ற நூலின் மொழிபெயர்ப்பு வெளிவந்திருந்தது. (இங்கு கவனிக்க வேண்டிய ஒரு விஷயம் உண்டு) அஸாமி மொழியில், "யாத்திரிகன்" என்ற சொல் வழக்கில் கிடையாது. அந்தச் சொல்லாக்கம் வடமொழி, பிராகிருத மொழிகளின் இலக்கண முறைப்படியும் அமையவில்லை)

இதைத் தவிர இதே காலத்தில், காமினீ காந்த், புல்மணி, ஆருகருணா, ஏலோகேசி வேச்யார் கதா முதலிய நூல்கள், (அவை

கதைகளே) பிரசுரம் செய்யப்பட்டன. இந்த நூல்கள் எல்லாமே கிருஸ்தவப் பாதிரிமார்களுடைய (அவர்கள் அமைத்துக் கொண்டது, அதாவது வங்கத்தின் தாயமொழியும் அன்று அது) வங்காள மொழியில் முதலில் எழுதப்பட்டுப் பிறகு அஸாமி பாஷையில் பெயர்க்கப்பட்டவை. இவை அனைத்துமே கிருஸ்தவ மத நோக்குடன் எழுதப்பட்ட, உபதேசம் செய்யும் முறையில் மதப்பிரசாரம் செய்யும் கதைகளைக் கொண்ட நவீனங்களே. இதே காலத்தில் வெளியிடப்பட்ட பத்மாவதி புகன்னி என்பவரின் நாவலான "ஸௌத்ர்மார் உபாக்கியானம்" இந்த வகையில் ஒரு சுயமான படைப்பு. இதுவும் உபதேசம் செய்யும் பாணியில்தான் இருந்ததென்றாலும், பிரசார இலக்கியமன்று.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசிப் பத்து வருஷங்களில் தான், உண்மையான அஸாமி நாவலின் காலம் ஆரம்பம் ஆகிறது. 1891ல் வெளியான ஸ்ரீபத்மநாத கோஹாஞி பருவா அவர்களு டைய 'பானுமதி'யும் இதையடுத்து உடனடியாக வெளிவந்த இவரு டைய 'லாஹரி'யும் அஸாமி மொழியில் நாவல் இலக்கியத்திற்குக் கால்கோள் போன்றவை ஆகும். இந்த நாவல்களின் கதைகள் ஆஹோம் ஆட்சியின் கடைசிக் காலத்து வரலாற்றிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இப்படியிருந்தும் இவற்றிற்கு வரலாற்று நவீனங்கள் என்று பெயர் சூட்டுவதும் எளிதன்று. வரலாற்று நிகழ்ச்சிகளுடன் தொடர்பு இந்த இரண்டு நவீனங் களுக்குமே நெருங்கிய ஆதாரமாக இல்லை. தொலைவில் உள்ள பின்னணியாகவே இருக்கின்றன அவை. வரலாற்று நிகழ்ச்சிகள், கதையின் மலர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் துணை செய்யவில்லை. வரலாற்றின் சரித்திர சம்பவங்கள், ஒரு வகையான வரலாற்று உணர்ச்சிகள் சுயேச்சையாக நிலவி உலவும் சந்தர்ப்பத்தை உண்டாக்குகின்றன, அவ்வளவுதான். இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீலெக்ஷ்மிநாத பேஜ்பருவா அவர்களின் "பதுமகும்வரி" என்ற நாவல் வெளியிடப்பட்டது. இதன் கதைக்கருவும் முன் சொன்ன அதே காலத்திலிருந்து கொள்ளப்பட்டதுதான், ஆனால் முன் இரண்டு நாவல்களைவிட (பானுமதி-லாஹரி) இதில் வரலாற்றின் பாதிப்பு அதிகமாய் இருக்கிறது. தொடர்ந்து வரும் நிகழ்ச்சிகளையுடைய வரலாற்றுடன் கதை இணைந்து சென்றாலும், பதுமகும்வரியின் முழுக் கதையும் காவிய உலகைச் சார்ந்து விளங்குகிறது. சூழ்நிலையின் இயற்கைக்கு மாறான வர்ணனை நாவலின் தரத்தையும் நலத்தையும் கெடுத்துவிட்டது.

கதையின் வளர்ச்சியையும், நிகழ்ச்சிகளின் போக்கையும் வருணிக்கும் நடையையும், பாத்திரப்படைப்பையும், மனநிலை களையும், அவற்றின் மோதல்கள் வெளிப்படும் வகையையும் ஆராய்ந்து பார்க்கும்போது, இந்த உண்மை புலப்படுகிறது.

இதே பத்தாண்டுகளில், ரஜனீகாந்தபந்தலை அவர்களின் "மிரிஜீயரீ" வெளிவந்தது. கோவனகிரி நதியின் கரையில் இருக்கும், 'மிசி' இனத்தைச் சேர்ந்த ஒரு ஜோடி இளம் காதலர்களுக் கிடையில் நடந்த காதற்கதையை வைத்து எழுதப்பட்டுள்ள இது ஒரு சோக முடிவு நாவல். சரியானபடி சொன்னால், இதுதான் அஸாமி மொழியில் உண்டான முதல் சமூக நாவல். இதற்குப்பின் அவருடைய 'ரஹதை லிகிரி', 'மனோமதி', 'ரண்டிலீ', 'நிர்மல பக்த', 'தாமேசுவரி கோவில்' முதலிய வரலாற்று நாவல்கள் வெளியாயின.

கோஹாயீ(ன்) பருவா, பேஜ் பருவா, பந்தலை ஆகியோர் மூவருமே அஸாமி இலக்கியத்திற்கு வழி அமைத்தவர்கள். இவர்கள் வரலாற்றிலிருந்தே தமது நாவல்களுக்குக் கதை தேர்ந்தெடுத் ததிலிருந்து, சுதந்திரமாய் இருந்த அஸாமின் கடைசிக்கால நிகழ்ச்சிகள், அவர்களுடைய மனத்தில் ஆழமான பாதிப்பை விளைவித்திருந்தன என்று ஊகிக்க முடிகிறது. மேலும் எத்தகைய புதுமையும் மாறுதலும் இல்லாமல் தேங்கிக்கிடந்த சமூகத்தையும் வரலாற்றையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது, மோதல்களும் போராட்டங்களும் இருந்த கடந்தகால வரலாற்று நிகழ்ச்சிகள், அவர்களை அதிகமாகக் கவர்ந்திருக்கவும் கூடும்.

பொதுவாக, நாடகங்களின் கதைகளையும் நாவல்களின் கதை களையும் ஆராய்ந்து பார்த்தால், நாடகங்கள், புராணக்கதை களிலிருந்து பிறந்து, சரித்திரக்கதை வழியாக சமூகக் கதைகளுக்கு வந்து முடித்திருப்பதை அறிய முடிகிறது. ஆனால் சமூக நிகழ்ச்சி களில்தான் நாவல் பிறந்தது. அஸாமி மொழியிலும் அப்படித் தான். சமூக நிகழ்ச்சிகளில் தான் இங்கும் நாவலின் பிறப்பைக் காண்கிறோம். ஆனால் அது திரும்பவும் தன் போக்கை மாற்றிக் கொண்டு, வரலாற்றுப் பக்கம் சென்றது அஸாமியில். ஆனால் 'மிரிஜியரியில்' இது மாறுபடுகிறது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், முப்பது நாற் பதுகள்தான் அஸாமி மொழியின் வளர்ச்சிக் காலம். இந்தக் கால கட்டத்தில் வெளிவந்த நூல்கள், காலத்தைத் தாண்டி நிற்கும்

ஆற்றல் படைத்தவை. இவற்றின் கதைகள் பெரும்பாலும் சமூகத்தின் உயர்குலத்தைச் சேர்ந்த, உயர் மட்டத்தைச் சேர்ந்தவர்களிடமிருந்து எடுக்கப்பட்டுள்ளன. கதையின் மலர்ச்சி, பாத்திரப்படைப்பு, உள்ளப் போராட்டங்களின் விளக்கம் ஆகியவற்றை வர்ணிப்பதில், நாவலின் கலை இலக்கண விதிகள் பொறுப்புடன் கையாளப்படுவது தெரிகிறது. சில நாவல்களில் எந்தவித அரசியல் லட்சியங்களையும் புகுத்தாமலேயே, வேறு நல்ல குறிக்கோள்களில் ஒன்று எடுத்துக் காட்டப்படுகிறது. ஒரு சத்தியமே (வாழ்வின் உண்மைக்கூறு) விளக்கப்படுகிறது. மனதத்துவ ஆராய்ச்சிகள் காணப்பட்ட போதிலும் எந்த நாவலாசிரியரும், சமூக நிகழ்ச்சிகளை விவரிக்கும்போது, துயருற்ற, சுரண்டப்பட்ட மக்களின் மனத்தின் ஆழத்திற்குச் செல்லும் ஆற்றல் பெறவில்லை. சுருக்கமாகச் சொன்னால், இந்தக் காலத்து நாவல்கள், நிகழ்ச்சிகளை வர்ணித்துரைக்கும் வகையில் வெற்றி பெற்றனவே தவிர, மனித மனத்தின் சாசுவதமான போராட்டங்களை விளக்குவதில் அந்த அளவு வெற்றி பெறவில்லை.

இரண்டாவது உலகப் பெரும் போரும், இந்தியா நடத்திய 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற போரும், இந்தியாவில் சமூக மதிப்பீடுகளிலும் லட்சியங்களிலும் ஏற்படுத்திய மாறுதலும் புரட்சியும், யுத்த களத்தின் முகவாயில் இருந்த அஸாம் நாட்டை பாதிக்காமல் இருக்க முடியாது. இந்த மாறுதலுக்கான காரணமும் இதன் இயல்பும் தீவிரமாகவும், ஆழமாகவும் பரவிப் பாதிப்பன ஆகும். சமூகத்தின் மாறுபட்ட மதிப்பீடுகளும் லட்சியங்களும், அஸாமி இலக்கிய கர்த்தாக்களின் உணர்வைத் தூண்டிச் சுண்டி விட்டன. அவ்வாறு சுண்டி எழுந்த உணர்வு, சிறுகதை-நாவல் போன்ற வாயில் வழியாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது. ஆனால் இந்த யுத்தத்தின் விளைவான புதிய அனுபவமும் உணர்ச்சியும் சேர்ந்த, புதுப்படைப்பின் வெளிச்சம் 1945-46ல் தான் தோன்றிற்று. உண்மையில் இதே காலத்தில்தான் அஸாமி இலக்கியத்தின், போருக்குப் பிந்திய காலகட்டம் ஆரம்பமாகியிருக்கிறது.

போருக்குப் பிந்திய காலத்து அஸாமி இலக்கியம், சிறப்பாகச் சிறுகதை மற்றும் நாவல்களாகத்தான் பெரும்பாலும் வளர்ந்திருக்கிறது. பல்வேறு வகைப்பட்ட அனுபவங்களின் சேர்க்கை, பழித்து ஒதுக்கப்பட்ட சமூகப்பகுதிகள், மனிதர்களின் சித்திரம், ஆழ்ந்த

அனுபவங்கள், செறிவான உணர்ச்சிகளின் வெளியீடு, கூரிய அரசியல்-சமூகப் பிரச்னை, ஆகியவற்றை இந்தக் கட்டத்து நாவல்களில் காண்கிறோம். சுயேச்சையான ரசிகத்தன்மையின் வெளிப்பாட்டுக்குப் பதிலாக, படைப்புகளில் யதார்த்தப் போக்கு மேலோங்கியது.

ஸையத் அப்துல் மலிக் ஒரு புகழ்பெற்ற இலக்கிய கர்த்தா. அவர் சிறுகதை எழுத்தாளராகவே எங்கும் அறியப்பட்டிருக்கிறார். இரண்டாவது உலகப் போருக்கு முன்பிருந்தே அவர் எழுதி வந்தார். இன்றும் எழுதி வருகிறார். இந்தக் கால இடைவெளியூடே மலிக்கினுடைய கதைகளில் கருப்பொருள், பலவித மாற்றங்களை அடைந்திருக்கிறது; ஆனால் வடிவ அமைப்பில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்படவில்லை. சுருக்கமாகச் சொன்னால், வெறும் கற்பனை நிலையிலிருந்து, புற உலகின் பொருளியலுக்கும், நடுத்தர வர்க்கத்தின் படித்தவர்களிடமிருந்து சாதாரண வர்க்கத்திற்கும் இறங்கி வந்ததே இந்த மாற்றம் என்று சொல்லலாம்.

சிறுகதை எழுத்தாளராக இலக்கிய உலகில் புகுந்த பிறகு, அளவில் சிறியவையும் பெரியவையுமான இவருடைய பத்துப் பதினொன்று நாவல்களில், "சூரியகாந்திப் பூவின் கனவு"ம் ஒன்று. இது முதன்முதலாக, அஸாமி வெளியீட்டுக் கழகத்தின் பொருளுதவியுடன் வெளியிடப்பட்டது. இரண்டு வருஷங்களுக்குப் பிறகு இந்த நாவலுக்கு சாகித்திய அகாடமியின் பரிசு கிடைத்தது.

இந்த நாவல், அஸாம் ராஜ்யத்தின் தன்சிரி நதிக் கரையில் இருக்கும் ஒரு கிராமத்தை மையமாக வைத்து எழுதப்பட்டுள்ளது. ஹிந்து, முஸ்லீம், நேபாலி-மிகிர் மக்கள் கலந்து வாழும் கிராமம். அங்கு நாம்கர் (பிரார்த்தனை நிலையம்-கோயில்) இருக்கிறது. மசூதியும் இருக்கிறது. தன்சிரியாற்றில் வெள்ளம் வரும்போதும், காலரா, வைசூரிகள் ஏற்படும்போதும் அல்லாவும் ஈசுவரனும் சேர்ந்து கிராமத்திற்கு வருகிறார்கள். தன்சிரி ஆற்றின் வண்டலால் செழுமையான விளைநிலமாகியிருந்த வயல்களில் டாலிம் கிராமத்து விவசாயிகள் பயிர் ஏற்றுகிறார்கள். ஏரியில் மீன் பிடிக்கிறார்கள்.

பயிர்த் தொழிலையே நம்பி வாழும் இந்த சமூகத்தின் ஒரு உள்ளார்ந்த சித்திரம் இந்த நாவலில் வெளிப்படுகிறது. நாவலின் கதாநாயகனான குலச், புதிய நிலம் திருத்திப் பண்படுத்தி விவசாயம் செய்யும் பிடிவாதத்தை நினைவுபடுத்துகிறான்.

இந்த நாவலின் இரண்டு பாத்திரங்களைத் தவிர (அவர்களில் ஒன்று முக்கியமில்லாதது), மற்ற எல்லாப் பாத்திரங்களும் முஸ்லீம் சமுகத்தைச் சேர்ந்தவர்கள். நாவல் ஒரு மாறுபட்ட சமூகத்தின் கதை விளக்கமாக இருக்கிறது, என்பதன்று இதற்குப் பொருள். சமூகப் பழக்க வழக்கங்களிலும், வாழ்க்கையின் நெறிமுறை நடையுடைபாவனைகளிலும், மற்ற எல்லாவற்றிலுமே அஸாமில் ஹிந்து முஸ்லீம்களுக்கிடையில் எத்தகைய வேறுபாடும் கிடையாது. ஒரு உள்நாட்டு குக்கிராமத்தில் வாழும், கடுமையான வாழ்க்கைப் போராட்டத்திற்கிடையே எப்படியோ உயிருடன் வாழும், கிழவர்கள்-கிழவிகள், வாலிபப் பையன்கள்-பெண்கள் ஆகியோருடைய சித்திரம் மிகவும் நன்றாகவே நாவலில் வந்திருக்கிறது. இதைத் தவிர, குலச், கேலாயீ, திகர், கபாஹூி, சேனிமாயி, தரா முதலிய பெயர்களும் முற்றிலும் அஸாமிய பெயர்களே.

**நாவலின் கதை இதுதான்:**

டாலிம் கிராமத்து இருபத்து மூன்று வயது வாலிபனான குலச், தன் ஊரைச் சேர்ந்த சேனிமாயி என்பவளுடன் ஒருநாள் இரவு ஓடிப்போனான். இருவரும் இரவை இந்து நேபாலி என்பவனுடைய மாட்டுக் கொட்டிலில் கழித்த பிறகு பிடிக்கப்படுகிறார்கள். குலச்சின் அப்பன், இந்தக் கெட்ட செயலுக்காகத் தன் மகனை வீட்டைவிட்டு வெளியே துரத்துகிறான். அவனுடன் அவனுடைய தாயாரும் குடும்பத்திலிருந்து வெளியே போகிறாள். சேனிமாயி தன் அப்பன் வீட்டிற்குப் போய்விட்டாள். குலச்சும் தாயாரும் தனியே இருக்கிறார்கள். குலச், ஆற்றின் மறுகரையில், பாஹூியில் (படுகையில்) வேலை செய்யத் தொடங்கினான். இடையிடையே அங்கிருந்து குலச் தன் வீட்டிற்கு வருகிறான். தராவின் குடும்பத்திலும் போய்ப் பழகுகிறான். பதினான்கு வயதுள்ள தரா, ஊரின் ஓர் ஓரத்தில் தன் சித்தி கபாஹூியுடன் இருக்கிறாள். கபாஹூியின் வாலிபம் எப்போதுமே குறையாத ஒன்று. முப்பது வயதிருக்கும் அவளுக்கு, ஆனால் பதினாறு வயது யுவதிபோல் இருப்பாள். குலச்சுக்கும் தராவுக்கும் ஏற்பட்டிருந்த முதல் அன்பு ஆழமான காதலாக மாறுகிறது. சமயம் பார்த்துத் தராவைப் பாஹூிக்கு அழைத்துப்போக உபாயம் செய்தான் குலச். தராவுக்கு பதிலாகக் கபாஹூியே வேஷம் மாறிப்போகிறாள். திரை போட்டு மூடியிருந்த கபாஹூியுடன், மௌல்வி நிக்கா படித்து விவாஹம் சடங்கை நிறைவேற்றுகிறார். குலச் ஆரம்பத்தில் திடுக்கிட்டுத் தயங்கினாலும், முடிவில் அந்த நிலையை ஏற்றுக்

கொண்டு விட்டான். குலச்-கபாஹி சேர்ந்த புதுக்குடும்பம் ஏற்பட்டது. தராவும் போய் அந்தக் குடும்பத்தின் கூட்டாளி யானாள். குலச்சின் குடும்பம் செல்வமும் சிறப்பும் பெற்றுவிட்டது. குலச் இன்பமாகத்தான் வாழ்ந்தான்; ஆனால் அவனுடைய இதயத் தினுள் ஒரு இனம் புரியாத வேதனை இருக்கிறது. தராவுக்கும் வேதனைதான்; ஆனால் அது ஓர் ஊமையின் தெளிவற்ற வேதனை. மறைவுகளின் இடையே குலச்சின் நெருக்கத்தைப் பெறுகிறாள் தரா.

சேனிமாயிக்கு ஒரு நடுவயது தாண்டிவிட்ட நோயாளியான கேலாயியுடன் கல்யாணம் ஆகிறது. அவனுக்கு வைத்தியம் செய் வதற்காக அவனை கோலாகாட் நகருக்கு அழைத்துச் செல்கிறான் குலச். கேலாயியை ஆஸ்பத்திரியில் சேர்த்தபிறகு, ஓர் இரவை சேனிமாயியுடன் ஒரு ரூமில் கழித்துவிட்டு ஊருக்குத் திரும்பு கிறான். வீட்டுக்கு வந்ததும் கேலாயியின் தம்பி திகரைத் தன் வீட்டில் பார்க்கிறான். அவனுக்கு தராவைக் கல்யாணம் செய்து தரக் கபாஹி சூழ்ச்சி செய்து கொண்டிருக்கிறாள். இதைத் தெரிந்துகொண்டு அவன் சுயகௌரவமே போய்விட்டதாக நினைத்து சீறி, ஒரு நாள் கபாஹியைச் சாட்டையால் அடித்து வீட்டைவிட்டுத் துரத்தி விடுகிறான். தன்சிரி ஆற்றில் வெள்ளம் வருகிறது. நள்ளிரவில் கரை உடைகிறது. காற்றும் மழையும் வானையும் மண்ணையும் ஒன்றாக்கிக் கொண்டிருக்கிறது. தரா குலச்சை நெருங்கி வருகிறாள். குலச் "வெள்ளம் வந்திருக்கிறது; இந்த வருஷத்து மகசூல் நாசமாய்விட்டது, உன் சித்தியும் போய் விட்டாள். எல்லாம் முடிந்து விட்டது. தொலையட்டுமே.. நீ இருக்கிறாய்...." என்றுதான் கூறுகிறான்.

குலச்-தரா-கபாஹி ஆகியோரின் முக்கோணக் காதலின் மோதலிலேயே நாவலின் கதை வளர்கிறது. சேனிமாயி இந்த மையத்தின் வெளியே இருக்கிறாள். அவள் ஒரு தேவையில்லாத-அதிகப்படியான பாத்திரம்தான். ஆனால் அவள்தான் குலச்சின் முதல் பெண். அவள்தான் அவன் இதயத்தில் உணர்ச்சியின் கடுமை யான கனலை மூட்டியவள். கிளர்ந்து எழுந்த உணர்ச்சியுடன் குலச் யௌவனம் அரும்பியிருந்த தராவின் பக்கம் போகிறான், மற் றொருபுறம் முற்றிய யௌவனத்தையுடைய கபாஹி அவனை விரும்புகிறாள். நடத்தை தவறியவளான கபாஹி வயதில் தன்னை விடச் சிறியவனான குலச்சிற்குத் தன் உடம்பைச் சமர்ப்பிப்பதில் சிறிதும் கூச்சப்படவில்லை. (பஸீரத் என்ற வியாபாரியுடன்

நெறிமுறையற்ற தொடர்பு கொண்டதால், அவளுடைய புருஷன் அவளை வீட்டைவிட்டுத் துரத்தியிருந்தான்) அதற்குப்பிறகு ஒரு நாள் தந்திரம் செய்து, தராவை ஏமாற்றிவிட்டு தானே குலச்சின் மனைவி ஆனாள், குலச்சின் மனம் தராவைத் தேடுகிறது; ஆனால் சேனிமாயியால் தூண்டப்பட்டிருந்த காம உணர்வு கபாஹியைத் தேடுகிறது; இதனால் அவன் கபாஹியை சகஜமாக ஏற்றுக் கொள் கிறான். உடல் இன்பத்தின் முழுமை அவனுக்குக் கிடைத்தது. ஆனால் அவனுடைய மனத்திற்குள்ளே தராவின் ஓவியம்தான் உயிருடன் மிளிர்ந்தது. அதனால்தான் அவளை வேறு ஒருவனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்கும் பேச்சைக் கேட்டதுமே, தைரியத் தை இழந்துவிடுகிறான். சேனிமாயி மறுபடியும் அவன் வாழ்க்கை யில் ஒருநாள் காமஉணர்வின் அலை வீச்சை விடுகிறாள். இந்த கட்டத்தில் குலச் தன் உள்ளத்தில் இடம் கொடுத்திருந்த கபாஹியை, அந்த இடத்திலிருந்து அகற்றிவிட்டுத் தராவை அந்த இடத்தில் நிலைநாட்டுகிறான். கபாஹியை மழைக்காலத்துப் பயிர்; வாலிபத்தின் அலைவீச்சு குலச்சின் மனக்கரைகளை உடைத் தெரிந்தது; கபாஹி முழுகிப்போய் விட்டாள். கதை வளர்ச்சியைப் பற்றிய வரையில், நாவலில் எந்தவிதமான பொருத்தமின்மையும் இல்லை. அது மிகவும் இயல்பாகவே அமைந்திருக்கிறது. கபாஹி தராவை ஏமாற்றிய பிறகும், மீண்டும் தராவை, கபாஹி-குலச் இருவரும் நடத்திய குடும்பத்தில் கொண்டு இணைத்துக் காட்டுவது, நடப்பியலுக்கு முரணாக இருக்கிறதே என்று யாராவது கேட்கலாம். அதற்கு இவ்வாறு பதில் கூறலாம். ஆழ்ந்து சிந்திக்கும் தன்மை படைத்த இலக்கியத்தின் உண்மை இயல் புக்கும், சுவையையே முக்கியமாகக் கொண்ட இலக்கியத்தின் உண்மை இயல்புக்கும் சிறிது வேறுபாடு உண்டு. சிந்தனைக்கு முக்கியத்துவம் தரும் இலக்கியத்தில் பிரத்தியட்சமான உண்மை-கண்ணால் நேருக்கு நேர் தெரிகின்ற உண்மையே - காட்டப் படுகிறது; ஆனால் சுவைக்கு முக்கியத்துவம் தருகின்ற இலக்கி யத்தில்-உணர்வையும் மெய்பாட்டையும் ஊட்டுகிற இலக்கி யத்தில், எது எப்படி இருந்திருக்கும் என்று உய்த்துணருகின்ற நடப் பியல் உண்மையே காட்டப்படுகிறது; அதாவது, விஞ்ஞானத் திற்கும் தத்துவ இயலுக்கும் எவ்வாறு உண்மையுடன் மிக நெருங்கிய தொடர்பு இருக்கிறதோ, அதேபோலச் சுவையூட்டு வதையே முக்கியமாகக் கொண்ட இலக்கியத்திற்கும் உண்மை யுடன் நெருங்கியதொடர்பு உண்டு; ஆனால் சுவையிலக்கியத்தில்

மனிதனை மையமாகக் கொண்ட உண்மை உருப்பெறுகிறது. மனிதனுடைய இன்ப துன்பங்கள், நம்பிக்கை-நம்பிக்கை நிறை வேறாமை, அன்பு, பகை, (விருப்பு, வெறுப்பு) ஆகியவையே சுவை யிலக்கியத்தில் காட்டப்பட்டுவன. ஆனால், எந்த நிகழ்ச்சியின் துணையுடன் இவை காட்டப்படுகின்றனவோ, அந்த நிகழ்ச்சி உண்மையானது இல்லை. கற்பனையானாலும்கூட, படிப்பவர் களுக்கு நம்பிக்கை ஊட்டுவதற்காக, அதில் நடப்பியலின் சாயல் இருக்கவேண்டும். படிப்பவர்கள் நாவலாசிரியரின் கற்பனைத் தேரில் ஏறிச் சுற்றி வரத்தயாராய் இருக்கிறார்கள். ஆனால் அதற் காகக் கற்பனைக் கதை, நடக்கக்கூடிய இயல்பின் எல்லையைத் தாண்டிச் செல்வதும் கூடாது. அந்த வகையில் பார்க்கும்போது, இந்தக் கதையின் வளர்ச்சியிலும் கூறியிருக்கும் முறையிலும் எங்குமே நடப்பியலுக்கு முரணாக எதுவும் இல்லை.

பாத்திரப் படைப்பைப் பற்றிய வரையில், குலச்சுக்கு நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் நிறைய இருக்கின்றன; ஆனால் அவனிடத்தில் உறுதி இல்லை, அவன் சூழ்நிலையை ஒப்புக் கொண்டு பணிந்து விடுகிறான். சந்திரனுக்குக் காரணம் இல்லாத வகையில் பரோபகாரச் சிந்தனை அதிகப்படியாக இருக்கிறது. இந்த நாவல் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும்தான் படிப்பவர்களை சங்கடத்தில், நம்புவதா வேண்டாமா என்ற நிலையில் தடுமாற வைக்கிறது. அது என்னவென்றால், இந்த நாவலில், பொறா மையும், பிறர்க்கு துன்பம் தரும் உணர்ச்சியும் யாருக்குமே இல்லாமல் இருப்பதுதான். சேனிமாயி, கபாஹி, தரா இவர்கள் யாருடைய மனத்திலும் காதலின் பொறாமை தலைகாட்டவே இல்லை!

விசுவநாராயண சாஸ்திரி

# சூரியகாந்திப் பூவின் கனவு

*ஆறு பேசுகிறது*
*மிகப் பழைய சங்கதி*

சங்கதிகள் இரு கரைகளின் படுகைகளிலும் ஒட்டிக் கொண்டிருக்கின்றன. கரைகளில் புல் பூண்டுகள் ஒட்டிக் கொண்டு கிடக்கின்றன. காற்று வந்து வீசும்போது, அந்தப் புல்லிலும் பூண்டிலும் ஒட்டியிருக்கும் பழைய சங்கதிகளை எங்கோ எடுத்துச் செல்கிறது.

ஆயினும் அந்த சங்கதிகள் எங்கும் முடிந்து விடுவதில்லை.

தன்சிரி ஆற்றுக்கு மலைகளின் சங்கதிகள் தெரியும், மலையிடைப் பாதைகளின் சங்கதிகள் தெரியும். பசுமை நிறைந்த கிராமங்களின் கதைகள் தெரியும். மழைக்காலம் முடிந்தபின் நடப்பவை தெரியும், வறண்டு உலர்ந்த பருவத்தின் கதையும் தெரியும் அந்த ஆற்றுக்கு.

அந்த ஆற்றின் இதயத்துள் எத்துணையோ காலத்து சங்கதிகள் இருக்கின்றன. துன்பம், இன்பம், சிரிப்பு, அழுகை, பிறப்பு, இறப்பு எல்லாம் உண்டு அதில்.

தன்சிரி ஆறு காதலைப் பற்றிய சங்கதிகள் மிகப் பலவற்றையும் அறியும்.

சங்கதிகள் பழையன ஆகிவிடுகின்றன. ஆனால் ஆறு புதிது ஆகிறது. மழைக் காலத்து வெள்ளம் வறண்டு, வற்றிய பருவத்தின் வேதனையைத் துடைத்துவிடுகிறது. கதைகளும் புதியவை ஆகின்றன.

தன்சிரியின் கரையில் புதுக்கதைக்ள் தளிர்க்கின்றன.

அந்த ஆற்றின் கரையில் வறுமையுள்ள, முதுமையில் தேய்ந்த டாலிம் கிராமம் இருக்கிறது. அந்த கிராமத்தின் வாலிபப் பெண்கள் மற்றும் ஆண் மக்களின் உடம்பில், மாதுளம் முத்தின்

நிறத்தைப்போன்ற சிவப்புநிறத்தை முதல் முதலில் பார்த்தவன் யார் என்பது தன்சிரியாற்றுக்குத் தெரியும்.

வேறு யாருக்கும் இது தெரியாது.

எத்தனையோ நூற்றாண்டுகளாக இருந்துவரும் கிராமம்-ஆற்றின் கரையில் உள்ள பழுத்த கிழமான ஆலமரமும், அச்சம் தரும் சுடுகாடும் தான் அதன் சாட்சிகள். கிராமத்தின் கிழவர்கள் வாயிலிருந்து, பழைய காலத்தின் கதைகள் எழுதப்படாமலேயே சொல்லப்படுகின்றன. ஆற்றின் துறையில் ஆயிரக்கணக்கான வாலிபப்பெண்கள் மற்றும் ஆண்மக்களின் அழிந்த காலடிச் சுவடுகளின் நினைவுகள் உண்டு. எத்தனையோ ஆயிரம், லட்சம்.

கால் வலுப்பெற்றதும், குழந்தை எழுந்து நிற்கத் தொடங்கி விடுகிறது- உடம்பு மண்ணில் படும் தொடர்பு குறைந்துவிடுகிறது. ஆனால், மண் காலை எப்போதும் விடுவதில்லை. காலுக்கும் மண்ணுக்கும் உள்ள உறவு யுகம் யுகமாய் இருப்பது. அது எப்போதும் விடாது. மண்ணும் உள்ளங்காலும்....இணைபிரியா நண்பர்கள்.

தன்சிரி எனும் நதி மங்கை, நகா மலைப் பிராந்தியத்திலிருந்து இறங்கி வந்தவள். நாட்டியத்தின் மிடுக்குள்ள ஒரு நகா மங்கையின் இடையில் மிளிரும் லயம் போன்ற லயக்கட்டு தன்சிரியின் பரப்பிலும் இருக்கிறது. நகா மங்கையின் உதடுகளில் உள்ள இனிமையான சிரிப்பு-மிகவும் அழகான குரூரமான சிரிப்பு.

தன்சிரி சிரிக்கிறாள்.

பிரம்மபுத்திரனின் (மேற்கே ஓடுவதால், நதம் என்ற பெயரும் ஆண்பால் வழக்கும் உண்டு இந்த ஆற்றிற்கு) மடியில் ஓடிவிட்டாள். அவனுடைய தோளணைப்பில் எதைத் தேடிக் கொண்டு அப்படி ஓடினாளோ தெரியவில்லை. தங்கி நிற்க நேரமே இல்லை.

ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் போக மாட்டாயா.

ஒரு வார்த்தை கேட்டுவிட்டும் போக மாட்டாயா.

நிற்கமாட்டாயா.

நாட்டியத்திறம் படைத்த தன்சிரியின் இடையில், ஒரு தேவதை ஆவேசமாய்ப் புகுந்திருக்கிறது. அந்த ஆவேசம் புகுந்ததால் வந்த நாட்டியத்தின் லயம் இது.

தன்சிரி ஓடிக்கொண்டிருக்கிறாள். தெற்கிலிருந்து வடக்கே பாய்கிறாள். நகா மலைப் பிராந்தியத்திலிருந்து பிரம்மபுத்திரனை நோக்கி; அவளுக்கு டாலிம் கிராமத்தைத் தெரியும்; ரொம்ப நாளாய்த் தெரியும்.

கிழக்கே தன்சிரி, மேற்கே டாலிம். தன்சிரி நதியின் மேற்குக் கரையில் டாலிம் கிராமம் இருக்கிறது. எழுபது குடும்பங்கள் வாழும் ஒரு சிறிய பழைய கிராமம் அது. ஹிந்து, முஸ்லிம், நேபாளி முதலிய பலரும் க ந்து வாழும் கிராமம். ஆற்றின் கரைக்கு மிக அருகில் பதினெட்டு நேபாளி குடும்பங்கள் வசிக்கின்றன. அவர்களுடைய பசுமாடுகளும் எருமைகளும் கட்ட இருக்கும் கொட்டில்களும், மக்கள் வாழும் வீடுகளும் அங்கே இருந்தன. அங்கே அவர்கள் கரும்பும் சோளமும் பயிர் செய்கிறார்கள், பால் வியாபாரம் செய்கிறார்கள். மிளகாயும் பரங்கி பூசணிகளும் பயிர் பண்ணுகிறார்கள்.

அவர்களுடன் முப்பத்தேழு முஸ்லிம் குடும்பங்களும் அங்கே இருக்கிறார்கள். இரண்டு பகுதிகளாகப் பிரிந்து குடியிருக்கிறார்கள். புது டாலிம், பழைய டாலிம். ஆனாலும் கிராமம் ஒன்று தான். நெல், கடுகு, பயறு, சணல் முதலியன பயிரிடுகிறார்கள். ஆற்றின் மறு கரையில், கிழக்கே பருவகாலத்துக்குப் பயிர் ஏற்றுகிறார்கள்.

திருமணங்கள் செய்கிறார்கள். பெரிய விருந்து சாப்பிடுகிறார்கள். சண்டை சச்சரவு செய்கிறார்கள், பிறகு பேசாமல் கிடக்கிறார்கள். அதைத் தாண்டி வந்தால், பெரும்பாலும் ஹிந்துக் குடும்பங்கள். குயவர்கள் போன்ற ஜாதியைச் சேர்ந்தவர்கள். ஒரு பிராம்மண குடும்பமும் இருக்கிறது. எட்டுக் குடும்பங்கள் மிகிரர்களுடையன.

ஈசுவரன், அல்லா, கல், மரம் எல்லாவற்றுக்கும் பூஜை கிடைக்கிறது. இரண்டு மசூதிகளும் ஒரு கோவிலும் இருக்கின்றன. அந்தி நேரங்களில் ஈசுவரன் கிராமத்திற்கு வருகிறான்; ஹிந்து குடும்பங்களின் வீட்டு வாசலில் யாராவது ஒரு பஜனைப் பாட்டின் அடிகளை நீளமான குரலில் பாடுகிறார்கள். "இறைவா! பாவங்களைப் போக்கு, மாசுகளை அகற்று".

வெள்ளிக்கிழமைகளில் அல்லா மசூதிக்கு வருகிறார். யாரோ 'அல்லா ஹூ அக்பர்' என்று குரல் கொடுத்துத் தொழுகைக்கு அழைக்கிறார்கள்.

தண்சிரியில் வெள்ளம் வரும்போதும், காட்டு யானை ஊருக்குள் வரும் போதும், யார் வீட்டிலாவது தீப்பிடிக்கும் போதும் காலரா, வைசூரி போன்ற நோய்கள் யாவும் பரவும்போதும், அல்லாவும் ஈசுவரனும் சேர்ந்து வந்து விடுகிறார்கள் கிராமத்திற்கு. துளசிமாடத்தில் விளக்கு எரிகிறது. மசூதியில் மெழுகுவர்த்தி ஏற்றப்படுகிறது. ஆலமரத்தடியில், தலையில், குங்குமம் தரித்துக் கொண்டு காட்டுப் பூக்கள் உறங்குகின்றன.

மற்ற சமயங்களில் அல்லா, ஈசுவரன் எல்லார்க்குமே ஓய்வுதான்.

நன்செய் நிலம் குறைவுதான். தரிசு நிலம் போதுமான அளவு கிடைக்கிறது. கிராமத்தில் மேற்கிலும் கிழக்கிலும் அடர்ந்த காடு உள்ளது. பெரிய பெரிய மரங்கள் இருக்கின்றன. பாம்புகளும், புலிகளும், யானைகளும் இருக்கின்றன. காண்டாமிருகங்களின் பயங்கரமான கத்தல்கள் கேட்கும். இடையிடையே காட்டு ராஜாவான சிங்கம், கிராமத்திற்குள் வந்து கொட்டில்களிலிருந்து பசுமாட்டையோ எருமைமாட்டையோ கொண்டு போய்விடும். காட்டு யானை வந்து நிலங்களைப் பாழ்படுத்துவதும், வீடுகளை உடைத்துச் சரித்து விடுவதும் நடக்கும்.

கிராமத்திலிருந்து வெளியே போக நிர்ணயமான பாதை கிடையாது. கிராமத்தின் நடுவில், கிழக்கும் மேற்குமாக கிராமத்து ஜனங்கள் எப்போதோ போட்ட பழைய பாதை இருக்கிறது. அதுவும் ஆங்காங்கு சீர்கெட்டு அழிந்திருந்தது. அவர்கள் போகவும் வரவும் பாதை தேவையே இல்லை. மாடுகள் போனால் போதும், அவை எங்காவது திரிந்துவிட்டு ஆற்றின் கரைக்கு வந்து சேர்ந்தால் போதும், வேறு பாதையோ சாலையோ தேவை இல்லை அவர்களுக்கு.

கோலாகாட் நகரம், அங்கிருந்து முப்பத்திரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. கோர்ட்டில் ஏதாவது வழக்கு இல்லையென்றால், அந்த நகரத்துக்குப் போக அவசியமே கிடையாது அவர்களுக்கு. எப்போதுமா கோர்ட்டில் வழக்கு இருக்கப் போகிறது.

டாலிம் கிராமத்தின் துறையிலிருந்து ஆற்றைத்தாண்டி, அரை மைல்வரை சாலையில் ஆள் அரவமே இருக்காது. அதற்கப்பால் அக்கரையில் உள்ளம் கிராமம் இருக்கிறது. கிராமத்தின் நடுவில்,

சாலையிலிருந்து ஆறு மைல் போனால், பெரிய ரஸ்தா வரும். அதுதான் கோலகாட்-டிமாபுரம் ரஸ்தா. பஸ்ஸும் மோட்டார் களும் மாட்டு வண்டிகளும் போகும் சாலை அது. பெட்டிக்கடை வைத்திருக்கும் சந்திரகாந்தும், ரஹீமும் இந்தச் சாலையில்தான் பஸ் பிரயாணம் செய்து, தங்கள் கடைக்கு வேண்டிய சாமான்களை வாங்கிவருவார்கள். ஒரு டின் மண்ணெண்ணெய், பத்துபடி உப்பு, ஒரு கட்டு பீடி, கால் வீசை புகையிலை, சீட்டித் துணிகள் பல வண்ணங்களில் கொஞ்சம்.

டாலிம் கிராமத்தில் பஸ், மோட்டார், ரயில் ஏதும் கிடையாது. அதாவது எதுவும் போவதில்லை. இரண்டு மூன்று மாட்டு வண்டிகள் உண்டு.

அவர்கள் தலைக்கு மேலே விமானங்கள் பறந்து செல்வதால், அவற்றை அவர்கள் பார்த்திருக்கிறார்கள். ஆனால் ரயிலையோ மோட்டாரையோ அவர்கள் பார்த்ததில்லை. பெரிய வீடுகளைக்கூட அவர்கள் பார்த்ததில்லை.

கோலாகாட் நகரத்துக்குப் போய்விட்டு வந்து, சிலர் என்னென்னவோ அற்புதமான கதைகளைச் சொல்வார்கள். குழந்தைகளும் பெண்களும் அவற்றை ஆவலுடன் கேட்பார்கள். என்ன ஆச்சரியமான விஷயங்கள். முன்பின் கேட்டறியாத சங்கதிகள். பெண்பிள்ளைகள் விழிமலர்த்தி ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வார்கள். தாங்களே ஒரு தடவை போய் பார்த்துவிட வேண்டும் என்று தோன்றும் அவர்களுக்கு. ஆனால் அடுத்த கணத்தில் அந்த ஆவல் தணிந்து மறந்துவிடும். தங்கள் மண் அழைக்கிறது. தாங்கள் அறிந்த பிரியமான மண்ணின் அழைப்பு.

பழைய டாலிமுக்கும் புதிய டாலிமுக்கும் இடையில்தான், அந்தப் பழைய பள்ளிக்கூடம் இருக்கிறது. அது 'லோக்கல் போர்டு' இருந்த காலத்திலேயே ஏற்படுத்தப்பட்டது. கட்டிடத்தை ஊர்க்காரர்களே கட்டியிருந்தார்கள். கோவிலுக்குப் பக்கத்திலேயே பெரிய பெரிய கால்களை நட்டு அமைத்த விஸ்தாரமான இடம் அது. முன்பு இங்கு மபீஸ் பண்டிதர் என்பவர் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் அந்த கிராமத்தைச் சேர்ந்தவர்தான். அவருக்குப் பிறகு இப்போது ஜயராம் என்பவர்தான் வாத்தியார். பள்ளிக்கூடத்தில் ஆஜர்ப்

பட்டியலில் பதினாறு பதினேழு மாணவர்களின் பெயர்கள் இருக்கின்றன. பனிரண்டு பதிமூன்று உட்காரும் பலகைகளும் இருந்தன. ஆனால் ஆறு ஏழு குழந்தைகள்தான் வருவார்கள். இதைப்பற்றி ஐயராம் கவலைப்படுவதில்லை. எப்படியோ எழுத்துக்களை - அரிச்சுவடியைக் கற்றுக் கொண்டுவிட்டாலே போதுமே. டாலிம் கிராமத்துப் பையன்கள் வக்கீல், முன்சீப் வேலைக்கா போகப்போகிறார்கள்?

பள்ளிக்கூடத்தை மேற்பார்வை செய்ய இதுவரை யாருமே வந்ததில்லை. எப்பவோ ஒரு தடவை, கால் சட்டையும் தொப்பியும் போட்டுக் கொண்டு, டிப்டி இன்ஸ்பெக்டர் என்று யாரோ வந்தாராம். கிராமத்து ஜனங்கள் பயந்து நடுங்கி அவரவர்கள் வீட்டிற்குள் ஒளிந்து கொண்டார்களாம். மபீஸ் பண்டிதரே நடுங்கிப் போய்விட்டாராம்.

அதற்குப் பிறகு நாலைந்து மாதங்களுக்கொரு தடவை நகரத்திற்குப் போய், கல்வி அதிகாரிகளைப் பார்த்து, ஏதாவது காணிக்கை என்ற பெயரில் லஞ்சம் கொடுத்து, நாலைந்து நாள் தங்கியிருந்து தன் சம்பளப்பணத்தை வாங்கி வருவார். அந்தப் பணத்திலும் அத்தப் பரங்கி கொஞ்சம் கைமாற்று வாங்கிக் கொள்வான். அவருக்குத் தன் சம்பளப்பணம் ஏதோ தாசில்தாருக்குச் செலுத்தும் வரி மாதிரிதானே. சம்பளப்பணமும் கிடைக்கிறது. நாலுநாள் நகரவாசமும் கிடைக்கிறது.

தன்சிரி ஆற்றின் கரையில்தான் காட்டிலாகா காவற்சாலை இருக்கிறது. அங்கே அந்த இலாகா அதிகாரி வசிக்கிறார். அந்த வட்டாரத்தில் அவர்தான் பெரிய மனிதர். காக்கி நிஜார் போட்டுக்கொண்டு கையில் துப்பாக்கியுடன் சுற்றி வருவார் அவர்.

இந்த கிராமத்தில் மொத்தம் நான்கு துப்பாக்கிகள் இருக்கின்றன. பாபுகன், ஐயநார், பகாதூர், பிரேம்காந்த் ஆகிய நால்வரும் ஒவ்வொன்று வைத்திருக்கிறார்கள். ஐயநாரிடம் இருப்பது இந்த நான்கிலும் உயர்ந்தது. அது இரட்டைக்குழல் துப்பாக்கி.

கிராமத்து வாலிபர்கள், துப்பாக்கியைவிட அரிவாள், கொடுவாள், ஈட்டி ஆகியவற்றையே பெரிதும் விரும்பிக் கையாள்வார்கள். நேபாளிகாரர்களுடைய கைவாளின் சுவையைப்

பல சிங்கங்கள் அறிந்திருந்தன; ஆயினும் துப்பாக்கியிருப்பது ஊரில் ஒரு கௌரவம் தரும் விஷயம்.

எங்கேயாவது, எப்போதாவது சிவப்புக் குல்லாயும் காக்கி உடையும் அணிந்து போலீஸ்காரர்கள், இருவரோ மூவரோ வருவார்கள். ஊர்க்காரர்களுக்குப் போலீஸ் என்றாலே குலை நடுங்கும். பிடித்துக்கொண்டு போய்விட்டால் என்ன செய்வது? ஆகவே ஊருக்குள் போலீஸ் வருவதே அவர்களுக்குப் பிடிக்காது. யாருக்கும் எந்தவிதமான வழக்கோ, சச்சரவோ கிடையாது. அப்படியே ஏற்பட்டாலும் வாதி பிரதிவாதி இருவருமே லஞ்சம் கொடுத்து, அவசரம் அவசரமாக போலீசை வெளியே அனுப்பிவிடுவார்கள்.

ஊருக்குள் போலீசு வருவதும், புலி வெளிப்படுவதும் அவர்களுக்கு ஒரே மாதிரி விஷயம்தான். புலியையாவது விரட்டி விடலாம், போலீசை என்ன செய்வது!

எவனாவது போலீசை ஊருக்குள் அழைத்து வந்து விட்டால், அவனை ஜனங்கள் மிகவும் வைவார்கள். போலீசு வந்துவிட்டால் கிராமத்தின் கௌரவம் போய்விடாதோ. அவர்கள் தங்களுக் குள்ளே பஞ்சாயத்துப் பேசி, வழக்குகளைத் தீர்த்துக்கொள்ள முடியாதா என்ன? இப்படியே தலைமுறைகள் கழிந்துவிட்டன.

சண்டையேதான் கிடையாதே.

போலீசின் பூட்ஸ் சுவடுகள் தன்சிரியின் மார்பில் பட்டதில்லை. ஆற்றின் கரையில் இருக்கும் இலவ மரத்தின் பூக்கள், சிவந்த நிறத்தில் பூத்துக் குலுங்கிய வண்ணமிருக்கின்றன. அந்தச் சிவப்பைக் கண்டு போலீஸ் சிவப்பை மக்கள் மறந்து விடுவார்கள்.

நகரத்திலிருந்து மிகவும் தூரமில்லை; ஆயினும் தூரந்தான். இந்த யுகத்தின் மனிதன்தான்; ஆயினும் மிகவும் பழைமை யுடையவன். சூரியனின் தங்கு தடையில்லாத வெளிச்சம் அந்த ஊருக்கு ஒளியூட்டத்தான் செய்கிறது; ஆனாலும் டாலிம் கிராமத்தில், நெருக்கமான காட்டின் ஆதிகாலத்து இருட்டு கவிந்திருந்தது.| ஆண்டின் முடிவில் ஆண்டும் மாறும்; ஆனால் டாலிம் கிராமத்தில் எத்தகைய மாறுதலும் ஏற்படாது. அந்த கிராமம் இன்னுமொரு வருஷம் பழையதாகும்; அவ்வளவுதான். காலத்தின் மாறுதலுக்கு வெகு தொலைவில் அந்த கிராமம் அசைவற்றுக் கிடக்கிறது.

தேர்தல் நாட்களில்கூட அந்த ஊருக்கு அரசியல் வருவதில்லை. தேர்தலுக்கு நிற்கும் வேட்பாளரின் ஏஜெண்ட் ஒருவன் வருவான். படித்துத் தெரிந்து கொள்ள முடியாத அச்சிட்ட காகிதங்கள். கிராமத்திலுள்ள கெட்டிக்காரர்களான சில கிழவர்கள், வேட் பாளர்கள் அனைவரிடமிருந்தும் பணம் வாங்கித் தின்பார்கள். ஓட்டுப்போடும் நாளில் பக்கத்துக் கிராமங்களில் திரிந்து கொண்டிருப்பார்கள். ஓட்டுப் பெட்டி நாள் முழுவதும் வழி பார்த்துக் காத்திருக்கும். அந்தியில் காலிப்பெட்டி நகருக்குப் போகும். டாலிம் கிராமத்தின் ஓட்டு இல்லாமலேயே எவனாவது ஜயிப்பான், பெரிய மனிதன் ஆவான். எவனாவது தோற்றும் போவான்.

தோற்றால் என்ன ஆகும்-யாருக்கும் இதுவும் தெரியாது.

ஊருக்கு மேற்கே காட்டில் பெரிய பெரிய குளங்கள் உண்டு. அவற்றில் பெரிய பெரிய மீன்களும் ஆமைகளும் கிடக்கின்றன. டாலிம் கிராமத்தில் எவனுமே வெறும் சாப்பாடு தின்னவேண்டிய அவசியமில்லை. தூண்டிலை எடுத்துக்கொண்டு போனால், ஒரு கூடை மீன் பிடித்துக் கொண்டு வரலாம்.

தன்சிரி ஆறும் மீன்களைத் தன் வயிற்றில் ஒளித்துக் கொள்வதில்லை.

## இரண்டு

பொழுது எத்தனை போயிருக்கும் தெரியவில்லை. மாலை நேரம் ஆகியிருக்கும் என்று தோன்றுகிறது. உடம்பு மிகவும் கனமா யிருக்கிறது. நேற்றுக் காலையிலிருந்து மழை பெய்கிறது - பெரு மழை. டாலிம் கிராமத்தில் மழை பெய்யத் தொடங்கினால் இலேசில் விடுவதில்லை. பாதையும் சாலையும் அழிந்துபோகும். வீடு வாசல்களெல்லாம் நனைந்துவிடும். மாடுகள் மிகவும் கஷ்டப்படும். குழந்தைகள் வீட்டை விட்டு வெளியே போக் முடியாது. வாலிபப் பையன்களும் பெண்களும் வெளியே போய் வராவிட்டால், குடும்பக் காரியங்கள் எப்படி நடக்கும்?

குலச்சு ஒரு தடவை மேற்குவானத்தைப் பார்த்தான். மேகங்கள் கவிந்து கிடந்தன. இன்னும் ஏழு நாட்களுக்கு மழைவிடாது. வீட்டுக்கரையை முன்பே சீர்செய்துவிட வேண்டியிருந்தது. வீட்டிற்குள் ஒரே தண்ணீர்க் காடாகியிருக்கும். கரையைச்

சீர்செய்திருக்கலாம் சுலபமாக, ஆனால் அதற்கு நேரமே கிடைக்கவில்லை. வீட்டிற்கு வெளியே, படுகை நிலத்திலேயே அவன் எப்போதும் இருக்க வேண்டியிருந்தது.

எல்லாரும் சொல்வார்கள் - அவன் ஒரு கிறுக்கன் என்று. வெளியில் போனால் திரும்பிவரும் எண்ணமே இருப்பதில்லை அவனுக்கு; எங்காவது உட்கார்ந்தால் உட்கார்ந்ததுதான். எழுந்திருக்கவேண்டும் என்று தோன்றுவதே இல்லை அவனுக்கு.

இந்தப் பேச்சு முழுதும் பொய்யென்று சொல்ல முடியாது.

அவனுடைய தாயாரும் இதற்காக அவனை வைது திட்டிக்கொண்டேதான் இருப்பாள்.

தன் தாயைப்பற்றி அவன் கவலைப்படுவதில்லை. அவனிடம் அவனுக்கு அவ்வளவாகப் பிரியமும் கிடையாது. அவள் மிகவும் வயது சென்ற கிழவியும் இல்லை. ஐம்பது வயதிருக்கும் அவளுக்கு. நல்ல வகையான உணவும் மற்றதும் கிடைத்திருந்தால், அவளும் இளமையாகவே இருந்திருப்பாள்; ஆனால் வாழ்நாள் முழுவதும் துக்கத்திலேயே கழித்தவள் அவள். சுண்ணாம்புக்காரரை வீட்டில் குலச்சின் தாயார் தனியாக இருக்கிறாள். அந்த வீடு ஊரின் நடுவில் இருந்தது. ஆகவே எந்த பயமும் கிடையாது. எப்போதாவது அவளுடைய மகளும் வந்து நாலைந்துநாள் தங்கிவிட்டுப் போவாள். திருட்டு பயம் அறவே கிடையாது. வீட்டிற்குள் எந்த சாமானும் கிடையாது. பழைய ஒரு பெட்டியில் இரண்டு சாதாரணமான சாமான்கள் ஏதோ இருந்தன.

அவர்களுடைய சொத்துக்களானவை நான்கு கறவைப் பசுக்கள், சில ஆடுகள், சில பெட்டைச் சேவல் கோழிகள் ஆகியவையே. இவற்றில் சிலவற்றை நரிகள் கொண்டு போயிருக்கலாம்... யாருக்குத் தெரியும்? கொண்டு போகட்டும், அதனால் என்ன? நாய்களும் நரிகளும் கிராமத்து ஜனங்களுடைய உடைமைகளைத் தவிர, வேறு எதைத்தான் தின்பது?

தன் மனத்திற்குள் இதைப்பற்றி நினைத்துப் பார்த்துக் கொண்டே, தன் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான் குலச். அவன் பிடித்துக் கொண்டிருந்த அந்த ஓலைக்குடை, மழையிலிருந்து முழுப் பாதுகாப்புத் தரவில்லை. பாதை முழுவதும் முழங்கால்வரை சேறும் உளையும். அந்தச் சேற்றுக்கறை அவன் உடம்பு முழுவதும் தலை வரை படிந்திருந்தது. ஆனால் இது



அவனுக்குப் புதியதில்லை. மிகவும் பழக்கமான சங்கதி- வெய்யில், மழை, சேற்றையெல்லாம் கண்டு பயப்படுகிறவனே இல்லை அவன்- இவற்றிலேயே ஊறித்தான் அவன் பெரியவன் ஆகியிருந்தான். தன் இருபத்தி மூன்று வயது வாழ்நாளில், அவன் டாலிம் கிராமத்தின் சேற்றுத் தண்ணீரை நன்கு அறிந்திருந்தான். அது அவனுக்கு மிகவும் பிடித்தும் போய் விட்டிருந்தது.

வீட்டிற்கு வெளியே நனைந்தாலும் பரவாயில்லை; வீட்டிற்குள்ளும் நனைவது என்பது அவ்வளவு சரியில்லை. சில சமயம் அவன் தூங்கும்போது, அவன் தலையணையே தண்ணீரில் ஊறி விடுவதுண்டு. அப்போது அவனுக்கு மிகவும் கோபம் வரும். மறுநாளே கூரையைப் பிரித்து வேலை செய்யவேண்டுமென்று நினைத்துக் கொள்வான். கிராமத்தில் உள்ள போக்கிரி எவனையாவது வைவதுபோல, மேகத்தையும் மழையையும் வைது தீர்ப்பான்.

அவனுடைய தாயார் தூங்குவது போல் பாசாங்கு செய்துகொண்டு, கண்களை மூடிக்கொண்டு படுத்திருப்பாள். விடிந்ததும் அவன் ஒன்றும் செய்ய மாட்டான் என்பது அவளுக்குத் தெரியும். தன் உடம்பில் தண்ணீர் கொட்டியதையே அவன் மறந்துவிடப் போகிறான். நாளைக்கு மழை நின்றதும், கூரை தண்ணீர் கொட்டுவதை அடியோடு மறந்துவிடப்போகிறான்.

குலச்சுக்கும் இது தெரியும்.

எப்போதாவது புலி வந்து, கொட்டிலிலிருந்து பசுவையோ, காளையையோ கொண்டு போய்விடுவது உண்டு. அப்போது அந்தப் புலியின் பதினாலு தலைமுறைகளை இழுத்து வைவான் குலச். உடனே சத்தம்போட்டு நாளைக்கே ஜயநாரிடமிருந்து துப்பாக்கியை வாங்கிக் கொண்டு வந்து, புலிகளை அடியோடு அழித்துவிடப் போவதாக அறிவிப்பான்.

ஆனால் அவன் ஒரு நாள்கூடத் துப்பாக்கியைத் தூக்கிப் பிடித்தது கூடக்கிடையாது. மறுநாள் காலையில் அந்தப் புலியிடம் அவனுக்குக் கருணை பிறந்துவிடும். "போகட்டும் போ- ஒரு மாட்டைத்தானே கொண்டுபோயிற்று. நம்முடையதைக் கொண்டு போகாமல், வேறு யாருடையதைக் கொண்டு போகும் அது? என்ன இருந்தாலும் அது புலிதானே? புலி புல்லையா தின்னும்?" என்று தன் தாயாரிடம் சமாதானம் சொல்வான்.

குலச்சின் தாயார் தனக்குத்தானே ஏதோ முணுமுணுத்துக் கொள்வாள்; கொட்டிலில் இருக்கும் மாடுகளை, இப்படிக் காட்டுப் புலிகளுக்குத் தின்னக் கொடுப்பது பற்றி அவன் சொல்லும் சமாதானம் அவளுக்குப் புரிவதில்லை.

அவன் எத்தனையோ புலிகளைப் பார்த்திருக்கிறான். விறகு வெட்டுவதற்காக அவன் காட்டுக்குப் போகும் வேளைகளில் புலிகளையும், சிறுத்தைகளையும் பார்த்திருக்கிறான். புலி பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருக்கும். அதன் உடலைத் தடவிக் கொடுத்து, அன்பு செய்யவேண்டும் என்றுகூட ஆசை தோன்றும். சிறுத்தையின் உடல் நிறம் கண்ணுக்கு மிகவும் நன்றாயிருக்கும். சிறுத்தைக்குப் புலி பயப்படுவதில்லை. சிறுத்தையும் புலியைக் கண்டு பயப்படுவதில்லை. புலி மாடுகளைத்தான் தின்னும்; மனிதர்களைத் தின்பதில்லை. புலியிடம் குலச்சுக்கு மிகுந்த சிநேகம்.

அக்கரையின் நிலத்திருந்து அவன் வந்தான். வயலில் தெளித்த பயிர்களும் நெற்பயிரும் இருந்தன — மற்றவர்களுடன் போய், அவனும் அக்கரையில் சில புதிய நிலங்களைப் பயிரிட்டிருந்தான்; அவனுடைய சொந்த நிலம். அந்தப் பக்கம் தன்சிரியின் கரை சற்றே மேட்டுப் பாங்கு. பெரிய வெள்ளம் வந்தாலொழிய பயப்படத் தேவையில்லை. அப்படியே வெள்ளம் வந்தாலும், வண்டல் சேர்ந்து நிலத்தின் விளைவை அதிகப்படுத்திவிட்டுப் போகும். ஆகவே வருத்தப்படத் தேவையில்லை.

ஆற்றைத் தாண்டியதும் குலச் சற்று நின்றான். திரும்பிச் சுற்றித் தன் வயலை ஒருமுறை பார்த்தான். நிலம் கண்ணுக்குத் தெரியவில்லை. வெகு தூரம் வந்து விட்டிருந்தான். மழை வேறு பெய்கிறது. சூரியனும் மறையத் தொடங்கியிருந்தான். மழையின் நடுவில் வெகுதூரம் பார்க்க முடியாது. தன் நிலத்தை நினைத்ததும் அவனுக்கு மிகவும் சந்தோஷமாய் இருந்தது. நல்ல விளைச்சல் தரும் பூமி அது.

திடீரென்று அவன் பார்வை ஆற்றின் மேல் விழுந்தது. அவன் தடைப்பட்டு நின்றான். மழையின் வெள்ளைத் திவலைகள் இடைவிடாமல் தண்ணீரில் விழுகின்றன. பார்ப்பதற்கு மிகவும் வசீகரமாயிருந்தது. ஜலத்தின் மீது ஜலத்தின் திவலைகள் விழும்போது குமிழிகள் தோன்றுகின்றன. வெண்மையான

மெல்லிய குமிழிகள். ஆற்றின் நீர் சுத்தமானது. அநேகமாய் கருப்பாயிருக்கும் அது. அதன்மேல் மேகங்களின் வயிற்றிலிருந்து மழைநீரின் வெள்ளைக் குமிழிகள் இறங்கி வந்திருக்கின்றன.

ஓர் இனிமையான சத்தம். மரங்களின் இலைகளின் மீது தண்ணீர் விழும்போது ஏற்படும் சத்தத்திற்கும், தண்ணீரின்மீது மழை விழுகின்ற சத்தத்திற்கும் ஒரு தொடர்பும் இல்லை. இனிமையான மெல்லிய சத்தம் இது.

சிறிது நேரம் கரையில் நின்று, அவன் தண்ணீரின் விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தான். மழையின் சோவென்ற ஒலி, ஆற்றின் நடுவே எதிரொலித்தது. அவனுக்கு அது மிகவும் பிடித்திருந்தது. தண்ணீரின் அழகான குமிழிகள், அவனுக்குச் சொந்தமானவைபோல் பிரியமாயிருந்தன.

சற்றே இருட்டியதும் அவன் திரும்பி வீட்டை நோக்கி நடந்தான். ஆற்றில் மழை விழும் காட்சி பார்க்க மிகவும் அழகாயிருக்கிறது. ஏதோ ஒரு மகிழ்ச்சியினால் குலச்சின் மனம் நிறைந்து வழிந்தது.

சேற்றிலிருந்து ஒரு புதிய மணம் உண்டாகிறது. சாலையின் ஓரங்களில் உள்ள மரங்களின் இலைகளிலிருந்தும் பழக்கமான ஓர் உயிருள்ள மணம் வீசுகிறது. புல்லும் புதரும் நிறைந்த காட்டின் பழக்கமான ஆதிகாலத்து மணம்.

குலச் நிற்கவில்லை.

மழைக்காலத்து இரவு. இருட்டு அதிகமானால் புலியின் பயம். பிராணிகளைத் தேடிக்கொண்டு வந்த புலிகளுக்கு, இவன் இரையாகிவிட்டால் என்ன ஆகும். ஆனாலும் அவன் கையில் உடைவாள் இருக்கிறது. பயப்படக் காரணம் இல்லை. தவிரவும் பழுத்த சீனி வாழைச்சீப்புகள் இரண்டு அவன் தோளில் கிடந்தன.

அவன் ஒரு வாழைப்பழத்தை உரித்துத் தின்றான். அது அவ்வளவு இனிமையாய் இருக்கவில்லை. வேறொன்றை எடுத்துத் தின்றான்.

அவனுக்குத் தன் குடும்பத்தின்மீது அப்படியொரு பாசமும் பந்தமும் கிடையாது; ஆனால் அவன் தன் வீட்டுக்குப் போகாமல் வேறு எங்குதான் போவான்? அந்த வீடு தொத்தலோ பொத்தலோ

அவனுடைய சொந்தவீடு. அங்கே அவனுடைய தாயாரும் இருக்கிறாள்.

சேறாகிக் கிடந்த பாதையில் அவன் தன் கால்களைப் பெயர்த்துப் பெயர்த்து வைத்து மெல்ல மெல்ல முன்னேறினான். வீட்டுக்குப் போக இன்னும் சற்றுதூரம் இருந்தது. ஒரு மைல் இருக்கும் இன்னும். மழையின் இடையில் அவன் மனம் எங்கோ பறந்து சென்றது. அடிக்கடி அவனுக்கு சேனிமாயியின் நினைவு வந்துவிடுகிறது. வயலில் மண் வெட்டும்பொழுதும், வீட்டுக் கூடத்தில் உட்கார்ந்து எதையாவது எண்ணிக் கோட்டை கட்டும்போதும், திடீரென்று சாலையில் நடக்கும்போதும் அவனுக்கு அவளுடைய நினைவு வந்துவிடுகிறது. அவள் நினைவு வந்ததும் அவனுடைய மனம் பாரம் சுமப்பதுபோல் ஆகிவிடுகிறது.

சேனிமாயி பழைய டாலிம் கிராமத்துப் பெண். பார்ப்பதற்கு அவள் அவ்வளவு அழகியில்லையென்றாலும், அவள் பருமனும் வாளிப்பும் உள்ளவள். அவளுடைய தந்தை மிகவும் சுதந்திரமானவன். அவளும் சுயேச்சையான இயல்புடையவள் தான்; ஏதாவதொரு வேலைக்காக குலச் பழைய டாலிமுக்கும் போவான். சில வீடுகளில் உட்கார்ந்து வெற்றிலை பாக்கும் போட்டுக்கொண்டு, அளவளாவிவிட்டு வருவான். அந்த வியாஜத்தில் ஊரிலுள்ள வயது வந்த பெண்களைப் பற்றியும் தெரிந்து கொள்வான்.

இதே மாதிரித்தான் அவனுக்கும் சேனிமாயிக்கும் பரிச்சயம் ஏற்பட்டது. அவளுடன் பேசிக்கொண்டிருந்த பிறகு, அவனுக்கு அவளை மிகவும் பிடித்துவிட்டது. சேனியும் அவனிடம் நட்புக்கொண்டவள் ஆனாள். அந்த நட்பு ஆழங்கொள்ள ஆரம்பித்தது.

குலச்சின் பொருளாதார நிலை அப்போது அவ்வளவு நல்ல நிலையில் இருக்கவில்லை. ஊர் அறிய அவளைக் கல்யாணம் செய்துகொண்டு அழைத்துவர அவனுக்கு வழியில்லை. அவளை அவனுக்குக் கல்யாணம் கட்டிக் கொடுப்பார்கள் என்ற நம்பிக்கையும் இல்லை.

சமயம் வாய்த்தபோது, ஒரு நாள் சேனியுடன் ஓடிவிடவேண்டும் என்று திட்டமிட்டான். சேனியும் தயார் ஆகிவிட்டாள். டாலிம் கிராமத்தில் பெண்கள் யாருடனாவது ஓடிப்போவதும்,

பலாத்காரமாக மணம் செய்து கொள்வதும் புதிய சமாசாரமில்லை. பெண் அதை ஒப்புக் கொள்ளவேண்டும்; அதுதான் முக்கியம். இரண்டு வருஷங்களுக்குமேல்- ஏன் மூன்று வருஷங்களும் ஆகிவிட்டன. அன்றும் இப்படித்தான் ஒருநாள் நல்ல மழை பெய்யும் நேரத்தில், அவன் சேனியின் வீட்டுக்கு வந்தான். அவள் சமையலறையில் ஏதோ செய்துகொண்டிருந்தாள். பாத்திரங்களின் ஓசையைக்கேட்டுச் சுவர் இடுக்கு வழியாக குலச் எட்டிப் பார்த்தான். அப்போது சேனி தனியாக இருந்தாள் அங்கே. வேறு யாருமே இல்லை. அவன் சுவரைத் தட்டி ஜாடை செய்தான். அவளும் வெளியே வந்தாள்.

இருவரும் அன்று அப்போதே ஓடிப்போய்விட்டார்கள்.

அப்புறம் என்ன ஆகும்?

மறுநாளே கிராமத்தில் ஒரே அமர்க்களம். இந்திரநேபாலியின் மாட்டுக்கொட்டிலில் இருவரும் பிடிபட்டனர். விசாரணை நடந்தது. "நடந்தது நடந்துவிட்டது. ஆணும் பெண்ணும் சம்மதித்துத்தான் நடந்திருக்கிறது. சரி, கல்யாணம் செய்து கொள்ளட்டும்" என்று தீர்ப்பளித்தார்கள் கிராமத்து ஜனங்கள்.

குலச்சின் அப்பன் கோபத்தில் நெருப்பைக் கக்கினான். ஓடிப்போன பெண்ணை மருமகளாக்கிக்கொள்ளவோ வீட்டுக்குள் அழைத்து வரவோ எந்த ஆண் பிள்ளைக்குத் துணிச்சல் இருக்கும்? "ஆ, அப்படியே கண்டதுண்டமாய் வெட்டிப்போட்டு விடுவேன்" என்று சொல்லிக் கத்தியைக் காட்டினான் அப்பன்காரன்

"என் மகளைக் கூட்டிக்கொண்டு ஓடிப்போக இத்தனை துணிச்சலா? நான் மட்டும் இப்படிப்பட்ட ஆளாக இருந்தால், அப்போது காட்டுவேன்.., என் பெண் மேல் எவனாவது கையை நீட்டினால்.." சேனிமாயின் சித்தப்பனான ஸபீயத் இப்படி அழுத்தமாக ஏதோ சொன்னான். அதற்குமேல் யாருக்கும் எதுவும் சொல்லத் தைரியம் வரவில்லை. ஸபீயத் இன்னொருவர் சொல்லிக் கேட்பவன் இல்லை.

கல்யாணம் நடக்கவில்லை. குலச்சும் எதுவும் செய்ய முடியாதவன் ஆனான்.

சேனிமாயி அழுதுகொண்டு தன் அப்பனோடு போய்விட்டாள் மறுநாள் குலச்சின் அப்பன், அவனைத் தன் வீட்டிலிருந்து

வெளியே துரத்திவிட்டான். "என் பிள்ளையாயிருந்தே என்னை அவமானத்திற்கு ஆளாக்கிவிட்டாய்; என் வீட்டில் உன் நிழல்கூடப்படக்கூடாது. அப்படிப்பட்டால் வெட்டித் துண்டாடி விடுவேன். போ; எங்கே போய்ச் சாகவேண்டுமோ அங்கே போய்ச் செத்துமடி. என் சொத்திலிருந்து உனக்கு ஒரு துளிகூடக் கிடைக்காது" என்றான் குலச்சின் அப்பன். குலச்சின் தாயார் மகனுக்காகப் பரிந்து பேசினாள்; அதனால் அவளையும் வீட்டைவிட்டு வெளியேற்றிவிட்டான் அந்தக் கிழவன்; அவனுடைய மூத்தமகனும் அவன் மனைவியும் கிழவனுடன் இருக்கிறார்கள். இதைத்தவிர, இன்னொருத்தியும் கிழவனுடன் இருக்கிறாள். குலச்சும் அவனுடைய தாயாரும் வீட்டைவிட்டுப் போய்விட்டதால், கிழவனுக்கு ஒரு நஷ்டமும் இல்லை. யாரோ விட்டுப்போன ஒரு பாழடைந்த வீட்டின் கூரையையும் சுவர்களையும் சேர்த்து ஒட்டவைத்து, புதிதாய் ஒரு வீட்டை ஏற்பாடு செய்துகொண்டான் குலச். "சாகும்போதுகூட என்னைத் தேடக்கூடாது. நான் எப்போ அந்த வீட்டைவிட்டு வெளியே வந்து விட்டேனோ இனி அங்கு காலடிவைக்கமாட்டேன்" என்று தன் அப்பன் காதில் விழும்படி சொல்லிவிட்டான் குலச்.

அம்மாவும் மகனும் அப்பனிடமிருந்து பிரிந்து வந்துவிட்டார்கள்; இன்றைக்கும் அப்படியேதான் இருக்கிறார்கள். மூன்று வருஷம் முடியப்போகிறது. மகனுக்கும் தந்தைக்கும் பேச்சு வார்த்தை கிடையாது. முகாலோபனம்கூட இல்லை. ஒருவரை ஒருவர் சந்திக்க நேர்ந்தால்கூடப் பார்க்காமல் போய்விடுவார்கள்.

குலச்சின் அம்மாவிடம் யாராவது, "வீடென்றால் ஏதோ சண்டை சச்சரவு இருக்கத்தான் இருக்கும், அதற்காக உன் வீட்டையும் வாசலையும் விட்டுவிட்டு, இந்தப் பித்துக்குளிப்பயல் குலச்சுடன் எப்படி இருப்பாய்? அது உன் வீடு உன்னை யார் தடுக்கமுடியும்; பேசாமல் பிள்ளையை அழைத்துக்கொண்டு அங்கேயே போ" என்று சொல்வார்கள். அப்போதெல்லாம் அவளுக்குக் கோபம்தான் வரும். "அந்தச் சக்களத்தியுடன் குடித்தனம் செய்யப்போவேனா நான்? பெரிய பட்டத்தரசியையல்லவா கொண்டுவந்து வைத்துக் கொண்டிருக்கிறார் அவர். பெத்த மகனை வீட்டைவிட்டுத் துரத்தும் மனுஷனோடு குடும்பம் நடத்த முடியுமா? மானத்தை வெட்கத்தை விட்டவளல்லவா அங்கே போவாள்" என்பாள் அவள்.

ஊரிலுள்ள நாலுபேர் கூடிக் குலச்சின் அப்பனிடம் எடுத்துச் சொன்னார்கள். பெண்டாட்டியையும் பிள்ளையையும் மறுபடி அழைத்துக் கொள்ளும்படி அறிவுறுத்தினார்கள். ஆனால் அந்தக் கிழவன் தன் பிடிவாதத்தை விடவில்லை. "நான் போய் அவர்களை அழைக்க வேண்டுமோ? தானே வந்தால் வரட்டுமே. என் வீட்டுக் குப்பை மேட்டில் நிறைய இடம் இருக்கிறது." என்று எக்காளம் செய்தான் அவன்.

குலச்சும் மிகவும் பிடிவாதமாகவே இருந்தான். என்ன ஆனாலும் சரி, தன் உயிருள்ளவரைக்கும் அப்பன் வீட்டில் அடியெடுத்து வைப்பதில்லை என்று அழுத்தமாயிருந்தான் அவன்.

தன் தாயார் தன்னைவிட்டு விட்டு, அப்பன் வீட்டுக்கு போய்விட்டால்கூட நல்லதுதான் என்று நினைத்தான் குலச். அவள் அப்படிப்போய்விட்டால், அவனுக்கு வீட்டில் எந்தத் தடையும் இருக்காது. அவன் முற்றிலும் சுயேச்சையாக நடக்கலாம்; ஆனால் அவன் தன் தாயிடம் இதைச்சொன்னதே இல்லை. அத்துடன், "அங்கே போகாமல், இங்கே பசியால் செத்தாலும் அங்கே நீ போகக்கூடாது. உன் மூத்த பிள்ளைக்கும் மருமகளுக்கும் உன்னிடம் ஆசையில்லை; அப்படியிருக்கும்போது நீ மட்டும் அவர்களைப்பற்றி ஏன் நினைக்கிறாய்? தலையெழுத்தா உனக்கு?" என்று கேட்டான் குலச்

குலச்சின் தாயாரும் டாலிம் கிராமத்தைச் சேர்ந்தவள்தான். உழைக்காமல் சாப்பிடத் தெரியாது அவளுக்கு. ஐந்து வயதுப் பிராயம் முதலே அவள் வயல் வேலை, வீட்டு வேலைகள் செய்து வயிறு வளர்த்தவள். வேலையைக் கண்டு அவள் அஞ்சமாட்டாள். உடல் வலிமையும் ஆரோக்கியமும் சரியாக இருந்துவிட்டால், எப்போதும் அவளுக்கு ஓய்வில்லை. அவள் பிச்சையெடுக்க மாட்டாள். வேலை செய்து வாழ்க்கை நடத்துவாள்.

அவள் தன்கூட இருப்பதால்தான், குலச்சுக்கு வீட்டுக் கவலையே இல்லாதிருந்தது. அவள்தான் அவனுடைய மாடுகளையும் கோழிகளையும் பார்த்துக்கொண்டாள்.

குலச் ஊருக்கு வெளியில் வயற்காட்டில் பல நாட்கள் தங்கிவிட்டால், அவன் மனத்தில் அம்மாவைப்பற்றிக் கவலை தோன்றும். வீட்டில் உப்பு, புளி இருக்குமா? அரிசி ஏதாவது

இருக்கிறதோ இல்லையோ? திருடர்களின் தொந்தரவும் நேர இடமுண்டு-என்றெல்லாம் அவன் கவலைப்படுவான்.

வயற்காட்டில் அவன் தங்கியிருக்கும்போது வீட்டு நினைவு வந்துவிட்டால், குலச் உடனே புறப்பட்டு வந்துவிடுவான். அப்போதெல்லாம் அவன் குளிரையோ, வெய்யிலையோ பொருட்படுத்தமாட்டான். அந்த நேரத்தில் அவனுக்குத் தன் தாயாரிடம் அன்பு பொங்கி வழியும்.

இருட்டிவிட்டது.

மழை விடவில்லை. வானத்தில் சந்திரன் இருந்தது; ஆனால் அதை மேகம் மறைத்துவிட்டிருந்தது. ஊகத்தால் நடந்து முன்னேறினான் குலச். அவனுக்கு அவன் உடம்பே கனத்தது. கிராமத்தில் சூரியன் மறைந்த உடனேயே இரவு வந்துவிடும். வீட்டிற்குப் போக இன்னும் அதிக தூரம் இருக்காதென்று ஊகித்து அறிந்தான். ஒரு திருப்பத்தைத் தாண்டியதும் வீட்டை அடைந்துவிடலாம்.

திடீரென்று அவன் நின்றான். ஏதோ யோசித்தான். பிறகு வலதுபுறம் திரும்பிக் காலை எடுத்து வைத்தான். தன் வீட்டை நோக்கி இல்லை. தராவின் வீட்டை நோக்கி.

## மூன்று

மூன்று அறைகளைக்கொண்ட வைக்கோல் கூரை வேய்ந்த வீடு அது. அந்த வீட்டின் முன் கூடம் மிகச்சிறியதுதான்; ஆனால் பெருக்கி மெழுகிச் சுத்தமாயிருந்தது. அதை மிகவும் துப்புரவாக வைத்திருக்கிறார்கள். எந்த இடத்திலும் தண்ணீர் தேங்காது. வீட்டின் முன்புறத்தில் மாட்டுக்கொட்டில். அதில் மூன்று கறவைப் பசுக்கள் கட்டியிருக்கின்றன. கதவின் அருகில் வாசல்படியிலேயே ஒரு கறுப்புநாய் தூங்கிக் கொண்டிருந்தது. வீட்டில் யாருடைய குரலும் கேட்கவில்லை. வீட்டிற்குள் எரியும் அகல் விளக்கின் வெளிச்சம், கதவின் இடுக்கு வழியாகத் தெரிந்தது.

அப்பொழுது கூரையிலிருந்து மழைத்தண்ணீர் தட்தட்டென்று தரையில் விழுந்து கொண்டிருந்தது.

குலச் சிறிது நேரம் வாசலில் நின்றிருந்தான். உள்ளே யார் இருக்கிறார்கள் என்று அநுமானம் செய்துகொண்டான்; பிறகு கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்தான்.

"யாரது?" என்று உள்ளிருந்து யாரோ கேட்டார்கள்.

"நான்தான்; அக்கா இருக்கிறாளா?"

"யார், குலச்சா, சரி, இதோ வருகிறேன். உட்கார்" உள்ளிருந்து வெளியே வந்தவள் யார் தெரியுமா? தரா இல்லை, அவளுடைய சித்தி கபாஹிதான்.

"சொட்ட சொட்ட நனைந்துகொண்டு, எங்கிருந்து இந்த இரவு வேளையில் வந்து சேர்ந்தாய்?"

"வயல்காட்டிலிருந்து" என்று சுருக்கமாகப் பதில் சொல்லிவிட்டு உட்கார்ந்தான். கபாஹியை ஒருமுறை பார்த்தான்.

பஞ்சுபோல் வெள்ளை நிறமாயிருந்தபடியால் வந்த பெயர் அது- கபாஹியை என்பது; அவள் இப்பொழுதும் வெள்ளையாகத்தான் இருக்கிறாள். கல்யாணம் ஆகிப் பதினைந்து வருஷங்கள் ஆகின்றன. கபாஹிக்குக் கல்யாணம் நடந்தபோது, குலச்சுக்குப் பதினொரு வயது. அந்த நாளிலிருந்து அவளைப் பார்க்கும் பல *துடைவைகளிலும் அவள் ஒரேமாதிரித்தான் இருக்கிறாள். அவள் தோற்றத்தில் கூடுதலோ குறைதலோ ஏற்படவில்லை. (குறிப்பு: பதினொரு வயதில் கபாஹிக்குக் கல்யாணம் நடந்தது நாஹருடன்)

பழைய டாலிம் கிராமத்துக்காரனான நாஹர், முதலில் கபாஹியின் அக்காளான ஜீதியை மணந்திருந்தான். அவளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவள்தான் தரா. தரா ஐந்து மாதக் குழந்தையாயிருக்கும் போதே, ஜீதி ஏதோ பிள்ளைத்தாச்சி வியாதியால் இறந்துபோய்விட்டாள். நாஹருக்கு ஒரு விதவை அக்காள் இருந்தாள். அவள் ஒரு ஐந்தாறு மாதம் அந்தப் பெண் குழந்தையைச் சம்ரட்சணை செய்து வந்தாள். அதற்குப்பிறகு ஊர்க்காரர்கள் எல்லாம் சேர்ந்து கபாஹியை நாஹருக்குக் கட்டி வைத்தார்கள். நாஹரின் விருப்பப்படிதான் இது நடந்தது. கபாஹி தராவுக்குச் சொந்தச் சிறிய தாயார்; ஆகவே அவளுக்கு கஷ்டமில்லாமல் இருந்தது.

நாஹரின் வீட்டுக்குக் கபாஹி வந்தபோது, தராவிற்கு, தன் அம்மாவாகவே தோன்றினாள். தன் அம்மாவை நினைத்துக்கொள்ளும் ஆற்றலோ, அதற்கான வயதோ ஆகவில்லை தராவுக்கு அப்போது; பிறகு அவள் பேசும் பருவம்

வந்தபோது, கபாஹியைச் சித்தியென்று அழைக்கச் சொல்லிக்கொடுத்தார்கள்; ஆனால் அவளுக்கு கபாஹி அம்மாவாகத்தான் தோன்றினாள். அவளும் தராவைத் தன் சொந்தமகள் போலவே சீராட்டி வளர்த்துப் பெரியவள் ஆக்கினாள். அவர்கள் இருவரையும் பார்க்கும் யாரும், அவர்கள் அம்மாவும் பெண்ணும் இல்லையென்று சொல்லமுடியாது. தன் தாயார் வேறு ஒருத்தியோ என்று நினைத்துப் பார்க்கும் வாய்ப்பே இல்லை தராவுக்கு.

நாஹர் ஒரு சூதுவாது தெரியாத நாட்டுப்புற இயல்புடையவன்; ஆனால் கபாஹியோ சற்றே சபலமுடையவள்.

ஐப்பசி கார்த்திகை மாதங்களில், தன்சிரி ஆற்றின் வழியே இரண்டொரு வியாபாரிகள் படகில் வருவார்கள். அவர்களுடன் சில சாமான்களும் வரும்: குறுகிய காலத்து மகசூலுக்காகப் பணம் வாங்கிக் கொள்ளாமலேயே உருளைக்கிழங்கு, துவரை போன்ற விதைகளைக் கொடுத்துவிட்டுப் போவார்கள். மாசி பங்குனி மாதங்களில் தங்கள் பங்கை வாங்கிக் கொண்டு, கணக்குத் தீர்க்கத் திரும்பி வருவார்கள். படகுகள் நிரம்பத் துவரையும் பிற பொருள்களும் ஏற்றிக்கொண்டு போவார்கள். இப்படி வரும் வியாபாரிகளில் வாலிபப் பருவமுள்ள எவனாவது ஒருவன், கிராமத்து மாட்டுப்பெண்கள் மற்றும் வீட்டுப் பெண்களின் உள்ளங்களில் கொஞ்சம் சபலங்களை, வண்ணக்கனவுகளை ஏற்படுத்திவிட்டுச் செல்வான். கபாஹியின் மனத்திலும் இப்படி ஒரு சலனம் ஏற்பட்டிருந்தது. நாஹருடன் அவளுக்கிருந்த தொடர்பும் நிரந்தரமாகவே அறுபட்டுப் போய்விட்டிருந்தது.

நாஹர் அவளை வீட்டைவிட்டு வெளியே துரத்திவிட்டான். ஆனால் ஒரு நாள் யாரிடமும் எதுவும் சொல்லாமல், அவனும் வீட்டிலிருந்து மறைந்தே போய்விட்டான். போனவன் போனவன்தான்; எங்கே போனானென்று யாருக்கும் தெரியாது. ஊர்க்காரர்கள் இதைப்பற்றி ஆச்சரியப்படவும் இல்லை. ஏனென்றால் அடிக்கடி இப்படி யாராவது மறைந்து போவது உண்டு. புலி தின்றிருக்கலாம் அல்லது ஓடிப்போயிருக்கலாம். மனிதனைப் பிடித்து வைத்துக் கொள்ளவா முடியும்?

நாஹர் ஒருக்கால் திரும்பி வந்தாலும் வரலாம் என்ற எண்ணத்தில், கபாஹி சில நாட்கள் அந்த வீட்டிலேயே

இருந்தாள். கடைசியில் அவன் வேறு ஏதோ ஊரில் இருப்பதாகவும் கேள்விப்பட்டாள். மறுபடியும் இந்த ஊருக்குத் திரும்பி வரமாட்டான் என்றும் தெரிந்து கொண்டாள். இனிமேல் அவனை எதிர்பார்த்துப் பயனில்லை என்பதைத் தெரிந்து கொண்டு, ஒருநாள் அந்த விதவை நாத்தனாருடன் சண்டை போட்டுக்கொண்டு, தராவையும் கூட அழைத்துக்கொண்டு தன் வீட்டுக்கே வந்து விட்டாள். இதை யாரும் தடை செய்யவில்லை. அவர்கள் இருவரும் கபாஹறியின் சிறிய தாயார் வீட்டில் வந்து தங்கினார்கள்.

ஆரம்பத்தில் நாஹறர் ஏன் அப்படி ஓடிப்போனான் என்பது கிராமத்து ஜனங்களுக்குத் தெரியாது. சில நாட்கள் கழித்துச் சிலருக்கு விஷயம் தெரிந்து போனது. போன ஐப்பசி மாதத்தில் பஸீர் என்ற வியாபாரி, படகில் சாமான்கள் கொண்டு வந்தான். அவன் பழைய டாலிம் ஆற்றுத் துறையில் படகைக் கட்டியிருந்தான்; ஜனங்களுக்கு கிழங்கு, துவரை விதைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தான். அவன் கையில் பணப் பையைப் பார்த்துவிட்டு கபாஹறி அப்போதே அவனிடம் மனத்தைப் பறிகொடுத்து விட்டாள். பஸீர் சில நாட்களுக்கு கபாஹறியின் வீட்டில் விருந்தாளியாயிருந்தான். அவன் நல்ல வாலிபன், கபாஹறியும் சபலமுடையவள்.

இதைப்பற்றி நாஹறர் பிற்பாடுதான் தெரிந்துகொண்டான். அவளை அடித்தான்; பிறகு ஏதோ துயரத்தால் தானும் ஓடிப்போய்விட்டான்.

இப்போது தரா பதினான்கு வயதுப் பருவ மங்கையாகியிருந்தாள். பார்த்தால் இருவரும் அக்காள் தங்கைகளைப் போலவே இருந்தனர். தரா சற்று துருதுருப்பான இயல்புடையவள், அடக்கமானவள். ஆனால் இருவரும் ஒன்றுபோல், அழகானவர்கள், வெள்ளை நிறமுடையவர்கள், நல்ல ஆரோக்கியமும் வாளிப்பும் உடையவர்கள்.

கபாஹறியின் சிறிய தாயார் இறந்துபோய் மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. இதற்குப்பிறகு தராவை மட்டுமே துணைக்கு வைத்துக் கொண்டு, அவள் தனியாகத்தான் இருக்கிறாள். பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. என்றாலும் தரா இருப்பதால் சற்றே பயம் இருந்தது. தரா நல்ல அழகி. ஊரில் அவளைப்போல்

இன்னொரு பெண் கிடையாது. அழகும் நிறமும் உடற்கட்டும் ஒன்றை ஒன்று விஞ்சி நின்றன. பார்த்தால் பார்த்துக் கொண்டே இருக்கத் தோன்றும். யாரோ வேற்று மனிதர் நிலத்தில் உழைத்து வேலை செய்த போதிலும், அவள் முகத்தில் வருத்தமே தெரியவில்லை. நாள் கழியக்கழிய அவளுடைய அழகும் உருவமும் மெருகு ஏறிக் கொண்டிருந்தன.

ஆகவே கபாஹுக்குத் தராவால் சற்றே பயம் இருந்தது. பயப்படாமல் இருக்கவும் முடியாது. சமூகம் கபாஹுயைச் சில காலம் தள்ளி வைத்தபின், மறுபடியும் சேர்த்துக்கொண்டு விட்டிருந்தது; ஆனாலும் அவளைப்பற்றி எல்லார்க்கும் எல்லாமே தெரிந்திருந்தது; ஆகவே தராவைக் கண்டு மோஹித்து, அவர்கள் வீட்டுக்கு வந்த வாலிபர்களும், ஊர்க்காரர்கள் வைவதற்குப் பயந்துகொண்டு இப்போதெல்லாம் அதிகமாய் அங்கு வருவதில்லை.

குலச்சுதான் இப்போதெல்லாம் அங்கே வருகிறான். அவனுக்கு சமாசாரமெல்லாம் தெரியுமோ தெரியாதோ.

உறவென்று பார்க்கப்போனால் அவனுக்கு அவள் ஒன்றும் உறவில்லை; அவள் வயதில் மூத்தவள் ஆனதால் அக்கா வென்று அழைக்கிறான். அவ்வளவுதான். தரா அவனை அந்த உறவு முறையில் அழைக்காமல், அண்ணா, குலச் அண்ணா என்றே அழைக்கிறாள். குலச்சும் இதைத் தவறாக நினைக்காமல் ஏற்றுக்கொள்கிறான். இப்படி தரா அவனை அண்ணா என்று அழைத்தும்கூட, கபாஹுி தராவை அவனுடன் அதிகமாய்ப் பழகவிடுவதில்லை.

குலச் வாலிபன், தராவும் பருவப்பெண். அதற்காக இருபத்துநான்கு மணி நேரமும் வீட்டிலேயே இருப்பதும் கபாஹுக்கு முடியுமா? வாலிபப் பையன்களை எப்படி நம்ப முடியும்?

வாழைப்பழச் சீப்புகளில் இரண்டைத் தன் தாயாருக்கென்று வைத்துக்கொண்டு, பாக்கியிருந்ததை கபாஹுயின் பக்கம் நகர்த்திகொண்டே, "இந்தா, இந்தப் பழங்களை வைத்துக்கொள். வயற்காட்டில் வரப்பில் விளைந்தவை" என்று சொல்லிச் சற்றைக்குப் பிறகு, "ஒரு டம்ளர் டீ குடிக்கத் தருவாயா அக்கா? ஒரே தாகம்" என்றான்.

உள்ளேயிருந்து தரா வெளியே வந்தாள்.

"தரா, இந்தப் பழங்களைக் கொண்டு போய் வை. அப்புறம் டீ இலை ஏதாவது இருக்கிறதா என்று பாரேன். உன் அண்ணனுக்கு ஒரு டம்ளர் டீத்தண்ணீர் கொடு; பாவம் நனைந்து ஊறி வந்திருக்கிறான்" என்றாள் கபாஹி.

தராவை ஒரு பார்வை பார்த்தபின், கபாஹியையும் பார்த்து, "அக்கா, தரா நம் கண் முன்னாடி எப்படி பெரியவள் ஆகிவிட்டாள்" என்றான். கபாஹி பதிலே சொல்லவில்லை. இருவருமே சிறுது நேரம் ஒன்றும் பேசாமல் இருந்தனர். பிறகு கபாஹி, "சங்கதி தெரிந்திருக்குமே?" என்று கேட்டாள்.

"எந்த சங்கதி?" என்று கேட்டுக்கொண்டே அவள் கண்களைப் பார்த்தான். உண்மையில் கபாஹியின் கண்கள் மிகவும் அழகானவைதான். "சேனிமாயிக்குக் கல்யாணம், கேள்விப்பட்டாயா?"

இதைக்கேட்டு குலச்சின் முகம் சின்னதாயிற்று சற்றே. "அப்படியா, உண்மையாகவா, எங்கே? யாருக்குக் கொடுக்கிறார்கள்?" என்று பட்டுக் கொள்ளாமல் கேட்பது போலவே கேட்டான் அவன்.

பெரியா கிராமத்துக் கிழவன் ஒருவனுடைய பிள்ளைக்குக் கட்டிக்கொடுக்கிறார்களாம். ஆனால் அந்தப் பையனுக்கு ஆஸ்த்மாவோ அல்லது வலிப்பு நோயோ இருப்பதாகவும் கேள்வி. அதுவும் சரிதான், பேர் கெட்டுப்போன பொண்ணுக்கு, வேறு நல்ல வரன் கிடைக்குமா என்ன?

குலச் தலையைக் குனிந்துக்கொண்டான். அவனுக்குச் சேனிமாயியை மிகவும் பிடித்திருந்தது. அவளும் அவனுடன் சம்மதித்துச் சந்தோஷமாக ஓடி வந்தாள். ஓடிவந்த இரவு அவர்கள் இருவரும் இந்திரநேபாலியின் மாட்டுக்கொட்டிலில், ஒன்றாகப் படுத்துத் தூங்கினார்கள்; அதே காரணத்தால்தான் இன்று அவனும் அவனுடைய தாயாரும் தனியே வாழவேண்டி வந்தது. அதே சேனிமாயிக்குக் கல்யாணம். சிறிது நேரம் கழித்து, "கல்யாணம் எப்போது?" என்று கேட்டான்.

"கல்யாணம் வேறே நடக்குமாக்கும்? ஒருநாள் நாலைந்து பேராய் வந்து, பெண்ணை அழைத்துக்கொண்டு போவார்கள். அவ்வளவுதான்; அநேகமாய் மார்கழி மாதம் நடக்கும்."

குலச் வேறு எதுவுமே சொல்லவில்லை.

தரா அவனுக்கு டீ கொண்டு வந்தாள். ஒரு சின்னக் கிண்ணத்தில் சிறிது வெல்லமும் கொண்டு வந்தாள். அது பேருக்குத்தான் டீ. சற்றே பழுப்பு நிறமாயிருந்தது. பால் அதிகமாகவே கலந்திருந்தது.

"தரா, துண்டு, போர்வை ஏதாவது நெய்து கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டான் குலச்.

"ஆமாம், இப்போது தறியில் இருக்கிறது. கழுத்துப்பட்டை நெய்து கொண்டிருக்கிறேன்" என்றாள் தரா.

குலச் டீயை உறிஞ்சிக் குடித்தான்.

"இந்தத் தடவை தெளி பயிரெல்லாம் நன்றாய் வந்திருப்பதாகச் சொல்கிறார்களே" என்றாள் தரா.

"இது வரையில் அந்தப் பயிரின் நுனி முகம் நன்றாகவே இருக்கிறது. இந்தத் தடவை விவசாயிகள் கை கொஞ்சம் வலுக்கலாம்"

"வயல்காட்டுப் பக்கம் நீ இந்த வருஷம், போதுமான அளவு புது நிலத்தைச் சாகுபடிக்கு கொண்டு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேனே?" என்று கேட்டாள் கபாஹி.

"போதுமானதென்ன? ஓர் ஏக்கர் நிலம் இருக்கும் கிட்டத்தட்ட. ஆற்றுப்படுகை நிலத்துக்குக் கணக்கென்ன? ஆனால் அந்தப்பக்கம் பூமி சற்றே மேடு... எப்படியாவது ஒரு மூன்று ஏக்கர் நிலத்தைப் பண்படுத்திச் சாகுபடிக்குக்கொண்டு வந்துவிட்டால், சோறு, தண்ணீர்க் கவலையில்லாமல் இருக்கலாம். ஆனால் அதைத் தனியாக எப்படிச் செய்யமுடியும் என்னால்?"

"அந்த நிலத்திற்கும் கிஸ்தி கொடுக்கவேண்டியிருக்குமோ?"

"சகட்டுமேனிக்கு எல்லாவற்றிற்கும் வரி கொடுக்க வேண்டியதில்லை. புதிதாய் நன்செய் ஆக்கப்பட்ட நிலத்தில் பயிர் செய்தால்தான் வரி. வருஷவாரிப் பட்டாவாக, முதலில் நம் பெயருக்கு நிலத்தை எடுத்துக் கொள்ளவேண்டும்" டீ கொடுத்த பாத்திரத்தை எடுத்துக்கொண்டு தரா உள்ளே போனாள்.

கபாஹி நம்பிக்கை மிகுந்த பார்வையுடன் குலச்சைப் பார்த்துக்கொண்டு, "நானும்தான் இன்னும் எத்தனை காலம் இந்த மாதிரிக் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பேன்? நாங்கள் இரண்டு பேருமே தறி நெய்கிறோம்; மற்றவர்கள் நிலத்தில்

பாடுபடுகிறோம். இருந்தாலும் இன்னும் எத்தனை காலம் முடியும்? எங்கேயாவது எப்படியாவது ஒரு கையளவு நிலம் கிடைத்தால்..." என்று ஏங்கினாள்.

"நிலமே கிடைத்துவிடுவதாக வைத்துக்கொள். உன்னால் அதில் என்ன செய்யமுடியும்?" என்று கேட்டான் குலச்.

"யாரையாவது ஏற்பாடு பண்ணிப் பயிர் செய்யச் சொன்னால், வருஷத்தில் கொஞ்சம் மகசூல் வீட்டுக்கு வராதா? எப்போதும் மற்றவர்களையே நம்பி வாழ்வது என்ன பிழைப்பு?"

"அதுவும் சரிதான்" என்றான் குலச்.

சில தினங்களாக அவன் மனத்தில் தேசல் பாசலாய் ஆசை உருவாகிக் கொண்டிருந்தது. தராவை அவனுக்குக் கட்டிக் கொடுத்தால், அவளையும் கபாஹியையும் அழைத்துக்கொண்டு வயல் காட்டிலேயே தங்கி விடலாம். ஒரு புது வீடு கட்டிக்கொள்ளலாம். தன் அம்மாவையும் கூட வைத்துக் கொள்ளலாம். அவர்கள் எல்லாருமே தன் சொந்த நிலத்தில் வேலை செய்து சுவாதீனமாகவே சாப்பிடலாம். புதிது புதிதாய் நிலத்தைச் செய்நேர்த்தி செய்து கொண்டு பணக்காரர்களும் ஆகலாம். பசுமாடுகளை நேபாலியிடம் கொடுத்துவிட்டுக் கன்று கால்களை வைத்துக்கொண்டே, நிலத்து வேலைகளை ஆரம்பித்துவிடலாம். தன் சொந்த ஏர், சொந்த மாடுவண்டிகள், விதைப்பதும், நடுவதும் அறுவடை செய்வதும் தம் சொந்தப் பெண்பிள்ளைகள். இப்படி இதைப்பற்றி நினைத்து நினைத்து அவன் மிகவும் மகிழ்ந்ததுண்டு, அப்போதெல்லாம்.

தரா உள்ளிருந்து வந்து, "அண்ணா இங்கேயே சாப்பிட்டுவிட்டுப் போகலாமே. வீட்டில், பாவம் உன் வயதான அம்மா தூங்கிப் போயிருப்பாள்" என்றாள்.

"வேண்டாம், வேண்டாம். நீங்கள் சாப்பிடுங்கள்; நான் வீட்டுக்குப் போய்ச் சாப்பிடுகிறேன். எங்கள் அம்மா இத்தனை சுருக்கத் தூங்கமாட்டாள். அப்படியே தூங்கினாலும் நான் எழுப்பிவிடுவேன்"

கபாஹியும் சேர்ந்து வற்புறுத்தவே அவன் எழுந்து சாப்பிட உள்ளே வந்தான். "தரா ஒரு சொம்பு தண்ணீர் கொடுப்பாயா? உடம்பு முழுவதும் ஒரே சேறு."

"சாதாரண மழையா பெய்திருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே, அவன் கையில் சொம்பைக் கொடுத்தாள் தரா.

குலச்சும் கபாஹியும் சாப்பிட உட்கார்ந்தார்கள். தரா பரிமாறினாள். மீன் ஆக்கியிருந்தார்கள். குலச்சுக்குக் கறியும் குழம்பும் மிகவும் பிடித்திருந்தது.

பெண்பிள்ளைகள் சமைத்தாலே ஒரு தனியான ருசிதான்.

தன்சிரியின் மீன் மிகவும் ருசியுள்ளது. டாலிம் கிராமத்து அரிசியில் நல்ல கொழுப்புச் சத்துண்டு. பழைய அரிசியானால் அந்தச் சோறு மிகவும் இனிப்பாக இருக்கும்.

"சேனிமாயிக்கு நிச்சயம் செய்திருக்கிற பையன் பெயர் தெரியுமோ அக்கா உனக்கு?" என்று கேட்டான் குலச்.

"பெயர் தெரியவில்லையே. உனக்குத் தெரியுமா தரா?" என்றாள் கபாஹி. "ஸருமயினாவோ அல்லது கலாயியோ என்று நினைக்கிறேன்" என்றாள் தரா.

"ஸருமயினா.. அவன் ஸிபரியா கிராமத்துப் பையன் இல்லையா?"

"ஆமாம், உன் வயற்காட்டுக்குப் பக்கத்தில்தான் இருக்கும். அவன் அப்பாவின் பெயர் கூட மலோகாவோ ஏதோ" என்றாள் கபாஹி.

சாப்பிட்டபின் வெற்றிலை போட்டுக் கொண்ட குலச் சிறிது யோசித்துவிட்டு, "அக்கா நீ எதற்கும் கவலைப்படவேண்டாம்; என்னால் எவ்வளவு நிலம் பண்படுத்த முடியுமோ அவ்வளவையும் சாகுபடிக்குக் கொண்டுவந்து விடுவேன்; நிலம் அதிகமாகி விட்டால் அம்மாவையும் அந்தப்பக்கம் அழைத்துக் கொண்டு போய்த்தான் ஆகவேண்டும். யார் கண்டது.. ஒருக்கால் உங்கள் இருவரையும் அழைத்துக் கொண்டாலும் கொள்வேன். ஏர் உழுவதும் மண் வெட்டி வேலையும் நான் செய்வேன். நீங்கள் மூவரும் நாற்று நடுவது, அறுப்பது எல்லாம் செய்யலாம். எல்லாம் நன்றாகவே இருக்கும்" என்றான். குலச்.

தரா கபாஹியைப் பார்த்தாள். கபாஹி ஒரு தடவை குலச்சின் முகத்தைப் பார்த்தாள்; அவளுக்கு அவன் பேச்சில் வேறு நோக்கம் ஏதாவது இருக்குமோ என்று தெரிந்து கொள்ள ஆவல்.

"இப்போதே, ஆரம்பத்திலேயே எங்களைப் பற்றி யோசித்துக் கவலைப் படாதே; முன்னாடி நீ போய் இருந்துகொள், அங்கே. நாங்கள் எப்படியோ வயிறு வளர்த்துக் கொண்டு இருக்கிறோம்.

ஊரையும் உற்றாரையும் விட்டுவிட்டு அவசரக்கோலமாக இன்னொரு இடத்திற்குப்போவது நல்லது இல்லை" என்றாள் கபாஹி.

"ஊராரையும், உற்றாரையும் பார்த்துக் கொண்டிருந்தால் வயிறு நிரம்புமா? உங்களைப்பற்றி எவன் கவலைப்படுகிறான் இங்கே? ஆற்றின் கரையில் நிலமிருந்தால் என்ன? ஒரு தோட்டம் போட்டுக் கரைகளில் பாக்குமரம் பயிராக்கிடலாம் என்று எனக்கொரு யோசனை. வாழை போட்டேன். அவை தார் போட்டுவிட்டன. இரண்டு மூன்று பப்பாளி மரங்கள் இருக்கின்றன. இலவ மரங்களும் வேறு மரங்களும் இருக்கின்றன. அவற்றை அப்படியே பார்த்துக்கொண்டே இருக்கலாம்போல் இருக்கிறது" என்றான் குலச்.

தரா பாத்திரங்களை எடுத்துக்கொண்டு உள்ளே போனாள். கபாஹி கிசுகிசுத்த குரலில், "எந்தக் காரியத்தையும் ஆற அமர யோசித்துத்தான் செய்தல் வேண்டும். நாங்கள் இரண்டு பேரும் இப்படியே உன்னுடன் வந்து தங்கினால், ஊர்க்காரர்கள் சும்மா விடுவார்களா? தரா சின்னஞ்சிறு பெண்–தெரியுமல்லவா? நான் உன்னுடன் வந்து இருந்தால் எல்லார் கண்ணிலும் தீப்பற்றி எரியுமே. ஏற்கெனவே எனக்கு இருக்கும் பெயர் போதாதா?" என்றாள்.

குலச் வெட்கத்தால் குறுகினான்; சமாளித்துக்கொண்டு, "என் அம்மாவும் நம்முடன் இருப்பாளே" என்றான்.

"அதனால் என்ன பயன்? நாங்கள் இரண்டு பேரும் உன் வீட்டுக்கு வந்து இருக்க ஆரம்பித்தால், உன் அம்மா உன்னுடன் இருப்பது நிச்சயமில்லை; உனக்கு இதெல்லாம் புரியாது.."

குலச் சிறிது நேரம் தனக்குப்புரியாத விஷயங்களை யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவர்கள் இருவரையும் தன்னுடன் வைத்துக்கொள்வதற்கு, இயற்கையான உபாயம் அவனுக்குத் தெரியும்; ஆனால் அதைக் கபாஹியிடம் தெரிவிக்க அவனிடம் சரியான பாஷை இல்லை. கபாஹி தராவைத் தனக்குக் கல்யாணம் கட்டிக் கொடுப்பாளா? மேலும் கபாஹி கருத்துப்படி தரா இன்னும் சிறிய பெண். பதினாலு வயதுப் பருவ மங்கை அவளுக்குச் சிறிய பெண்ணாம். தரா மிகவும் குறைவாகத்தான் பேசுவாள்.. கபாஹியுடன் கூடவே இருப்பதால், அவளுக்குப்

பேசும் வாய்ப்பே கிடைக்காதோ என்னவோ? அவள் ஒருத்தியுடன் மட்டும் எத்தனைதான் பேசுவாள்.

தனியே இருக்கும்போது இதையெல்லாம் நினைத்து அவள் மனம் பொறுமும். இப்பொழுது அவளுக்கு எல்லாமே புரிகிறது. அறிவு வளர்ந்திருந்தது. அக்கம் பக்கத்தில் உள்ளவர்களிடமிருந்து, தன் சித்தியான கபாஹியின் நடத்தையில் மாசு உண்டு என்பதைத் தெரிந்து கொண்டிருந்தாள்; அதனால்தான் கிராமத்திற்குள் இருந்தும், அவர்கள் தனியே ஒதுங்கிக் கிடக்கவேண்டியிருக்கிறது. மேலும் கபாஹியின் கெட்ட நடத்தை காரணமாகத் தனக்கும் கெட்ட பெயர் ஏற்பட்டிருப்பதையும் அவள் அறிந்தாள். ஆனால் கபாஹியை நேரில் கண்டதும், தராவுக்கு அவளிடம் பிரியம் வந்து விடுகிறது. தான் மற்ற பெண்களைப்போல் சுதந்திரமாயில்லை யென்பதும் அவளுக்குத் தெரியும்.

அவளால் அதிகமாய்ச் சிந்திக்க இயலாது; அவள் வாலிபப் பெண். நான்கு புறமும் உணர்ச்சியுள்ள உலகம் களித்து மகிழ்கிறது: அந்தக் களிப்பையும் மகிழ்ச்சியையும் பெற அவளுக்கு எழுதாத அழைப்புக் கடிதம் வருகிறது. மகிழ்ச்சி பொங்கும் அவளுடைய சுற்றுப்புறம், அவள் மனத்தின் மாசுகளைக் கழுவி விடுகிறது; அவள் தனிமையில் தனக்குத்தானே சிரித்துக்கொள்கிறாள். பாடுகிறாள்; அவளுடைய உள்ளமென்ற மயில், தோகை விரித்து ஆடுகிறது. அவளுடைய மனம் எங்கோ வெகு தொலைவுக்குப் பறந்து செல்ல விரும்புகிறது.

உள்ளுக்குள் அவள் இவ்வளவு அமைதியற்றுச் சஞ்சலப்பட்டாலும், வெளியில் அடக்கமாகவும் கம்பீரமாகவும் இருக்கிறாள். அப்படி கம்பீரமாய் இருந்து, ஒளி பெறுவதற்குத் தவம் செய்கிறாளோ? கரைக்குப் பின்னால் இருக்கும் தேக்கு மரங்களுக்கப்பால் காணப்படும் நட்சத்திரங்களிடம் தன் ரஹஸ்யமான கதைகளை மறைத்து வைக்க விரும்புகிறாளோ!

தராவின் மனதில் இப்படித் துயரம் நிறைந்திருந்தாலும், அவள் மனம் மிகவும் பெருந்தன்மை உடையது; அந்த மனத்திற்குள் இருக்கும் தரா ஒரு சூரிய காந்திப்பூ. அதற்கு ஓர் அகலமான நீலவான் வேண்டும். சரத் காலத்துச் சந்திரனின் நடுவிலிருந்து பொங்கிய அமுதம் வேண்டும்.

அவளுடைய மறைவான இந்த சூரியநமஸ்காரத்திற்குரிய பயன் எப்போது கிடைக்கும்? அதைப்பற்றிக்கூட அவளுக்குக் கவலை இல்லை. எப்போதாவது படுத்துறங்கிக்கொண்டே அவள் ஒரு

சிவந்த வருங்காலத்தின் சித்திரத்தை வரைவாள். காதலி ஆகின்ற, மனைவி ஆகின்ற, தாய் ஆகின்ற, குடும்பத்தலைவி ஆகின்ற, வருங்காலச் சித்திரங்களை வரைவாள். அவள் மனம் யாராவது ஒருவனுடைய மார்பின் கதகதப்பை விரும்புகிறது. மிகுதியான சிநேகத்தை விரும்புகிறது.

ஆனால் அவளுடைய வீட்டிற்கு, அதாவது அவளுடைய மனத்தின் உட்புறக் கூடத்திற்கு யாரும் வருவதில்லை. எப்போதாவது குலச் வருகிறான், அந்தக்கூடத்திற்கு, எப்போதாவது சந்திரன் வருகிறான். பக்கத்தில் இருக்கும்போது குலச் மிகவும் எளியவனாய்த் தோன்றுகிறான்; அவனிடம் எல்லா விஷயங்களையும் சொல்லிவிடலாம் என்றே தோன்றுகிறது; ஆனால் அவன் அகன்று போன பிறகு, அவன் தன் அருகில் இல்லாதபோது, இந்த குலச்சுதான் வெளிப்படாத தன் விருப்பத்தின் மறுபுறமுள்ள மேகம் கவிந்த சூரியன் என்று தோன்றுகிறது. ஒருநாள் அவள் அவனைத் தன் இருகைகளாலும் தழுவித் தன் மடிமீது நிறுத்திக் கொள்வாள். சூரியனுடைய முழு வெப்பத்தையும் தன் மார்பு மீது ஏற்றுத் திடீரென்று குபேரச் செல்வத்தின் யஜமானி ஆவாள். அவளால் தன் எண்ணங்களையும் கனவுகளையும் யாரிடமும் சொல்லமுடியவில்லை. தனக்குத்தானே கூடச் சொல்லிக் கொள்ள முடியவில்லை.

சந்திரனுடைய மனத்தைப்புரிந்து கொள்வது மிகவும் கஷ்டம். அவன் ஓர் அரைப் பைத்தியம், எப்போது எதைப்பேசுவான், எப்போது எதைச் செய்வான் என்று சொல்ல முடியாது; ஆனால் அவன் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்வதில்லை. தன்சிரியின் வெள்ளம் எப்போதாவது வீடுவாசல்களை அழித்து விடுவதில்லையா? வெள்ளத்தின் மண்ணெல்லாம் பின்னாடிதான் மேடிட்டுத் தங்கும்.

இல்லை. சந்திரனிடம் ஒன்றும் சொல்லமுடியாது. புயல் வருவதற்கு முன்பாகவே மனத்தில் இருப்பதைச் சொல்வதால் என்ன பயன்?

தரா பேசாமல் இருக்கிறாள், பேசாமல் இருந்து, தன் மனத்தின் இசையைக் கேட்கிறாள். வாழ்க்கையின் கம்பீரமான, மெல்லிய, சஞ்சலமான இசை அது.

குழந்தைப் பருவத்தில் தரா மைனாக்குஞ்சு வளர்ப்பதுண்டு. அந்தப் பறவைக்குஞ்சின் தாயைப்போலவே அவள் அதற்குப் பொரி ஊட்டுவாள். குளிப்பாட்டுவாள். பேசக்

கற்றுக்கொடுப்பாள்; ஒருநாள் அந்த வளர்ப்புப் பறவை பறந்துபோய்விடும். அல்லது அதைப் பூனை கொன்றுவிடும். அல்லது தானாகவே அது செத்துப் போய்விடும்.

[தரா அழுவாள்; ஒரு வேளை சாப்பிடமாட்டாள்; அந்த வெள்ளைப்பூனை மீது அவளுக்கு மிகுந்த அன்பு.] அவள் அந்தப் பூனையை இடுப்பில் தூக்கிக்கொண்டு திரிவாள். அதோடு பேசுவாள். அதைத் தன் படுக்கையிலேயே போட்டுத் தூங்கப் பண்ணுவாள் இரவில். இதற்காகக் கபாஹரியிடம் எத்தனை நாள் திட்டு வாங்கியிருக்கிறாள். அவள் இந்த வெறும் பூனை மீது இவ்வளவு பைத்தியம் பிடித்தவளாயிருந்தாள்.

அந்தப் பூனையும் மிகவும் போக்கிரிப் பூனை. இவளைப் பார்க்காமல் அது ஒரு கணம்கூட இருக்காது. மியாவ் மியாவென்று கத்திக்கொண்டு எல்லா இடத்திலும் இவளைத் தேடும். தராவின் பங்குக்கு அவள் போடும் சோற்றையும் மீனையும் தின்னாமல், அதற்கு வயிறு நிரம்புவதில்லை.

அந்தப் பூனை கபாஹரியின் காலைச்சுற்றி வளையமிடும்போது அவள் தொல்லைப்பட்டு, "என்னை ஏன் தொல்லைப்படுத்துகிறாய்; போ உன் அம்மாவிடம் போ.. ஒரே அடியில் உன்னைக் கொன்று போடுவேன்" என்பாள்.

தரா இதைக்கேட்டு மிகவும் கோபப்படுவாள்.

வெறிச்சோடியிருக்கும் இந்த வீட்டில், தராவின் வயதுள்ள பெண் குழந்தை வேறு எப்படித்தான் பொழுதைக் கழிக்கும். பூனையையும் மைனாக் குஞ்சையும் வைத்துக் கொண்டாவது அவள் விளையாடட்டும் என்றுதான் கபாஹரியும் நினைத்தாள்.

தரா கபாஹரிக்கும் குலிச்சுக்கும் இடையில் பேச்சு வார்த்தை நடப்பதைப் பார்த்துவிட்டு, வெள்ளைப் பூனையைத் தூக்கிக்கொண்டு சுவரின் மறுபுறம் உட்கார்ந்து, அவர்கள் பேசுவதைக்கேட்டுக் கொண்டிருந்தாள். அவளால் அந்தப் பேச்சு வார்த்தையில் பங்கு கொள்ள முடியுமா?

அவர்களுடைய பேச்சு வார்த்தை முடிவுக்கு வந்து கொண்டிருந்தது. இடையிடையே இருவருமே பேசாமல் இருந்தார்கள் சற்று நேரம். இரவு வெகு நேரம் ஆகிவிட்டது. இன்னும் மழை நிற்கவில்லை. கபாஹரிக்கு இது பிடிக்கவில்லை. மண்ணெண்ணெய் வீணாகிறது, விளக்கு எரிவதால். குலச் ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தான். "இரவுப்போது, நீ இப்போது

போய்விட்டுப் பிறகு வா. இதைப்பற்றியெல்லாம் இப்போதே யோசிக்க வேண்டியதில்லை. நேரம் வரும்போது யோசிக்கலாம். நிலத்தைச் சாகுபடிக்குக் கொண்டு வந்திருக்கிறாய். சரியான காரியம்தான் அது. இன்னும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு நிலத்தைச் சீர்படுத்து..." என்றாள்.

"ஆகா அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு, மழையில் நனைந்து கொண்டே வீட்டுக்குப் புறப்பட்டான். கையில் விளக்குடன் கதவுவரை வந்து, அவன் வெளியே செல்ல வெளிச்சம் காட்டினாள் கபாஹி. அவன் இறங்கிச் சென்றதும் கதவைத் தாழிட்டுக் கொண்டு உள்ளே வந்தாள்.

தூங்கப்போகும்போது, "சித்தி, குலச் நிலத்தைச் சீர்திருத்தி நமக்கும் கொஞ்சம் நிலம் கொடுத்தால் அதில் என்ன கெடுதல்?" என்று கேட்டாள்.

"அவன் நிலத்தைச் சீர்திருத்தினால் நமக்கு ஏன் கொடுக்க வேண்டும்?"

"நாம் இனாமாகக் கேட்கவில்லையே. அவன் நிலத்தில் நாம் நட்டுப்பயிர் செய்வோம். விளைச்சலில் ஆளுக்குப் பாதி எடுத்துக் கொள்வோம்".

"பயிர் செய்யும் சமாசாரம் வேறு; அவன் வீட்டிலேயே நாம் இருப்பது வேறு. உனக்கு இதெல்லாம் புரியாது; போய்த் தூங்கு" என்றாள் கபாஹி.

"சித்தி, நான் நெய்த துணிகளை விற்றதில் எத்தனை பணம் கிடைத்தது?"

"பதினேழு ரூபா ஆறணா இருக்கிறது. அதில் உனக்கு ஏதாவது நகை நட்டுச் செய்து கொள். உன்னிடம் பணம் இருப்பதை யாரிடமும் சொல்லாதே"

"அது வேண்டாமே. அந்தப் பணத்தைக்கொண்டு குலிச் அண்ணா மூலமாக, ஆற்றங்கரைப் படுகை நிலம் கொஞ்சம் வாங்கிக்கொண்டால் என்ன?"

"சரி பார்ப்போம். பாதி ராத்திரி ஆகிவிட்டது. படுத்துத் தூங்கு" என்று சொல்லி விட்டுத் தராவின் முகத்தைத் தடவிக் கொடுத்தாள் கபாஹி.

# நான்கு

அம்மா முடைந்திருந்த கூடைக்கு ஓரம் கட்டிக் கொண்டிருந்தான் குலச். அவனுடைய அம்மா இயந்திரத்தில் நெல்குத்திக் கொண்டிருந்தாள். மழை நின்று விட்டிருந்தது. வெயில் தன் முழுக் கடுமையுடன் வெப்பம் தந்து கொண்டிருந்தது. அனைவருடைய மனத்திலும் ஒரு மலர்ச்சி தோன்றியிருந்தது.

குலச்சின் மனத்தில் இன்று எல்லையில்லாத மகிழ்ச்சி.

அவன் வீட்டுக்கு வந்து இன்று மூன்று நாட்கள் ஆகின்றன. நாளைக்கு அவன் வயல் காட்டுக்குப் போய்விடுவான்.

இன்று வெய்யில் மிகவும் அழகாயிருக்கிறது.

வெய்யில் வந்ததுமே அவன் மனம் மயில்போல் ஆடும். வாலிபத்திற்கும் ஆவணி வெய்யிலுக்கும் ஏதோ தொடர்பு இருக்கிறது.

"இனிமேல் பசு எருமைகளை இதுபோல் மேய விடமுடியாது. பிறர் வயல்களில் புகுந்து அவை மேய்ந்தால் திட்டுவார்கள்; திட்டாமல் என்ன செய்வார்கள்? மாட்டுக்குக் கொடுக்கவா அவனவன் பாடுபட்டுப் பயிர் ஏற்றுகிறான். இந்த மாடுகளும் மிகவும் பொல்லாதவை. தங்கள் தோட்டத்தில் கொல்லையில் கிடைக்கும் புல்லும் தழையும் அவற்றிற்குப் பிடிப்பதில்லை. மற்றவர்கள் தோட்டத்து வேலிகளை முறித்துக் கொண்டு புகுந்துபோய்ப் புல்லும் தழையும் தின்றால்தான் அவைகளுக்குத் திருப்தி. இந்த மாதிரி ஏதாவது தகராறு சண்டை விளைவித்தாலன்றி மாடுகளுக்கு நிம்மதி இருக்காதோ என்னவோ.

அதுவும் இந்தக் கன்றுக்குட்டிகள் இரண்டும் செய்யும் அக்கிரமம் மிகவும் அதிகம். அவற்றிற்கு வேலியோ எதுவோ லட்சியமில்லை; ஒரு பக்கமாய் புகுந்து அழித்து விடுகின்றன. இந்த இரண்டு கன்றுகளும் எனக்கு மிகவும் தொல்லை கொடுக்கின்றன. முடிந்தால் இவற்றை உன்னுடன் கொண்டு போய்விடு; என்னால் இவற்றை எவ்வளவு தூரம் பார்த்துக் கொள்ள முடியும். அவிழ்த்துவிட்டால் நேரே வயலுக்குப்போய் விடுகின்றன. இல்லாவிட்டால் காட்டுக்குள் ஓடி விடுகின்றன. பகல் முழுவதும் இவற்றின் பின்னே ஓடி திரிவதே எனக்கு வேலையாயிருக்கிறது"

கட்டிப்போட்டிருந்த காளைக் கன்றுகளைத் தடவிக்கொண்டே இவ்வாறு சொன்னாள் குலச்சின் அம்மா.

தளதளவென வளர்ந்திருந்த இரண்டு காளைக் கன்றுகளையும், அன்பு கனியப் பார்த்தான் குலச். அடுத்த வருஷம் இவற்றை வேலைக்குப் போட்டு விடலாம். இரண்டரை வயசுக் கன்றுகள். பல் காணவில்லை இன்னும்; இரண்டும் நன்கு திமிர்த்துவிட்டன.

மயிலைக் கன்றின் தலையைச் சொரிந்து கொடுத்துக் கொண்டே, "இதுதான் என்னை மிகவும் பாடாய்ப்படுத்துகிறது. பொல்லாதது. கூப்பிட்டால் வருவதே இல்லை." என்று சொல்லிவிட்டு, சிவப்புக் கன்றைத் தடவிக் கொடுத்து, "இதுதான் நல்லது; சொன்னதைக் கேட்கும்; கூப்பிட்டால் வந்துவிடும்; இதுமேல்தான் எனக்குப் பிரியம்" என்றாள் அம்மா.

தினப்படித் தடவிக் கொடுத்து வளர்த்ததால், அவையிரண்டுமே வீட்டுக் குழந்தைகள் போல் ஆகியிருந்தன. இரண்டுமே அம்மாவுக்குப் பயப்படுவதில்லை.

குழந்தை குட்டிகள் இல்லாத வீட்டில், தன் அம்மாவுக்கு இந்த மாடுகளும் கன்றுகளும்தான் துணையாயிருக்கின்றன. அவற்றை வயற்காட்டுக்கு ஓட்டிக்கொண்டு போய்விட்டால் அம்மா ஒண்டிக்கட்டை ஆய்விடுவாள். அவளை அப்படித் தனிமையில் கஷ்டப்பட விட விருப்பமில்லை குலச்சுக்கு.

செல்வமும் சொத்தும் அவனுக்கு ஒன்றும் கிடையாது; எப்படி இருக்கும்; தன் அப்பாவின் சொத்தில் ஒரு தூசியும் இவனுக்குக் கிடைக்கவில்லை. இவன் அப்பாவைக் கேட்கவுமில்லை. அப்பா கொடுத்தால் வாங்கிக் கொள்ளவா மாட்டான்; அதுவுமில்லை. ஆனால் ஒரு நாள் எப்படியும் சொத்தில் பங்கு வாங்காமலா இருக்கப்போகிறேன்; நானும் அவரும் அப்பாவும் மகனும்தானே. எத்தனை நாட்களுக்குத்தான் அவர் இப்படி வஞ்சனை செய்யப்போகிறார் என்று பார்த்துவிடுகிறேனே.

பசு, காளை, ஆடுகள்தான் அவனுக்கு ஆஸ்தி பாஸ்தியெல்லாம்.

"நீ இன்றைக்கே போக வேண்டுமா?" என்று கேட்டாள் அம்மா.

"ஆமாம்"

"நாளைக்குப் போனால் என்ன?"

"ஏன்?"

"உங்கப்பாவுக்குக் கடுமையான காய்ச்சலென்று கேள்விப் பட்டேன்" என்று பயந்து கொண்டே சொன்னாள் அம்மா.

குலச் உடனே எழுந்து நின்று. "காய்ச்சலா? சாகட்டுமே; நான் என்ன செய்யமுடியும்?" என்றான்.

"ஒரு தடவை போய்விட்டு வந்தால்தான் என்ன?"

"நீயே போ; எல்லாரையும் நீயும் தெரிந்துகொள்ள வேண்டும் அல்லவா? நான் மறுபடியும் அந்த வீட்டு வாசலை மிதிப்பேனா? நான் மனிதன்; நாய் இல்லை".

அம்மா வாயே திறக்கவில்லை. வாலிபப் பிள்ளையான குலச்சிடம் அவளுக்குப் பயம்; இன்றைக்கு அவன்தான் அவளுக்குப் புகலிடம்; ஆகவே அவள் பேசவில்லை.

அப்பனைப்போலப் பிள்ளை; பிடித்தால் பிடித்ததுதான்; அது ஒன்றுதான் தெரியும்.

மதியம் சாப்பாடான பிறகு, குலச் மாடுகளை ஓட்டிக்கொண்டு மேற்கே போனான். அவற்றை மேயவிடுவதற்காக; எப்போதும் கட்டிக் கிடப்பதால் மாடுகள் பலம் குறையும்.

வெள்ளைக்கிடாரி சினைபோல் இருக்கிறது. மார்கழி, தை வாக்கில் ஈன்று விடும். ஆஹா; புது அரிசிச்சோறும் பாலும் மிகவும் சுவை தரும். இதை நினைத்து குலச் மகிழ்ந்தான்; அவனுக்குச் சொந்த நிலம் அதிகமில்லை; ஆயினும் கிராமத்துக்காரனாக இருந்தும், புது அரிசிச்சுவையை அனுபவிக்காமல் இருக்க முடியுமா?

புது அரிசி - புதுப்பால் - புதுப் பெண்.

புல்லுக்குப் பஞ்சமே இல்லை. மாடுகள் ஆனந்தமாய் மேய்ந்தன. அவற்றிற்குத் தினந்தோறும் வயிறு நிறையத் தீனி கிடைத்தால், அவை எந்தத் தொல்லையும் கொடுப்பதில்லை. தினம் அரை வயிறாய் இருப்பதனால்தான் மனிதனே அதிருப்தி அடைகிறான்.

ஒரு மாடுகூடக் குனிந்த தலையை நிமிர்த்தவில்லை.

வெய்யில் கடுமையாகவே எரிக்கிறது. மழைக்குப்பிறகு வந்த வெயில்.

ஆலமரத்தின் அடியில் உட்கார்ந்து, வானத்தை நிமிர்ந்து பார்த்தான் குலச். ஏராளமான கிளைகள் நிறைந்த ஆலமரத்தின் அடர்ந்த இலைகள் வானத்தையே மறைத்து விட்டன. அவற்றுக்கிடையில் எப்போதாவது வெள்ளை வெய்யில் தெரிகிறது. நிழலும் இனிமைதான்; வெய்யிலும் இனிமைதான்.

இந்த ஆலமரத்தை குலச்சுக்குக் குழந்தைப் பருவத்திலிருந்தே தெரியும். ஐந்து வயதுப் பருவத்தில் இந்த மரத்தின் நிழலில் தங்கி அவன் மாடு மேய்த்திருக்கிறான். இப்போது அவன் பெரியவனாகியிருந்தான்; வாலிபன் ஆகியிருந்தான்; ஆனால் மரம் முன்பு இருந்ததுபோலவேதான் இன்றும் இருக்கிறது. முன்பைவிட இப்போது சற்றே பருத்திருக்கிறது. கிளைகளெல்லாம் முன்பிருந்தது போலவேதான் இருக்கின்றன.

ஆலமரத்தின் அழகான சிவந்த கொழுந்துகளை அவனுக்கு மிகவும் பிடிக்கும். கூர்மையான, அழகான அமைப்புள்ள தளிர்கள்-பக்கத்தில் வேங்கை மரங்களும் இருக்கின்றன. மரங்கள் எல்லாமே அழகு உடையவைதான். தளதளவென்று நோயற்று இருப்பவைதான்.

ஆலமரத்தின் இலைகளின் இடுக்கு வழியாகத் தெரிந்த, சிறிய துண்டு துண்டான ஆகாயம் பார்க்க அழகாயிருந்தது. மரத்தின் மேலே எழுந்திருந்த வேரில் தலை சாய்த்துப் படுத்துக் கொண்டு, அவன் அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான். சூரியன் சற்றே மங்கியிருக்கிறான்; இருந்தாலும் வெய்யிலின் கடுமை குறையவில்லை இன்னும். அப்போது அவன் தனியாகத்தான் படுத்துக்கிடந்தான். ஆனாலும் அவனுக்குத் தனியாய் இருப்பதாகத் தோன்றவில்லை. தனக்குத்தானே ஏதோ பேசிக்கொண்டான். அதை யாரும் ஏற்றுக் கொள்ளவில்லை.

அவனுடைய மாடுகள் சந்தோஷமாக மேய்ந்து கொண்டிருந்தன.

காட்டுக்குள் ஒரு பறவை மிகவும் நீளமான குரலில் கத்திக்கொண்டிருந்தது. அந்தச் சத்தம் அவனுக்குப் பரிச்சயமான சத்தம்தான். அந்தப் பறவையைக் கூப்பிட வேண்டும் என்றிருந்தது அவனுக்கு. அது எங்கே இருக்கிறதென்று பார்த்தான். எங்கோ வெகு தூரத்தில் இருக்கிறது அது. அதைப் பார்க்க முடியாது.

அவனுடைய பார்வை யதேச்சையாக வேங்கை மரத்துக் கிளை மீது விழுந்தது. அதோ, அது தேனடை அல்லவா; ஆமாம் தேனடைதான். அவன் மனம் துள்ளியது. தரையிலிருந்து பனிரெண்டு கஜதூரத்தில் வேங்கை மரக்கிளையில் ஒரு பெரிய தேனடை இருக்கிறது. இரண்டு முழ நீளம் தொங்குகிறது.

யாரும் இதுவரை இதைப் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் இருக்குமா இங்கே. பெரிய தேனடை நல்ல முறையில் அறுத்து எடுத்தால், ஏழெட்டுப் படி தேன் கிடைக்கும்.

பௌர்ணமிக்கு இன்னும் எத்தனை நாள் பாக்கி இருக்கிறது; நேற்று இரவில் ஒரே இருட்டாயிருந்ததே.

அவன் வெகுநேரம் தேனடையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

தன் ஒருவனால் இதை அறுத்து எடுக்க முடியாது. மரத்தின் மேல் ஏறவோ, தேனடையை அறுக்கவோ நேபாலித் தெரு பீமன்தான் சரியான ஆள். அவன் எதற்குமே அஞ்சாதவன். இவ்வளவு பெரிய மரங்களில் ஏறி அவன் கிளைகளை சாவகாசமாக வெட்டுவான். அவனைத்தான் சேர்த்துக்கொள்ள வேண்டும் இந்த காரியத்திற்கு.

இதற்கு இரண்டுபேர் அவசியம் வேண்டும். குலச் கீழே இருப்பான்; பீமன் மரத்தில் ஏறித் தேனடையை அறுப்பான். இதற்கிடையில் இது வேறு யாருக்கும் தெரியாதிருந்தால் கொண்டாட்டம்தான்.

இன்று சாயங்காலமே பீமனோடு பேசி ஏற்பாடு செய்தல் வேண்டும். அவன் கஞ்சா குடிக்கிற ஆசாமி; எங்கே என்ன செய்து கொண்டிருக்கிறானோ தெரியாதே.

குலச் மாடுகளை ஓரிடத்தில் ஓட்டிச் சேர்த்தான். சூரியன் மேற்குக் கடலில் மூழ்கிக் கொண்டிருக்கிறான். வெயில் குறைவாகவும் சுகமாகவும் ஆகியிருக்கிறது. இன்று அந்தியிலேயே போய் பீமனுடன் பேசி ஏற்பாடு செய்யவேண்டும்.

அவன் பார்வை மேற்கு வானத்தின் மீது திரும்பியது. அந்தப் பக்கத்தில் இருந்த மரமில்லாத ஒரு பகுதியின் வழியாக சூரியன் மறையும் பொன்னான காட்சியைத் தூரத்து வானில் கண்டான். கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு கை, உருகி ஓடும் தங்கத்தில்

சிந்தூரப்பொடியைக் கலந்து, கை கையாக அள்ளி மரம் செடிகொடிகள் அனைத்தின் மீது தெளித்து விட்டதோடு, மழையில் நனைந்து கழுவப்பட்ட இலைகள் செக்கச் செவேல் என்று பளிச்சிடுகின்றன. வானத்தில் நடுவே பரந்து படிந்த மேகங்கள், ஆயிரக்கணக்கான வண்ணங்களில் பார்க்க மிகவும் விசித்திரமாயிருந்தது.

மாடுகளின் கண்களும் ஒளிபெற்றுத் திகழ்ந்தன. குலச் ஆடாமல் அசையாமல் இருந்தான். அவன் ஆட்கொள்ளப்பட்டான். அவன் யாவற்றையுமே மறந்து விட்டதுபோல் ஆனான். காட்டில் எங்கோ காட்டுப்பூக்கள் மலர்ந்து கொண்டிருந்தன. தொலைவிலிருந்து ஒரு நறுமணம் வந்து அவன் மூக்கைத் தொட்டது. அவன் இமை கொட்டாமல் ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். மாலை வேளையின் இந்த வண்ணக் கோலம் அவனை, இளமை, வாலிபம், கடந்தகாலம், வருங்காலம் அனைத்தையும் ஒருங்கே அனுபவிக்க வைத்தது. அவன் இதயம் மலர்ந்து விழுந்தது. எழிலில் அவனுக்கு இருந்த மோகம் அவனுடைய ஏழைமை முழுவதையும் போக்கி விட்டது.

பழைய புல்லும் பூண்டும் கூட உயிர் பெற்றிருக்கின்றன; புதிய ஆகாசமும் உயிர் பெற்றிருக்கிறது. குலச் தன்னையும் இவற்றில் ஓர் அங்கமாக உணர்ந்தான். இந்த ஆகாசத்தின் இதே புல் பூண்டுகளின் கதகதப்பில்தான் அவன் வளர்ந்திருந்தான். அவனுடைய இரத்தத்தில் இந்த இயற்கையின் ஆழமான அன்பின், பாசத்தின் துடிப்பு இருக்கிறது.

எல்லாமே அவனுடையவை. அவன் உயிருக்கு பரிச்சயம் உள்ளவை. ஆனந்தக் களிப்பில் துள்ளியெழும் மனத்துடன், அவன் மாடுகளை முன்னே விரட்டியவாறு, தன் வீட்டின் பக்கம் சென்றான். ஈரமாகியிருந்த பூமியில் அவனுடைய கால்கள் தத்தளித்தன.

கையிலிருந்த கம்பால், சாலையோரங்களில் இருந்த மரங்களை அடித்துக் கொண்டே போனான். அவன் உள்ளம் துருதுருவென்றது. அவனது மனத்திற்கு உட்புறத்திலும் ஒரு வண்ண வானம் கவிந்திருந்தது போலும்.

எதிர்புறத்திலிருந்து கார்த்திக் வந்தான். இருவரும் சந்தித்தனர்.

"குலச் எப்போ வந்தாய்?"

குலச் அவனுக்குப் பதில் சொல்லும் அவசியமே இல்லை. "ஏண்டா, கார்த்திக், நீ மரத்தில் ஏறுவாயா? பெரிய உயரமான மரம்."

கார்த்திக் தன்னால் முடியாது என்றான்.

அப்படியானால் நீ போ.

அவன் போய்விட்டான். சிறிது தூரம் போனதும் பசீர் வந்தான். அவன் தோளில் கலப்பை செய்வதற்கான மரக்கட்டை இருந்தது.

"கலப்பையா?"

"ஆமாம், அதற்காகத்தான் பத்ரேசுவரன் வீட்டின் பெரிய மரத்தை வெட்டினார்கள். அதன் துண்டுதான் இது. இரண்டு அணாவுக்கு வாங்கிக் கொண்டார்கள்.

குலச் அந்த மரத்துண்டை கவனித்துப் பார்த்தான். பிறகு, "பௌர்ணமி என்றைக்கடா பசீர்?" என்று கேட்டான்.

"பௌர்ணமியா? இன்னும் ஆறு ஏழு நாட்கள் பாக்கி இருக்கலாம். இந்த நாட்களில் பெய்யும் மழையில், நிலவா இருட்டா என்று தெரியவே இல்லையே"

"சரி போ..."

சிறிது தூரம் போனதும் பசீர் திரும்பிப் பார்த்து இரைந்து. "நீ நிறைய நிலம் செய்நேர்த்தி பண்ணி இருப்பதாகக் கேள்விப்பட்டேனே" என்றான்.

"யார் சொன்னது? சும்மா ஒரு இரண்டு துண்டு நிலம்தான்..."

பசீர் போய்விட்டான்.

அப்புறம் சந்திரன் வந்தான் அதே வழியில். சந்திரனை பழைய டாலிம், புதிய டாலிம், ஸபரியா ஆகிய எல்லா கிராமத்து ஜனங்களும் நன்கு அறிவார்கள். அவனுடைய தாத்தா ஸீவாராம் என்ற கிழவன், நாட்டாண்மைக்காரன். பல பேர்கள் அவனை நாட்டாண்மைக்காரக் கிழவனுடைய பேரன் என்றே அழைக்கிறார்கள். சந்திரனுடைய அப்பன் மிகவும் ஊதாரி. தன் தந்தையின் ஆஸ்தியை அவன் ரொம்ப நாள் பாதுகாத்துக் கொள்ளவில்லை. நாளுக்கு நாள் அவன் நிலைமை மோசமாகி

வந்தது. தன் மகன் சந்திரன் பள்ளிப்படிப்பை முடித்ததும், நகரத்தில் தன் தகப்பனாருக்குப் பழக்கமான ஒரு வக்கீல் வீட்டில் விட்டிருந்தான். சந்திரன் வக்கீல் வீட்டு வேலைகளைச் செய்து கொண்டு, ஹைஸ்கூலிலும் படித்துக்கொண்டிருந்தான். சந்திரன் படிப்பில் சற்றே கெட்டிக்காரன். ஆனால் அவன் ஆறாவது வகுப்பில் படிக்கும்போது, அவன் அப்பன் குடல் நோயால் இறந்துபோய்விட்டான். மேலே படிக்க முடியவில்லை. ஊருக்கு வந்து விவசாயத்தில் ஈடுபட்டிருந்தான்.

அவன் அதிகம் படிக்காவிட்டாலும், டாலிம் கிராமத்து ஜனங்களுக்கு அவன் பெரிய அறிவாளி. பெரிய மனிதனும் கூட. எல்லோரும் அவனிடம் ஆலோசனை கேட்பார்கள். அவனுடன் கலந்துதான் எதையும் செய்வார்கள். எப்படிச் செய்யலாம் என்று அறிவுரை தரும்படியும் கேட்பார்கள். அவனும் நல்ல துணிச்சல் உள்ளவன். நல்ல தாராளமான மனம் அவனுக்கு. எதற்கும் பயப்படமாட்டான். அவனுக்கு வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்ற வித்தியாசமும் கிடையாது. கிராமத்தையே அவன் தன் குடும்பமென நினைப்பான்.

அவன் யாருக்கும் ஒருதலைப்பட்சமாக எதுவும் செய்யமாட்டான். எந்தக் கட்சியில் நியாயம் இருக்கிறதோ அதையே பேசுவான். அதனால் ஊரில் பலருக்கு பயம் உண்டு; ஆனால் அவனுக்கு யாரும் பகைவர் இல்லை. அவன் இன்றுவரை யாருக்கும் எத்தகைய தீமையும் செய்ததில்லை.

இன்று சந்திரன் வாலிபன் ஆகிவிட்டான். பருமனும் திரட்சியும் கொண்டு ஆரோக்கியமாயிருந்தான். தன் விவசாய வேலைகளைத் தானே செய்து கொண்டான். அவனுடைய தாயாரும் சின்னத் தங்கையும் அவனுக்கு உதவுவதுண்டு. அவனும் அதற்குப் பதிலாக அவர்களுக்கு உழுது கொடுப்பான். மற்றவர்களுக்கு ஆலோசனை கூறுவான்; தன் சொந்தக் காசையும் பொதுக்காரியங்களுக்குச் செலவு செய்தான். ஆகவே ஊரில் அவனுக்கு மதிப்பு உயரத்தானே செய்யும். எல்லாருமே அவனுக்குப் பயப்படுகிறார்கள். அவன் இடையிடையே நகரத்திற்குப் போய்க்கொண்டிருப்பான். அவ்வப்போது அதிகாரிகளையும், பெரிய மனிதர்களையும் அவன் கண்டு பேசுவதாகவும் சொல்கிறார்கள் ஜனங்கள். மொத்தத்தில் அவன் கிராமத்திற்கே ஒரு நம்பிக்கைக்குரிய மனிதன். அவன் எப்போதாவது சண்டையும் போடுவதுண்டு. நிறையவே

பேசுவான். அவன் அதிகமாக ஆங்கிலம் படித்ததில்லை; இருந்தாலும் ஆங்கிலம் பேசுவான். கிராமத்தின் படிக்காத குழந்தைகள் அவனைப் பார்த்து ஆச்சரியப்படும். செருப்பு போட்டுக் கொள்வதில்லையே தவிர, 'பேண்ட்' போட்டுக் கொள்கிறான். தன் தோழர்களுடன் பேசும்போது, அஸாமி பாஷையுடன் ஆங்கிலம் கலந்து பேசித் தன் பெருமையைக் காட்டிக்கொள்கிறான். அவனுக்குச் சுமார் இருபது வயது இருக்கும். கிராமத்தின் சிறுபெண்கள் பலரையும் வம்புக்கு இழுத்து, அவர்களிடமிருந்து வசவும் திட்டும் வாங்கிக் கட்டிக்கொள்வான். இன்னும் அவனுக்குக் கல்யாணம் ஆகவில்லை.

சந்திரன் பல வழிகளில் பணம் சம்பாதிக்கிறான். அவசியமான சந்தர்ப்பங்களில் பிறருக்கு ரூபாய் இரண்டோ, நாலோ கடன் கொடுக்க முடிகிறது அவனால்.

அவனுடைய தாராளத்தில் ஒரு தனிச்சிறப்பு என்னவென்றால், பிறர் அவனைக் கேட்காமலேயே அவன் அவர்களுக்கு வழங்கும் உபதேசங்கள்.

அவனால் எல்லோர்க்கும் எல்லாவிதமான பெரிய அறிவுரைகளையும் வழங்க முடியும்; வழங்கவும் செய்கிறான். அதிகமான செல்வம் கொண்டவனில்லையே தவிர, அவன் மனம் மிகவும் விசாலமானது. அவன் உபதேசம் யாருக்காவது பயன்படுவதும் உண்டு, பயன்படாமல் போவதும் உண்டு. அவனிடம் எப்போதும் மூன்று சாமான்கள் கட்டாயம் இருக்கும்; பீடி, மலிவான ஒரு பேனா, ஒரு சீப்பு. அஸாமியிலும் ஆங்கிலத்திலும் கையெழுத்துப் போடுவான் பெருமையாய்.

வீட்டுக்குப் போகும் மாடுகள் தாமாகவே போகும்.

சந்திரனைப்பார்த்து குலச் நின்றான். "சந்திரா, எங்கே போகிறாய்?"

"ஸோமஸ் பரபாயின் வீட்டிலிருந்து வருகிறேன்"

"அந்திப் போதாகிவிட்டது; ஒரு பீடி கொடுப்பாயாம்"

"ஆகட்டும் தருகிறேன்; எத்தனை பீடி குடிப்பாய்? நெருப்பு இருக்கிறதா?"

"நீ கொடு; அந்த வீட்டிலிருந்து கொளுத்திக் கொண்டு வருகிறேன்"

சந்திரன் பீடியைக் கொடுத்துவிட்டு "எங்கிருந்து வருகிறாய்?" என்றான்.

"மாடுகளை மேய்த்து வந்தேன். கொஞ்சம் இரு; இதோ பீடியைக் கொளுத்திக் கொண்டு வந்து விடுகிறேன்."

குலச் பக்கத்தில் இருந்த ஒரு வீட்டிற்குப் பீடியைக் கொளுத்தச் சென்றான். இதற்குள் சட்டைப் பையிலிருந்து சீப்பை எடுத்துத் தலையை வாரிக் கொண்டான். "உனக்கு நியூஸ் தெரியுமா?" என்றான்.

குலச் அவனை நிமிர்ந்து பார்த்தான். "என்ன 'நியூஸ்'?"

"சேனிமாயி கல்யாண விஷயம்தான். சிபரியா கிராமத்திலிருந்து யாரோ ஒரு காண்டிடேட் கிளம்பியிருக்கிறானே, என்ன தைரியம்!"

சந்திரன் சொன்னது புரியாததால், "நீ எங்கே கேள்விப் பட்டாய்?" என்று கேட்டான் குலச்.

"ஐ நோ எவ்வெரி திங்; என்ன யோசிக்கிறாய்? நீ சொன்னால் நான் அதைச் சரிப்படுத்தி விடுகிறேன். சேனிமாயின் அப்பன் உன்னை எத்தனை இன்ஸல்ட் பண்ணிவிட்டான்".

"நீ ஒன்றும் செய்ய வேண்டாம்; யாருக்கு எவனைப் பிடிக்கிறதோ அவனைக் கல்யாணம் செய்து கொள்ளட்டுமே. ஒரு தடவை அவளைக் கொண்டு வந்தாயிற்று. நடந்தது நடந்து விட்டது.

"நீ ஒரு கழுதை; நானாயிருந்தால் அவளை விட்டு விடுவேனா? வாட்டெவர் ரிஸல்ட். நான் எல்லாவற்றையும் சரி செய்திருப்பேன்; உன் அப்பாக் கிழவனும் பெரிய போக்கிரி".

தன் அப்பனைப் பற்றிச் சந்திரன் சொன்னது குலச்சுக்குப் பிடிக்க வில்லை. அவன் பேசாமல் இருந்து விட்டான்.

"அப்போ நீ வேறு மேரேஜ் செய்து கொள்ளப் போவதில்லையா?"

"இப்போ எப்படிக் கல்யாணம் நடக்கும்? வீடு வாசல், நிலம் சொத்து ஒன்றுமே இல்லையே எனக்கு?"

"வீட்டையும் வாசலையும் சுட்டுப் பொசுக்குடா; பியூட்டிஃபுல்லா ஒரு பெண்ணைப் பார்த்து, என்னிடம் பாயின்ட் அவுட் பண்ணிவிடு. நானாச்சு மற்றதுக்கு யூ. ஸீ".

சற்றே இப்படியும் அப்படியும் பார்த்துவிட்டு, "தராவைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டான் குலச்.

"தராவா? எந்த தரா? சுபாஹு அத்தை மகள்தானே? ப்யூட்டிஃபுல். இதைப்பற்றி நீ ஏன் இத்தனை நாள் சொல்லவில்லையே? அவள் சித்தி கூட இப்போதும் ப்யூட்டி புல்லாத்தான் இருக்கிறாள். முழுக்க முழுக்க ஒரு யங் கேர்ள் மாதிரித் தான் இருக்கிறாள்"

"இதை நீ யாரிடமும் சொல்லாதே சந்திரா; உன்னிடம் மட்டுமே சொல்லியிருக்கிறேன். இது என் மனத்திற்குள் இருக்கும் எண்ணம். ஆரம்பத்தில் சற்றே பந்தோபஸ்து இல்லையென்றால்..."

"சுட்டுப் பொசுக்கு; எல்லாம் நடக்கும். நான் இருக்கிறேன், கவலைப்படாதே. இன்னுமொரு பீடி குடி. நோ டைம். நான் போகிறேன். நீ போ; நான் எல்லாத்தையும் சரிப்படுத்திவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, மகிழ்ச்சியுடன் சென்றான் சந்திரன். குலச்சும் நகர்ந்தான். அவன் மனத்திலும் மகிழ்ச்சிதான். பீடியைக் கைப்பிடிக்குள் வைத்துக்கொண்டு விட்டுக்கு வந்து சேர்ந்தான். ஒரு பீடிக்கப்புறம் இன்னொரு பீடி கிடைத்ததும் உடனே அதைக் குடிப்பது சரியில்லை. அதை இரவு சாப்பிட்டபின் குடிக்கலாம் என்று நினைத்தான்.

மேகங்கள் கலைந்தன. நிலவு வெளிப்பட்டது. இன்னும் இரண்டொரு நாளில் பௌர்ணமி வரும். இரண்டு நாட்கள் கழித்து அவன் வயல்காட்டுப் பக்கம் போனாலும் பழுதில்லை. இந்தத் தேனடையை அவனால் விட்டுவிட முடியாது.

சாப்பிட்ட பின் இரவே குலச் பீமன் விட்டுக்குப் போனான். பீமன் கணக்குப் போட்டுப் பௌர்ணமிக்கு இன்னும் மூன்று நாட்கள் பாக்கியிருப்பதாகச் சொன்னான். "நாளை போக மறுநாள் அறுத்து எடுத்தாலும் தேன் இனிக்கும். எங்கே இருக்கிறது அது?" என்று கேட்டான் பீமன்.

"நீயே நேரில் பார்க்கலாம், பெரிய தேனடை, சரி, நாம் நாளை மறுநாள் போவோம்"

பிமனுடன் ஏற்பாடு செய்து கொண்டாகிவிட்டது. வேறு யாரும் வேண்டியதில்லை துணைக்கு. ராத்திரி சாப்பிட்ட பிறகு போக வேண்டும். இரண்டு பானையும் கொண்டுபோக வேண்டும். கை வாள் இரண்டும் வேண்டும். புலி பயம் உண்டு; அதிலும் ராத்திரி நேரம்.

நோபாலிப் பேட்டையிலிருந்து அவன் நேரே வீட்டுக்குத்தான் கிளம்பினான். ஆனால் தராவை ஒரு தடவை பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்ற ஆசை தோன்றிற்று. அவன் போகும்போதெல்லாம் கபாஹி வந்து குறுக்கே நிற்கிறாள். தராவை நெருங்க விடாமல் விரட்டுகிறான். அவன் கருத்தை கபாஹி தெரிந்து கொண்டு விட்டாளோ.

"அக்கா, என்ன தூங்கியாகி விட்டதா?" என்று கதவருகில் நின்று மெல்லிய குரல் கொடுத்தான் குலச்.

"ஆமாம், யார் அது?" என்று அரைத் தூக்கத்தில் விழித்துக்கொண்டு பதில் சொன்னாள் கபாஹி.

"நான்தான்; தூங்கிவிட்டால் சரி...எழுந்திருக்கவேண்டாம், ராத்திரிப் போது" என்றான் குலச்.

கபாஹி கதவைத் திறந்தாள். தரா தூங்கிப் போய்விட்டிருந்தாள்.

"வா, உள்ளே வாயேன். இந்த ராத்திரியில் எங்கிருந்து வருகிறாய்?"

"இங்கே ஓர் இடத்திற்குப் போயிருந்தேன்" குலச், உட்கார்ந்துகொண்டான். கபாஹி கதவை அழுத்தி மூடித் தாழிட்டாள். "நீ வயல்காட்டுக்குப் போய்விட்டாய் என்று நினைத்தேன். இத்தனை நாட்களில் ஒருநாள் கூட நீ வரவில்லையே," என்று சொல்லிவிட்டு விளக்கை எடுத்து ஆட்டிப் பார்த்து, "இதில் எண்ணெய் ஆகிவிட்டது" என்றாள்.

"தரா எங்கே? தூங்கிவிட்டாளோ?" என்று கேட்டான் குலச்.

"அவள் தூங்கி ரொம்ப நேரமாகிவிட்டது. குழந்தைதானே அவள்; பாயில் படுத்ததுமே அவளுக்குத் தூக்கம் வந்துவிடுகிறது. நம்மைப் போலவா? உலகத்தைப் பற்றிய பல கவலைகள் நமக்கு. தூக்கமே வருவதில்லை." என்றாள் கபாஹி.

விளக்கின் வெளிச்சம் குறைந்து கொண்டிருந்தது. குலச் அவளை ஒரு முறை நேராகப் பார்த்துவிட்டு "சரி, சும்மா இப்படி வந்தேன். தூங்கு, நான் போகிறேன்."

"அவசியம் போகவேண்டுமா? சற்றே உட்காரேன்; ஒரு வெற்றிலைதான் போட்டுக்கொள்ளக்கூடாதா?"

"அதற்கென்ன, இருக்கட்டும்." குலச் எழுந்துவிட்டான்.

"சரி அப்போ நீ போ. வயல் பக்கம் என்றைக்குப் போவாய்?"

"நாலாம் நாள் போவேன், ஏன்?"

"அப்படியென்றால் நாளை மறுநாள் நீ இருக்கிறாய்.."

"ஆமாம்.."

"அன்றைக்கு இரவு முடிந்தால் வாயேன்; உன்னிடம் கொஞ்சம் பேசவேண்டும்"

"முடிந்தால் வந்துவிடுவேன், ஆனால் முன்னாடியே சுருக்க வரமுடியாது"

"எங்கேயாவது போகிறாயா?"

தேனைப்பற்றிச் சொல்வது நல்லது என்று படவில்லை அவனுக்கு. சற்று யோசித்தபின், "நம் மீது எல்லாருடைய கண்ணும் இருக்கிறது என்று உனக்குத் தெரியும், நிச்சயமாய், நான் போதொடு சுருக்க இங்கே வந்து, அதை எவனாவது பார்த்துவிட்டு இங்கேயும் அங்கேயும் எதையாவது பேசிக்கொண்டு அலைவான்; எனக்கு அது விருப்பமில்லை."

அவன் போகும்போது, கதவருகில் சென்று, "நாளை மறுநாள் தராவை அவளுடைய மாமா அழைத்திருக்கிறான். அவள் போய்விட்டால் நான் தனியாகத்தான் இருப்பேன். நீ வாயேன் கட்டாயம். தனியாயிருக்க எனக்குப் பயம்.."

"சரி, கட்டாயம் வருகிறேன் அக்கா. நான் வருகிறேன்."

குலச் மெதுவாகப் புறப்பட்டான்.

கபாஹி சிறிது நின்று, உள்ளே வந்து கதவைத் தாழ்ப்பாள் போட்டாள்.

பாதைக்கு வந்ததும் குலச் ஆகாயத்தைப் பார்த்தான். நாளைக்கு மறுநாள் திரயோதசியோ, சதுர்த்தசியோ..பௌர்ணமி. சந்திரன் மிகவும் அழகாக விளங்குவான். மனம் மலர்ந்து மகிழ்ச்சி கொள்கிறது.

நாளை மறுநாள் தேனடையை அறுந்த பிறகுதான், கபாஹி அக்காவின் வீட்டுக்குப் போக முடியும். இரவு எத்தனை நேரம் ஆகுமோ. நிச்சயமாகச் சொல்ல முடியாது.

ஆனால் அன்று தரா இருக்க மாட்டாள் அங்கே. அவள் இல்லையென்றால் அங்கே போகவே பிடிக்காதே. தரா ரொம்பவும் அழகி ஆகிவிட்டாள். சேனிமாயியைவிட ரொம்ப அழகு. ஊரில் எவனாவது பிடித்து இழுத்துக் கொண்டு போய்விடப் போகிறானே அவளை. அவளுக்கோ தாயார் இல்லை. அவள் தானாகவே யாருடனாவது ஓடிப்போய்விட்டால் கூட, அக்காவால் என்ன செய்யமுடியும்? சந்திரனை விட்டு இதைப் பற்றிச் சொல்லிவைக்கச் செய்யவேண்டும். இதில் நான் வெட்கப்பட என்ன இருக்கிறது? சமயம் வரும்போது, நாளைக்கு நானே நேரில் சொல்லி விடுகிறேனே. அவர்கள் இரண்டு பேரையும் நான் என்னுடன் வயற்காட்டுக் குடியிருப்புக்கு அழைத்துக்கொண்டு போய்விடுவேன். அம்மாவையும் அழைத்துக்கொள்கிறேன். கொஞ்சம் அதிகம் நிலத்தைச் சாகுபடிக்குக் கொண்டு வந்து. ஒரு ஜோடி பெரிய மாடும் வாங்கிக் கொண்டுவிட்டால், வீட்டில் மூன்றுபேர் மற்ற வேலைகளைக் கவனித்துக்கொண்டால், மிகவும் சுலபமாகவே ஐந்தாறு ஏக்கர் நிலத்தை உழுது பயிரேற்ற முடியாதா என்ன? தராவின் அதிர்ஷ்டம் எப்படி இருக்கிறதோ; எனக்கும் அம்மாவுக்கும்கூட அதிர்ஷ்டம் வரவேண்டும். / சந்திரன் மூலமாக இதைச் சொல்லச்செய்யவேண்டியது அவசியமே இல்லை. நானே நேரில் சொல்கிறேனே. சேனிமாயிக்குக் கல்யாணம் ஆகட்டுமே; நான் தராவைக் கல்யாணம் செய்து கொள்கிறேன். தராவுக்கு நிகரானவளா அவள்? தரா மருமகளாக வந்தால், அம்மாவுக்குச் சந்தோஷம் தாங்காது. தரா ஒப்புக் கொள்ள வேண்டும். |

## ஐந்து

"யார் அது?" கதவு திறக்கும் சத்தத்தைக் கேட்டு குலச்சின் தாயார் கேட்டாள்.

"நான்தான், நீ தூங்கிவிட்டாயா? விளக்கை, கொளுத்தேன்" அம்மா விழித்துக்கொண்டு வந்தாள். "இத்தனை நாழி எங்கே போயிருந்தாய்? மறுபடியும் ராத்திரியில் ஊர்சுற்றும் பழக்கம் வந்துவிட்டதா?"

"ஊர் சுற்றப்போகவில்லை, பீமன் வீட்டுக்குப் போயிருந்தேன்."

பிறகு அம்மாவிடம் தேனடை பற்றிய சமாசாரம் அனைத்தையும் சொன்னான். அதைக் கேட்டு அவளும் சந்தோஷப்பட்டாள். "ஒருக்கால் உன் அப்பாவைப்பற்றி விசாரிக்கப் போயிருந்தாயோ என்று நினைத்தேன்" குலச் பொறுமையிழந்தான். "அதைப்பற்றி என்னிடம் சொலலாதே; யாராவது சாகவேண்டுமானால் செத்துப் போகட்டும். உனக்குப் பார்க்க வேண்டும்போல் இருந்தால், போய் பார்த்துவிட்டு வா. உங்களுக்கெல்லாம் வெட்கம் மானமே கிடையாது.."

அவளுக்கும் கோபம் வந்துவிட்டது. "எனக்கென்னடா வந்தது? பட்டத்து அரசி இருக்கிறாள். மருமகள் இருக்கிறாள். நன்றாய்ப் பணிவிடைகள் செய்து பார்த்துக் கொள்வார்கள். சாகிறபோது வாயில் ஒரு சொட்டுத் தண்ணீர் ஊற்றப்போகிறவள் யார் என்று தான் பார்க்கப்போகிறேனே.." அம்மா இப்படிப் பேசியதில் குலச்சுக்கும் சந்தோஷம். அவனைப்போலவே அம்மாவும் சொன்ன சொல்லில் உறுதியுடன் இருக்கிறாள்.

"சரி, நேரமாகிவிட்டது, தூங்கு, எதாவது சத்தம் போடாதே" என்றான் குலச்.

"பேசினால் போறுமாடா? முன்பொரு தடவை ஊரைச்சுற்றிவிட்டு எவளையோ அழைத்து வந்தாய்? ஊர் சிரித்ததே உனக்கு நினைவில்லையா? பீமன் வீட்டுக்கோ, வேறு யார் வீட்டுக்கோ போவதானாலும் பகல் நேரத்தில் போயேன். எவன் எங்கே போனான், யார் யாரைப் பார்த்தார்கள் என்று கணக்கெடுப்பதைத் தவிர, இந்த ஊருக்கு வேறு வேலையே கிடையாதே. பகைவனுக்கு இடமே கொடுக்கக்கூடாது"

"நான் வயற்காட்டுக் குடியிருப்புக்கே போய்விடப் போகிறேன். வீடும் கட்டிக் கொண்டு, உன்னையும் அழைத்துக்கொண்டு.." அம்மா அவன் முகத்தைப் பார்த்தாள்.

"என்னிடம் விளையாடாதே குலச்; பிறந்த மண்ணை, இந்த ஊரை விட்டுவிட்டு அக்கரைக் குடியிருப்புக்கு நான் ஏன்

வரவேண்டும்? நான் சாவதானாலும் இங்கேதான் சாவேன். ஊரை விட்டு ஏன் போகவேண்டும்?" என்று கடுமையாய்க் கூறினாள் அம்மா. "ஏன் அங்கே மனிதர்களே இல்லையா என்ன? இன்னும் கொஞ்சம் அதிகமாக நிலத்தைச் சீர்படுத்திவிட்டால், இங்கிருப்பதைவிட இன்னும் அதிக சுகமாக இருப்போமே.."

"ஆமாம், பெரிய சுகம். இருக்கும் இடத்தைவிட்டுப் போவதும் மானம் போவதும் ஒன்றுதான். சொந்த ஊரில், குடிசையில் வாழ்ந்து பிச்சையெடுத்துச் சாப்பிட்டாலும் சாப்பிடுவேனே தவிர ஊரைவிட்டு வெளியே வருவேனா? நீ என்ன வேண்டுமானாலும் செய்; என் காதில் போடாதே அதை."

குலச்சுக்கு உண்மையிலேயே அம்மாவிடம் பயம் ஏற்பட்டது. அவள் எப்போதுமே பொய் பேசமாட்டாள்; வெறும் பேச்சும் பேசமாட்டாள். இவளை இப்படிப் பேசி ஏமாற்ற முடியாது. அவன் வெற்றிலைப் பெட்டியிலிருந்து, ஒரு பாக்குத்துண்டை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு, சட்டைப் பையிலிருந்து பாதி பீடித்துண்டை எடுத்துப்பற்ற வைக்க ஆரம்பித்தான்.

"வயல் காட்டுக் குடியிருப்பில் வீடுகீடு கட்டவேண்டாம்; முடிந்தால் இங்கேயே ஒரு நல்ல இடம் பார்த்து, நல்லதா ஒரு வீடு ஏற்பாடு செய், தண்ணீர் ஒழுகும் வீட்டில் இன்னும் எத்தனை நாள் இருப்பது?" என்றாள் அம்மா.

குலச் ஒன்றுமே பேசவில்லை. அவன் இளம் வயது வாலிபனாய் இருந்தும், மற்றவர்களைப்போல் எப்போதும் வேலை செய்துகொண்டிருப்பதில்லை. அவன் மனம் மிகவும் மென்மையானது. ஒரு அழகான இலையைப் பார்த்தால் கூட, அவன் மற்ற வேலைகளை மறந்து விடுவான். வானத்தில் தவழும் ஒரு மேகத்துண்டைப் பார்த்தாலும் அவனுக்குச்சோறும் தண்ணீரும் மறந்துபோகும். காட்டில் ஏதாவது பறவைகள் ஒலியைக் கேட்டால் அவன் அதில் ஈடுபடுவான். அவனால் எந்த வேலையிலும் முழுமனத்துடன் ஈடுபாடு கொள்ள முடிவதில்லை.

அம்மா என்ன சொன்னாலும், வயல் வெளியில் ஒரு வீடு கட்டித்தான் ஆக வேண்டும். ஆற்றின் கரையில் அழகான ஒரு வீடு - தாராவுக்காக. மருமகள் வந்து உதவியாய் இருந்து, பணிவிடை செய்யும்போது அம்மாவின் கோபமெல்லாம் பறந்துபோய்விடும். தாரா அம்மாவுக்கு மரியாதை காட்டி ஆதரவுடன் நடந்துகொண்டால், எல்லாம் [illegible] சரியாகிவிடும்.

படுக்கையில் படுத்துக்கொண்டு அம்மா தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள் :

"இவனோடு ஒத்த வயதுள்ளவர்கள் எல்லா... யாணம் செய்துகொண்டு, குழந்தை குட்டிகளுடன் வா... ...ந்த மாதிரி ஊர் சுற்றியாக இருப்பவன் குடும்பம் எ... ? மனதைக் கட்டுப்படுத்தினால்தானே; ஊர்சுற்... ...டான்; இத்தனை வயசு ஆயிருக்கு; வீட்டைச் சரி ப... ...லை. நாள் முழுவதும் ஊரைச் சுற்றினால் குடும்பம் நடக்... ...றும் துணியும் கிடைக்குமா?.."

பீடியின் கடைசிக் கட்டையை உறிஞ்சி இழுத்துவிட்டு, "எங்கேயும் போகாமல் வீட்டில் உட்கார்ந்து உன் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தால் வயிறு நிரம்பி விடுமோ; நீ வரவில்லையென்றால் இங்கேயே இரு; நான் வயல்வெளியில் வீடு கட்டத்தான் போகிறேன். ஆவது ஆகட்டும்" என்றான் குலசு.

அம்மா பதில் பேசவில்லை. சிறிது நேரத்தில் அவள் தூங்கிவிட்டாள்.

பாயைக் கூடத்தில் விரித்து, எண்ணெய் படிந்த தலையணையில் தலையைச் சாய்த்து உடம்பை நீட்டினான். அவன் கண்கள் மூடவில்லை. மேலே தெரிந்த கரிய கூரையைப் பார்த்த வண்ணம் யோசனையில் ஆழ்ந்தான். 'இப்படியே இனிமேல் அதிக நாள் ஓடாது; கபாஹி தராவைத் தனக்குத் தர மறுத்தால், பலாத்காரமாகவாவது தராவைக் கொண்டு போய்விடவேண்டும். சந்திரனுடனும் கலந்துபேசி ஆவன செய்யவேண்டும். கபாஹி நடத்தை கெட்டவள்; தராவுக்கு அவள் சொந்தத் தாயாரும் இல்லை. வேறு எவன் தராவைக் கட்டிக் கொள்வான்; பாஹியில் (வயல்வெளிக் குடியிருப்பில்) நல்ல வீட்டைக் கட்டிவிடுவேன்; தராவுடன் ஓடிப்போக நேர்ந்தாலும், அவளைப் பாஹிக்குத்தான் அழைத்துச் செல்ல வேண்டும். அங்கே அவ்வளவு விரைவில் யாரும் தேடிக் கண்டுபிடித்துவிட முடியாது. அவளை இழுத்துக்கொண்டு ஓடிப்போனபிறகு, யார் தேடிக் கொண்டு வரப்போகிறார்கள்.

எண்ணெய் குறைந்து வந்த விளக்கின் வெளிச்சம் குறைந்துகொண்டே வந்து கடைசியில் அதுவும் அணைந்துவிட்டது. வீட்டின் ஓட்டுக் கூரையில் இ...க்கு வழியாக நிலவின் ஒரு கோடு வந்து அவனுடைய தலைய...ணயின் மீது

விழுந்தது. அவன் அதைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். ஆடாமல் அசையாமல் நிலா உள்ளே வந்திருந்தது. அவன் தன் உள்ளங் கைகளை விரித்து அந்தப் பக்கம் நீட்டினான். அவனுடைய உள்ளங்கைகள் ஒன்றில் வெள்ளை நிலா உட்கார்ந்தது.

## ஆறு

டாலிம் கிராமத்தில் இருக்கும் ஸபீயத் கொஞ்சம் பணக்காரன். அவனுக்கு விளை நிலமாகவே பதினான்கு ஏக்கர் இருக்கிறது. அக்கரையில் பாஹுபிலும் அவனுக்குச் சுமார் ஒன்பது ஏக்கர் நிலம் கோடைப் பயிருடன் இருந்தது. பதினெட்டு வயதில் கல்யாணம் செய்து கொண்டான். இப்போது அறுபத்தெட்டு வயது ஆகிறது. இப்போது அவன் உடல் வலிமை மிகவும் நன்றாக இருந்தது.

அவனுக்கு ஐந்து பெண்கள், எல்லார்க்கும் கல்யாணம் ஆகிவிட்டது. அவனுக்கு இப்போது பேரன் பேத்திகள் நிறைய இருக்கிறார்கள். இரண்டு பிள்ளைகள், இருவரும் பெண்களுக்கு இளையவர்கள். பெரிய மகன் ரபியத். அவனுக்கும் பல வருஷங்களுக்கு முன்பே கல்யாணம் ஆகிவிட்டது. அவனுக்கும் இரண்டு பெண்கள். சின்னவனுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. அவனுக்கு இருபது வயதிற்குமேல் ஆகிவிட்டது. [அவனுக்குக் கல்யாணம் ஆகாமல் இருப்பதற்கு எத்தனையோ காரணங்கள்.]

அவன் பெயர் பபீ. அவன் குள்ளம்; அவன் உயரமே சுமார் மூன்றரை அடி. ஒரு கண் பிறவியிலேயே குருடு. வலதுகையின் இரண்டு விரல்களுக்குக் கணுக்களே கிடையாது. இதைத்தவிர அவனுடைய முகமே சற்றுக் கோணல். மேல் வரிசைப் பல்லெல்லாம் துருத்திக் கொண்டு வெளியே தெரியும்; அவன் எப்போதுமே சிரித்துக்கொண்டிருப்பது போலவே தோன்றும்.

பபீ சற்றே ஊமையும் கூட. அவனுக்கு இருந்த கொஞ்சநஞ்சம் பேச்சும் புத்தியும், ஊர்க்காரர்கள் அவனை ஊமை ஊமையென்று சொல்லிக் கூப்பிட்டதால் மறைந்து போய்விட்டது.

ஸபீயக் கிழவனுக்கு பபீயைப்பற்றி வருத்தம் இல்லை யென்றாலும், கவலை உண்டு. அவனுடைய முக்கியமான கவலை

இந்தப் பையனுக்கு எப்படியாவது ஒரு பெண்ணைக் கட்டிவைக்க வேண்டுமே என்பது தான். கிராமத்தில் நொண்டியோ முடமோ, குருடோ செவிடோ யாருமே கல்யாணம் ஆகாமல் இருப்பதில்லை. கல்யாணம் என்பது தவிர்க்க முடியாத மதச்சடங்கு. தர்மம். அந்தக் கல்யாணத்தின் முடிவு எப்படியானாலும் ஆகலாம். கல்யாணம் பண்ணாமல் விடுவது பெரிய குற்றம்; பாவமும்கூட.

ஸபீயக் கிழவன், ஒருக்கால் தன் இளைய மகனுக்குக் கல்யாணம் செய்து வைக்காமல் தான் செத்துப் போனால், தன் கடமையைப் பாதியில் விட்டுச் சென்றதாகும் என்று திடமாக நினைத்தான். எங்கிருந்தாவது ஒரு பெண்ணை ஏற்பாடு செய்தே தீரவேண்டும்.

ஆனால் அப்படிச் சொன்னால் போதுமா? ஸபீயத்தின் மருமகள் என்றால், அழகிலும், குணத்திலும் சிறந்தவளாக, ஊரார் மெச்சத் தக்கவளாக இருக்க வேண்டும். உண்மைதான், ஆனால் அவன் ஸபீயத்தின் மகன் அல்லவா.

அப்படிப்பட்ட பெண் யார்? கபாஹறியின் அக்காவின் மகளான தராதான். அவள் ஸபீயத்தின் மருமகளாகிவிட்டால் எவனாவது அவள்மேல் விரல் நீட்ட முடியுமா? ஆனால் அந்தப் போக்கிரிப் பையன் சந்திரன் இருக்கிறான். அவனைப் பற்றித்தான் கொஞ்சம் பயப்பட வேண்டும். அவனுக்கு ஹிந்து, முஸ்லீம், சின்ன மனிதன், பெரிய மனிதன் என்ற வித்தியாசமே கிடையாது.

கபாஹறியும் தராவும் ஸபீயத்தின் வீட்டில் நெல்குத்த வருவதுண்டு கூலிக்கு. சமயத்தில் தண்ணீரும் கொண்டு வருவார்கள். வயலிலும் சாகுபடி வேலைகளைச் செய்துகொண்டு. பபீ தராவைப் பார்த்திருக்கிறான். தராவும் அவனை அண்ணே என்று அழைக்கிறாள். பபீ பார்ப்பதற்கு அழகாயில்லையே தவிர, அவன் ஆண்பிள்ளை அல்லவா.

பத்துப் பனிரெண்டு வருஷங்களுக்குக் முன்பு ஸபீயத்தே கபாஹறியிடன் சபலம் கொண்டதுண்டு. அவள் புரிந்து கொள்ளும்படி பிரியமும் காட்டினான். அவள் வீட்டிற்குப்போய்ப் பேசிக்கொண்டும் இருப்பதுண்டு; ஆனால் ஒரு நாள் கபாஹறியின் வீட்டில் தன் மூத்தமகன் ரபியைப் பார்த்துவிட்டான்; பிறகு அவனுக்கும் கபாஹறிக்கும் தொடர்பு இல்லாமல் செய்துவிட்டான் கிழவன். அவனுக்குத் தன் மானமரியாதையை எப்படிக் காத்துக் கொள்வதென்பது தெரியும்.

மறுநாள் தன் மகனைக் கூப்பிட்டுக் கண்டித்து எச்சரிக்கையும் செய்தான்; கபாஹி வீட்டிற்கு ரபி இரவு வேளைகளில் போவதை நிறுத்தாவிட்டால், அவனைத் தன் வீட்டிலிருந்து விரட்டிவிடுவதாகவும் சொன்னான். புலிக்குப் பயப்படுவது போலத் தன் தகப்பனிடம் பயப்படுவான் ரபி; ஆக கபாஹியும் அத்தை என்கிற மரியாதையை இழக்க நேரவில்லை.

ரபீக்காகக் கிழவன் ஓரிரண்டு இடங்களில் பெண்ணும் பார்த்திருந்தான். ஆனால் யாரும் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. இரண்டொருவர் வைதும் திட்டியும் கடுமையாகப் பேசிவிட்டார்கள். அந்தக் குருடனுக்குப் பெண்ணைக் கொடுப்பதைவிட, அவளைக்கல்லுடன் கட்டி தன்சிரியாற்றில் தள்ளிவிடலாமே, என்றனர் சிலர். ஸபீயத்தின் மருமகளாகப் போகாததால், தங்கள் பெண்ணுக்குச் சோறு கிடைக்காமல் போனாலும் போகட்டுமே என்றார்கள் சிலர். கிழவனுக்கும் இது தெரிந்தது. பையனைப் பார்த்துதானே பெண் தேடவேண்டும். அந்த ஊமைக்கு ஒரு நல்ல பெண்ணாகப் பார்த்துக் கட்டினால், அவள் அவனை நிம்மதியாக வாழவிடமாட்டாளே.

இப்போது கொஞ்ச நாளாய் தராவின் மீது கண் விழுந்திருக்கிறது கிழவனுக்கு.

தரா ஸபீயத்துக்கு மருமகளாவதற்குத் தகுதியானவள்தான். கொடுக்க முடியாதென்ற பேச்சுக்கும் இடமில்லை. கபாஹி போன்ற ஏழை, ஸபீயத்தின் வார்த்தையை எப்படி மீற முடியும்? மேலும் அவள் இப்படிப் பெண்ணைக் கொடுப்பது தனக்குப்பெரிய அதிர்ஷ்டம் என்றல்லவா நினைக்க வேண்டும். கபாஹி சமாசாரம் யாருக்குத்தான் தெரியாது.

கிராமத்தில் ஸபீயத்தைப்பற்றி எத்தனையோ பேச்சுக்கள் அடிபடுகின்றன. அவன் மிகவும் கஞ்சன், அநியாய வட்டி வாங்கும் கொடியவன் போன்ற பல பழிகளும் உண்டு. அவனுக்கு. எவ்வளவோ விஷயங்கள் தானே வளர்ந்த முழு வதந்திகளாகவே பரவியுள்ளன.

கிழவன் தன் கல்யாணத்திற்காக முக்கால் ரூபாய்க்கு ஒரு செருப்பு ஒரு ஜோடி வாங்கினானாம்; நாற்பது வருஷங்களுக்கு முன்பு. அந்த செருப்பு இன்றும் அப்படியே இருக்கிறதாம்.

துணியில் சுற்றி அதைப் பரண் மேல் வைத்திருக்கிறான். கிராமத்தில் யார் வீட்டிலாவது கல்யாணம் வரும்போதும், பக்ரீத் பண்டிகை போன்ற நாட்களிலும் அரைமணி அல்லது ஒரு மணிநேரம் அந்தச் செருப்பைப் போட்டுக்கொள்வான்; பிறகு அதைக் கழுவித் துடைத்துப் பரண்மேல் வைத்துவிடுவான்.

அவனுடைய மூத்த மகன் ரபீ, தன் கல்யாணத்திற்குச் செருப்பு வாங்க விரும்பினான். உடனே கிழவன் அவனை அதட்டி மிரட்டி, "ஒரு ஜோடி செருப்பு புதிதாய் இருக்கிறது வீட்டில்; அதை வைத்துக்கொண்டு கல்யாணம் நடக்கட்டும்; இன்னுமொரு ஜோடி செருப்பு வாங்க இங்கே என்ன பணம் மலையாகவா குவிந்திருக்கிறது" என்று கேட்டானாம்.

தன் அப்பாவின் செருப்பைப்போட்டுக் கொண்டுதான், ரபீ யானைமேல் ஏறிக் கல்யாண ஊர்வலம் போனானாம்.

அப்புறம் கிழவனுடைய கோட்டு. பதினைந்து வருஷங்களுக்கு முன்பு நிலத்தைப்பற்றி ஏதோ வழக்கு ஒன்று நடந்தது. வழக்கில் ஜெயித்து, ஒரு ரூபாய் ஆறணாவுக்கு ஏலத்தில் ஒரு கோட்டு வாங்கி வந்தான் கிழவன். சிவப்பு நிறமான குளிர்காலக் கோட்டு அது; அவனுக்குச் சரியான அளவுதான். ஆனால் இப்போது சற்றுத் தொளதொளவென்றாகி விட்டது. வீட்டிலிருந்து வெளியே சுற்றக் கிளம்பும்போது, அதைப் பனியன் மேலோ, சட்டையின் மேலோ போட்டுக் கொண்டு போவான். அது தை மாதமோ அல்லது ஆனி, மாதமோ அதைப் பற்றிக் கவலைப்படமாட்டான். ஆடை என்பது ஆடைதான்; அதைப்போட்டுக் கொள்ள வேண்டும். குளிருக்கும் வெய்யிலுக்கும் ஆடைக்கும் என்ன சம்பந்தம்?

சிவப்புக் கோட்டைப் போட்டுக் கொண்டால் கிழவன் பார்ப்பதற்கு அழகாயிருப்பான். மார்பு வரை தொங்கும் நரைத்த தாடியும், எப்போதும் வலுவாய் இருக்கும் இரண்டு பல் வரிசையும் சேர்ந்து கிழவன் முகம் அழகாகத்தான் இருக்கும். கோடை காலத்தில் அவன் அந்தக் கோட்டைப் போட்டுக் கொண்டால் வியர்க்கும். ஆனால் கோட்டினால்தான் வியர்க்கிறது என்று ஒப்புக்கொள்ள மாட்டான். மற்றொன்று கிழவனிடம் இருக்கும் நாய்க் கூட்டம்.

கிராமத்தார்களுக்கு நினைவு தெரிந்தது முதல், ஸபீயத்தின் வீட்டில் ஒரு நாய்க் கூட்டம் இருந்து வந்திருக்கிறது. நல்ல

கூர்மையான, வேகமுள்ள நாய்கள். யாருக்கும் கிழவன் நாய்க் குட்டிகள் தருவதில்லை. வம்சவழி போய்விடுமாம். எந்தத் திருடனும் அவன் வீட்டை ஏறிட்டுக்கூடப் பார்க்க முடியாது.

நாயா அது. புலிதான் ஒவ்வொன்றும்.| தன் நாய்களிடத்தில் கிழவனுக்கு மிகவும் பாசம். தன் தட்டிலிருந்து நாய்களுக்கு ஒரு பிடி சோறு போடாவிட்டால் அவனுக்குப் பசியே தீர்வதில்லை. நாய்களுக்கும் கிழவனிடத்தில் மிகுந்த விசுவாசம் உண்டு. அவனை எங்காவது பார்த்து விட்டால், இரண்டு நாய்களாவது அவனைப் பின்தொடர்ந்து போகும். கிழவன் நாய்களைக் கையால் தொடமாட்டான்- அவை புனிதம் இல்லாத பிராணிகள் அல்லவா? நாயைத் தொட்டால் ஆசாரம் குலையும்; நமாஸ் படிக்க முடியாது; ஆனால் ஊரில் எங்காவது விருந்து நடந்தால், வீட்டுக்காரனிடம் கேட்டு, மனிதர்களுக்கு வாங்கி வருவதைப் போலவே சோறும் கறியும் பொட்டலமாகக் கட்டி வாங்கிக் கொண்டு வந்து தன் கையாலேயே நாய்களுக்குப் போட்டுத் தின்ன வைப்பான். அவன் தன் பேரன் பேத்திகளிடம் கூட இத்தனைப் பாசம் வைப்பதில்லை.

நான்காவதாக அவனுடைய தோட்டத்தில் இருக்கும் சுவையுள்ள மாமரங்கள், ஸபீயத்தின் தந்தை பயிராக்கியவை. கிழவனும் சிலவற்றை வளர்த்திருக்கிறான். உண்மையாகவே அவை நல்ல மாமரங்கள். வெல்லமாய்த் தித்திக்கும். காயாகத் தின்பவையும் உண்டு, பழுத்துத் தின்னக்கூடியவையும் உண்டு அவற்றில். அவன் தோட்டத்தில் இருப்பதைப் போன்ற மாமரங்கள் கிராமத்தில் நாலைந்தே உண்டு.

மாம்பழம் பழுக்கும் காலங்களில், தன் வீட்டுக்கு வருகிறவர்களுக்குக் கிழவன் மாம்பழம் கொடுப்பான்; அவர்கள் பழம் முழுவதையும் தின்னும் வரையில் அதைப் பார்த்துக் கொண்டேயிருப்பான். தின்று முடிந்ததும் கொட்டைகளைத் தன் வீட்டிலேயே போட்டுவிட்டுப் போக வேண்டுமென்று வற்புறுத்துவான்; ஏனென்றால் அதை வெளியில் எங்காவது எறிந்துவிட்டாலோ அல்லது வேறு யாருடைய தோட்டத்திலாவது போட்டுவிட்டாலோ அந்த ஜாதி மரம் வேறிடத்தில் முளைத்துவிடும் என்று கவலை அவனுக்கு. சாதம் போடலாம்; அத்துடன் விரல்களையுமா தரமுடியும்? விதையைக் கொடுக்கவே கூடாது; விதையைக் கொடுத்தால் லக்ஷ்மியே போய்

விடுவாள். ஆனால் கிழவன் வேறு யார் வீட்டிலாவது நல்ல பழங்களைத் தின்றால், அந்தக் கொட்டைகளைப் பத்திரமாகக் கொண்டு வந்து தன் வீட்டுக் கொல்லையில் குழிவெட்டிப் போட்டுவைப்பான். அவன் கையே லக்ஷ்மி வடிவம்தான்; அவன் கையால் மண்ணில் போட்டால், அது சாரமில்லாத மண்ணாயிருந்தாலும் செடி முளைத்து மரமாகிவிடும்.

கல்யாணத்திற்கு முன் தாடி வைத்துக் கொள்வது பற்றிக் கிழவனுக்கும் மூத்த மகன் ரபிக்கும் சண்டை வந்ததுண்டு. கிழவன் கோபத்துக்குப் பயந்து கொண்டு ரபி தாடி வைத்துக் கொண்டுவிட்டான் "ஏண்டா தினம் முகக்ஷவரம் செய்து கொண்டு, பெண் பிள்ளை மாதிரி வழுவழுன்னு முகத்தை வைத்துக்கொண்டு வளைய வருகிறாயே, வெட்கமில்லையா உனக்கு? தவிரவும் காலணாவாவது சம்பாதிக்க வக்குண்டா உனக்கு? க்ஷவரக் கத்தியின் விலை இரண்டு ரூபாய்; தினம் க்ஷவரம் செய்து கொண்டால், அது எத்தனை நாள் கருக்கோடு இருக்கும்; அதிகமாகப் போனால் மூன்று வருஷத்திற்கு இருக்கும்; அப்புறம் கடையில் கொடுத்துச் சாணை பிடிக்க இரண்டணா செலவு ஆகுமே. யாரால் முடியும் அவ்வளவு செலவழிக்க. தாடி வளர்த்துக்கொள், அல்லாவின் தேஜஸ் அது" என்பான்.

மணமகனாகச் சென்றபோதுகூட ரபி தன் தாடியைக் கத்திரிக்கோலால்தான் வெட்டிக் கொண்டான். கத்தியை உபயோகிக்கவில்லை.

டாலிம் கிராமத்தில் நாவிதன் கிடையாது. கிராமம் முழுவதும் தேடினால் ஐந்தாறு கத்திரிக்கோல்கள்தான் கிடைக்கும்; அவற்றில் தையற்காரனிடம் இருப்பதுதான் சற்று நல்லது; ஆனால் அதைக்கொண்டு துணியைத்தான் வெட்ட முடியுமே தவிர மயிர் வெட்ட முடியாது. எப்போதாவது ஒளிவு மறைவாய் மயிர் வெட்டுவதுண்டு. கிராமத்தில் அநேகமாக எல்லா வாலிபர்களுக்கும் முடிவெட்டத் தெரியும். இரண்டொருவர் அதில் மிகவும் கெட்டிக்காரர்கள்.

ஒரு குடும்பத்தின் கத்திரிக்கோல், மற்றொரு குடும்பத்தின் சீப்பு, இன்னொரு வீட்டின் கத்தி ஆகியவற்றுடன் ஒரு வீட்டுத் திண்ணையிலோ, சுவர் இல்லாத கொட்டகையிலோ க்ஷவரம் நடக்கும். நன்றாய் முடிவெட்டும் வாலிபனுக்கு மிகவும் ஆதரவு

கிடைக்கும்; மாசி, பங்குனி சித்திரை மாதங்களிலும், ஐப்பசி, கார்த்திகை மாதங்களிலும்தான் முடி வெட்டிக்கொள்வதும், தாடி வெட்டுவதும் செய்து கொள்வார்கள். வயலில் வேலை இருக்கும் மாதங்களில் அநேகமாக யாரும் க்ஷவரமே செய்து கொள்வதில்லை. வாலிபர்கள் முகத்திலும் தாடி மீசை இருப்பது அப்படியொன்றும் ஆச்சரியப்படும் செய்தியன்று.

கபாஹியும் தராவுக்காக ஊரில் இருக்கும் சில வாலிபர்கள் மீது கவனம் செலுத்தி வந்தாள். சிலர் அவள் வீட்டுக்குப்போய் வெற்றிலை போட்டுக்கொள்வதும் டீ குடிப்பதும் உண்டு. ஆனால் ரகசியமாகத்தான், கபாஹி மிகவும் கெட்டிக்காரி. யாருக்கும் அவள் வாக்கு கொடுத்துவிடவில்லை. யாருக்கும் அதிகமாய் இடம் கொடுத்தும் பிடி கொடுத்தும் பேசியதில்லை. தராவின் அபிப்பிராயம் என்ன என்பதைக்கூட அவள் தெரிந்து கொள்ளவில்லை. பொதுவாக வயது வந்த பெண்களின் எண்ணத்தை எளிதில் புரிந்து கொள்ள முடியாதல்லவா?

ஸபீயத்தை கபாஹிக்கு நன்றாய்த் தெரியும்; முன்பு கபாஹியை அவன் நேசித்தான். காதல் செய்தான் அவளிடம்; ஆனால் இப்போது தராவிடம் பிரியம் காட்டுகிறான். ஆனால் இது அவன் தனக்காகச் செய்யவில்லை என்பதும் கபாஹிக்குத் தெரியும். வேறு நல்ல பையன் யாரும் கிடைக்காவிட்டாலும், கடைசியாக பபீக்கே தராவைக் கட்டிக் கொடுக்க நேர்ந்தாலும், கபாஹி பெரிதாய் வருத்தப்படமாட்டாள். ஸபீயத்தின் வீட்டில் தரா மிகவும் சுகமாக இருக்கலாம்; இருந்தாலும் பபீ தராவுக்குத்தான் ஏற்றவன் ஆக மாட்டான் என்பதும் அவளுக்குத் தெரியும்; ஆனாலும் ஏழை கவலைப்பட்டு என்ன செய்ய முடியும். பிள்ளையென்றால் பெண் கொள்ளத்தான் வேண்டும். பெண் என்றால் எவனாவது ஒருவனுக்குக் கொடுத்துதானே ஆக வேண்டும்.

இடையிடையில் ஏதாவது செய்தி சொல்லவோ, எதையாவது கொடுத்து வரவோ கிழவன் பபீயை கபாஹியின் வீட்டுக்கு அனுப்புவான். அவனைப் பார்த்ததுமே தரா பின்புறம் வழியாக எங்காவது ஓடிவிடுவாள். கபாஹி பபீக்கு வெற்றிலைகிற்றிலை கொடுத்து, அது இதுவென்று ஏதாவது பேசிக்கொண்டு அரை மணி, ஒரு மணி காலம் அவனை வைத்துக்கொண்டிருப்பாள். அவன் போனபிறகு தரா உள்ளே வந்து, கோபத்துடன், "அவனைப் பார்க்கவே சகிக்கவில்லை எனக்கு. பல்லைக்காட்டிக் கொண்டு அவன் ஏன் இப்படிச் சிரிக்கிறான் இழவு" என்று வெடிப்பாள்.

கபாஹி பதில் ஏதும் சொல்வதில்லை.

பெண்ணின் பாக்யமும் ஆழமான ஜலத்தில் போடும் தூண்டிலும் ஒரே மாதிரிதான். என்ன கிடைக்குமோ, கிடைக்காதோ யாருக்கும் தெரியாது.

தன்னைப் பார்ப்பதற்காகத்தான் பபீ தன் வீட்டுக்கு வருகிறான் என்பது தராவுக்குத் தெரியும்; அதனாலேயே அவளுக்குக் கோபம் வருகிறது; ஆனால் குலச் வரும்போது மட்டும் கோபம் வருவதில்லையே அது ஏன்? அது மிகவும் விருப்பமாகவும் இருக்கிறது. குலச் அதிகமாகப் பேசமாட்டான். அதிக நேரமும் தங்கியிருப்பதில்லை. பபீ பார்ப்பதுபோல் ஏங்கி ஏங்கி அவளைப் பார்க்கவும் மாட்டான். அவன் நல்ல மனிதன்; ஆனால் ஏழை. ஊரில் பணக்காரக் குடும்பங்கள் அப்படி என்ன நிறையவா இருக்கின்றன; பெரும்பாலோர் ஏழைகள் தானே. வாலிபன், அக்கரையில் நிலம் திருத்துகிறான். வீடு கட்டுவான் கட்டாயம். எப்போதுமே ஏழையாகவா இருக்கப் போகிறான். குலச்சும் ஒரு நாள் பணக்காரன் ஆகத்தான் போகிறான்.

அந்த முட்டாளை - அதுதான் பபீயை பார்க்கவே பிடிக்கவில்லை எனக்கு. கபாஹி என்ன நினைத்திருக்கிறாள் என்பதும் தராவுக்குத் தெரியாது. கபாஹி எப்போது பார்த்தாலும் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பதுபோல் இருக்கிறாள். ஏதாவது செய்வதற்குச் சூழ்ச்சி செய்கிறாளோ? ஒருக்கால் கபாஹிக்கே அவள் எண்ணம் தெரியாமலும் இருக்கலாம். அவளுக்கு ஆழமாகச் சிந்திக்கக்கூடத் தெரியாதே. சோறு, துணி என்ற நினைவுகளுடன் சற்றே தராவைப்பற்றியும் யோசிப்பாள் அவ்வளவுதான்.

சந்திரனும் அடிக்கடி கபாஹியின் வீட்டுக்கு வருவதுண்டு. கபாஹிக்கு அவனிடம் பயமும் உண்டு, பிரியமும் உண்டு. அவன் மிகவும் துணிச்சலான பேர்வழி. தராவையே கேட்டு டீ வாங்கிக்குடிப்பான். தன் முதுகில்கூடத் தராவைக் கொண்டு சொடுக்கெடுக்கச் சொல்வான். பைத்தியக்காரன்- தன்னது பிறரது என்ற வித்தியாசமே தெரியாத ஆள். அவன் தராவுடன் ஆங்கிலத்தில் பேசுகிறான். என்ன பேசுகிறானோ, ஓர் இழவும் புரிவதில்லை. ஏதாவது கெட்ட வார்த்தைகளைப் பேசினால்கூட யாருக்குப் புரியும்? ஆனால் தரா அவனுக்கு நன்றாகவே பதில்

சொல்கிறாள். சந்திரனிடம் கபாஹி பயப்படுகிறாளே தவிர, அவனைப்பற்றி அவள் தவறாக நினைக்கவில்லை. பாவம், எப்போதாவது அவன் தங்களுக்குப் பெரிய உதவி செய்பவன்.

தராவும் அவனை, சந்திரா அண்ணா என்று தான் அழைக்கிறாள். இருவருக்கும் பொருத்தமென்றால் அப்படியொரு நல்ல பொருத்தம்.

'ஒரு நாள் கபாஹியின் எதிரிலேயே, "ஏண்டி தரா, உனக்கு நல்ல மாப்பிள்ளை தேடித் தருகிறேன். கல்யாணம் செய்து கொள்வாயா?" என்று கேட்டான் சந்திரன். |வெட்கத்தால் தராவின் முகம் சிவந்து விட்டது. "வேறே வேலை இல்லை உனக்கு? என்ன கேள்வி அண்ணா இது? வெட்கமில்லையா உனக்கு. நான் இனிமேல் உன்னுடன் பேசமாட்டேன்" என்று சிணுங்கினாள்.

சந்திரன் வாய்விட்டுச் சிரித்தான் பெரியதாய். "வெட்கப்படும்படி நான் என்ன சொல்லிவிட்டேன்! அப்படியென்றால் உனக்கு மேரேஜ் வேண்டாமா? யாருடனாவது ஓடிப்போகலாம் என்று நினைக்கிறாயோ? அப்படி நீ ஓடிப்போனால் கொன்று விடுவேன் உன்னை. உனக்கு நான் கல்யாணம் பண்ணி வைப்பேன்; உன் கல்யாணத்திற்கு நான் என்ன தருவேன் தெரியுமா? ஒரு ஜோடி ஸாண்டல் (செருப்பு) பிரஸெண்ட் தருவேன். ஸாண்டல் போட்டுக் கொண்டிருக்கிறாயா நீ?"

தராவின் முகம் இன்னும் சிவந்தது. ஸாண்டல் போட்டுக்கொண்டு மணமகளாய் போவது... வெட்கம் வராதா பின்னே; ஸாண்டல் போட்டுக்கொண்டு எப்படி நடப்பது?

"வெறும் வார்த்தை போறாது. உன் தங்கச்சி தராவுக்கு நிஜமாகவே நல்ல மாப்பிள்ளை பார்த்துக் கொடேன்" என்றாள் கபாஹி.

தரா ஒன்றும் தெரியாமல் ஆசை பொங்கும் பார்வையால் சந்திரனையே பார்த்தாள். சந்திரன் கவலையே படாமல் நம்பிக்கையாய்ப் பேசுகிறான். "அத்தே, நான் ஷ்யுராகத்தான் சொல்கிறேன். அப்புறம் மறுக்கக்கூடாது. ஒரு ப்யூட்டில் யங் மேன் இருக்கிறான். நீங்கள் கொஞ்சம் வெய்ட் பண்ணணும் என்ன யோசிக்கிறாய்? வாட் டூயூ திங்க்? சந்திரனை..."

சந்திரன் புறப்பட்டுப் போனான்.

தராவுக்கு ஆசை பொங்கிற்று.

கபாஹி ஒரு முடிவுக்கும் வராமல் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தாள். சந்திரன் ஏதாவது செய்வான் கட்டாயம். நட்ட நடு ராத்திரியில் இரண்டு மைல் தூரம் போய் மண்ணெண்ணெய் வாங்கி வரக்கூடிய ஆள் அவன். யார் கண்டது; அவன் மூலமாகவே யாராவது ஒரு நல்ல மாப்பிள்ளை கிடைத்து, அவனிடம் தராவை ஒப்படைக்க முடிந்தாலும் முடியலாம். எதுவும் சொல்ல முடியாது.

## ஏழு

பௌர்ணமி நிலவு; சதுர்தசியன்றே வந்த முழு நிலா; தூய வெண்மையான நிலா, நான்குபுறமும் வீசிக்கொண்டிருக்கிறது. தன்சிரியாற்றின் தண்ணீர் மேல் நிலா ஒளி வீசுகிறது.

வடக்கிலிருந்து அடிக்கும் காற்று காட்டின் வழியே வருகிறது. நேபாலிக் காரர்களின் பழைய பால் வாடை, காற்றுடன் கலந்து வருகிறது. குலச்சினுடைய தோளில் மேல் வேஷ்டியில் கட்டப்பட்ட மூன்றுபடி பிடிக்கும் பெரிய மண்குடமும், காட்டை வெட்டித் திருத்தும் நீண்ட காம்புள்ள கோடாலியும் இருக்கின்றன. கையில் கொளுத்தாத தீப்பந்தம்; வாயில் கொளுத்திய பீடி. ஆற்றங்கரையின் சிறிய பாதையில் அவன் போய்க்கொண்டிருக்கிறான். தேனடை வெட்டியெடுக்கத்தான் போகிறான். பகலிலேயே அதற்கான ஏற்பாடுகள் செய்திருந்தான். அந்தி வராதா என்று அலுத்துக்கொண்டிருந்தான். அந்தி கவிந்ததுமே புறப்பட்டுவிட்டான். பீமனை அவன் வீட்டிற்குப் போய் அழைத்துப் போக வேண்டும்.

குலச்சின் மனத்தில் ஒரே ஆனந்தம். குறைந்த பட்சம் பத்து சேர் தேனாவது கிடைக்கும் நிச்சயமாய். விற்றால் கொஞ்சம் பணம் கிடைக்கும். அதுவே இல்லையென்றாலும் நிறையத் தேன் சாப்பிடலாமே. தன் கையால் அறுத்து எடுத்த தேன் என்றால் அலாதியான சுவையல்லவா.

பீமன் வீட்டுக்குப் போகும் பாதை, ஆற்றின் கரையோரமே செல்கிறது. ஒரு மைல் தூரம் இருக்கும். ஆனால் கிராமத்தில் யாருமே அதை ஒரு தூரமாக நினைப்பதில்லை. சிலசமயம் ஒரே

ஒரு வெற்றிலைக்காக கிராமத்தின் ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்குப் போவது அவர்களுக்கு மிகவும் சகஜமான காரியம்தான்; அது இரண்டு மைல் தூரத்திற்கும் அதிகம்.

தேனடையைச் சீக்கிரம் அறுத்துக்கொண்டு வந்துவிட்டால் நல்லது; அது பக்குவமாகும் சமயத்தில் தேனீக்கள் கொட்டுவதில்லை. தேனைக் கொண்டுவந்து வீட்டில் வைத்துவிட்டுச் சாப்பிட்ட பிறகு, அவன் கபாஹி அக்காவின் வீட்டிற்குப் போக நினைத்தான். ஆனால் இன்று தரா வீட்டில் இருந்திருக்க வேண்டும். தேனைக் கொண்டுபோய் அவள் கையில் கொடுப்பதுதான் குலச்சுக்கு ஆசையான காரியம்.

தரா வீட்டில் இல்லையென்றாலும் சரிதான்; இன்று கபாஹி தனியாய் இருப்பாள். இன்று அவன் வெட்கப்படாமல் தன் எண்ணத்தை அவளிடம் சொல்லிவிடப்போகிறான்.

ஒரே பேச்சு; சுற்றி வளைக்காமல் சொல்லிவிடவேண்டும். அவன் தராவைக் கல்யாணம் செய்து கொள்வான்; உடனே இப்போதே இல்லை, மாசியில் அல்லது பங்குனி மாதத்தில்தான் கல்யாணம்; ஆனால் இப்போதே அந்த விஷயம் நிச்சயிக்கப்படவேண்டும்; இல்லாவிட்டால் அவன் எதற்காக கபாஹி வீட்டுக்கு வருவதும் போவதுமாய் இருக்க வேண்டும்?

குலச்சின் மனத்தில் ஒரு உறுதியான நம்பிக்கை பிறந்தது. அவனை மாப்பிள்ளையாக அடைய கபாஹி ஒரு போதும் ஆட்சேபிக்க மாட்டாள். அவனிடம் காசு பணம் இல்லையே தவிர, அவனைப்போல ஒரு நல்ல பையன் தராவுக்குக் கிடைப்பானா?

இந்த நினைவில் அவன் மகிழ்ச்சிஅடைந்தான்; இன்று நான் கூச்சப்படாமல்– கண்டிப்பாய் விளக்கமாய்ச் சொல்லிவிடப் போகிறேன்.

குலச் கண்ணை விரித்துத் தன் முன்னே பார்த்தான். பூமி முழுவதும் வெண்ணிலவின் ஒளியில் பிரகாசிக்கிறது. ஆற்றின் அசைந்து ஓடும் தண்ணீரின் மேல், மங்கலான ஒளியுடன் சலசலவென்ற அழகான அலைகள் நடனமாடுகின்றன. மரம் செடிகொடிகளின் இலைகளின்மேல் அழகான நிலா ஒளி வீசுகிறது.

குலச் மற்ற எல்லா விஷயங்களையும் மறந்து விட்டான். காற்றின் இதயத்திலிருந்த எத்தனையோ இனிய செய்திகள்

ஒலிக்கின்றன. மரங்களின் சிறிய இலைகள் சரசரவென்று அசைந்தாடுகின்றன. ஆற்றின் கரை மரங்களின் இலைகளின் மேல் காற்றின் வீச்சுக்கள் பட்டு, பட்பட்டென்று சத்தம் வருகிறது. இனிய நிலவு; காற்றின் இனிய அசைவு. குலச்சின் மனம் சொல்ல முடியாத மகிழ்ச்சியில் துள்ளிற்று. பசிய இலைகளுடன் சேர்ந்து தானும் ஆட விரும்பினான் அவன். சீட்டியடித்தான். யாரையாவது கூப்பிட்டு ஏதாவது சொல்லவேண்டும் போல் இருந்தது அவனுக்கு. ஏதாவது பாட விரும்பினான். ஆனால் அவனுக்கு யாருடைய பெயரும், எதனுடைய பெயரும் நினைவுக்கு வரவில்லை.

கூத்தாடும் கால்களுடன் நடந்து முன்னே சென்றான். பாதையின் புல்லும் இலைகளும் அவற்றின் வேர்களும் அவனுடன் தோழமை பூண்டன. சீட்டியடித்துக் கொண்டே போனான்.

ஆற்றின் கரையில் உட்கார்ந்து, யாரோ புல்லாங்குழல் ஊதுவதைக் கேட்டான். அதன் ஓசை ஒரே அபஸ்வரமாயிருந்தது; ஆயினும் நிலா வீசும் இரவில் அதுவும் மனதிற்குப் பிடிக்கவே செய்தது.

"வேறு வேலை இல்லை; ஆற்றின் கரையில் உட்கார்ந்து குழல் ஊதுகிறான்" என்று சொல்லிக்கொண்டான் குலச். இதற்கு முன்பு டாலிம் கிராமத்தில் இத்தனை நிறைந்த நிலவு வீசியது உண்டா? அவனுக்கு நினைவில்லை. கிடையவே கிடையாது; இதுபோல் நிலா என்றுமே வீசியதில்லை.

அவனுடைய மனத்தின் உள்ளேயும் ஒரு வெண்மை நிலா பரவியது. அவன் பீமன் வீட்டு வாசலில் போய் நின்றான். "பீமா" என்று அழைத்தான்.

"குலச்சா... வா!" பீமன் வாசலுக்கு வந்தான். "நான் அந்தி வந்தது முதல் தயாராய்க் காத்திருக்கிறேன், நீதான் நேரமாக்கி விட்டாய்".

"அண்ணே ரொம்ப அழகான நிறைந்த நிலவு..."

சிறிது நேரத்தில் இருவரும் கிளம்பிக் காட்டிற்குச் செல்லும் வழியில் போனார்கள். குலச் கண்ணை விரித்து நாற்புறமும் பார்த்தான். திடீரென்று ஏதாவதொரு காரணத்தால் நிலவு மறைந்துவிட்டால்! "பீமா, இன்று பௌர்ணமி அல்லவா?"

பீமன் வேறு ஏதோ நினைவில் இருந்தான். மூன்று நான்கு நாட்களாக மூன்று எருமைகளைக் காணவில்லை. தேடப்

போவதற்கும் நேரம் கிடைக்கிவில்லை; "ஆவணி மாதம் தானே முடியப்போகிறது; புரட்டாசி வெள்ளம் வந்தால்தான் பயப்படவேண்டும்..." என்றான் பீமன்.

"இப்போது வெள்ளம் வராதல்லவா– தொலையட்டும்" என்றான் குலச்.

வெள்ளம் வரத்தான் வரும்; தன்சிரியிலும் வரும். ஆனால் அப்போது இந்த ஆறு வேறு ஆறாகிவிடுகிறது. வெள்ளம் வரும்போதுதான் தன்சிரி அன்னைக்குப் பைத்தியம் பிடித்து விடுகிறது. எந்தத் தடையையும் பொருட்படுத்தமாட்டாள் அவள். அணைகள், கரைகள், உயரமான மேடுகள் எதையுமே ஏற்றுக்கொள்ள மாட்டாள். ஹோ ஹோவென்ற இரைச்சலுடன் வருவாள். கரைகளை உடைப்பாள். அணைகளைத் தகர்த்தெறிவாள். கிராமத்தை முழுக அடிப்பாள். நிலங்களை நீரில் ஆழ்த்துவாள். கரையில் குடியிருக்கும் குடியானவர்கள் வீடுவாசல்களை இடித்துத்தள்ளி அழித்து ஒழித்துவிடுவாள் அந்தத் தாய். ஆம், தன்சிரியாறு எங்கள் தாய்தான். இதற்காக அவளை யாரும் குற்றம் கூறமாட்டார்கள். தாய்க்கும் எப்போதாவது கோபம் வரும். அவள் சேற்றிலிருந்து நம்மை அணைத்து எடுப்பாள் ஒரு நேரம்; மறுநேரம் நம்மைத் தன் மடியிலிருந்து சேற்றில் எறிவாள்.

தன்சிரியில் வெள்ளம் வந்தால், ஜனங்கள் வெகுதூரம் ஓடிப்போய் விடுவார்கள். வெள்ளத்தைத் தடுக்கும் முயற்சி பயனற்றது.

ஆனால், இந்தப் பைத்தியக்காரப்பயல் சந்திரன் வேறு என்னவெல்லாமோ சொல்கிறான். "ஆற்றில் அணைபோட முடியாதென்று எவன் சொன்னவன்? பெரிய பெரிய ஆறுகளில் அணை போட்டு, அந்தத் தண்ணீரை எங்கெல்லாமோ கொண்டு போகிறார்கள். இந்தக் காலத்தில் ஆறுகளின் தெய்வங்களெல்லாம் எங்கோ ஓடிப்போய் விட்டன. மனிதன் பெரிய பெரிய பைத்தியம் பிடித்துப் பெருகும் ஆறுகளையெல்லாம் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்திருக்கிறான். ஒரு நாள் நாமும், 'அம்மா நிறுத்து உன் அக்கிரமத்தை' என்று பாடம் கற்பிப்போம் இந்த தன்சிரிக்கும். ஒவ்வொரு வருஷமும் நிலம் நீச்சுக்களை மூழ்க அடித்து அடித்து இடம் கொடுத்து விட்டோம். இவளுக்கு" என்கிறான் சந்திரன்.

இவனுக்குத்தான் ஒரு நாள் பைத்தியம் பிடிக்கப்போகிறது. வெள்ளத்தைத் தடுக்கப் போகிறானாமே! ஜல தேவதைக்கு ஒருவரும் அபசாரம் செய்யக்கூடாது.,

ஆலமரத்தின் அடியில் நிலவுக்கும் இருட்டுக்கும் இடையே நடக்கும் இனிமையான போராட்டம். ஒரு தனிமையான ரகசியம்.

"எங்கே இருக்கிறது" என்று குலச்சின் காதோடு கிசுகிசுத்தான் பீமன். தேனீக்கள் தன் குரலைக் கேட்டு விடுமென்று பயப்பட்டான் போலும்.

"பந்தத்தைக் கொளுத்துகிறேன்; சற்று இரு"

கர்ப்பிணிபோல் பெரிதாய்த் தொங்குகிறது அடை. பீமன் கண்கள் விரிந்தன. "ஏய், பெரிய அடைதான்..."

"சத்தம் போடாதே..."

மரத்தின் இலைகள் வழியாக, நிலவுப் பத்தையொன்று தேனடைமேல் விழுந்திருக்கிறது. தீவட்டியைக் கொளுத்தியதும் நிலா மறைந்துவிட்டது.

"ஏறு மரத்தில்...." என்றான் குலச்.

தீப்பந்தத்துடன் இருவரும் மரத்தைச் சுற்றிலும் ஒருமுறை பார்த்து கொண்டார்கள். புலி சிறுத்தை ஒன்றும் இல்லையே என்று...

"ஒன்றும் இல்லை;"

கையில் தீவட்டியுடன் பீமன் தாவித் தழுவி மரத்தில் ஏறினான். தன் கையில் மற்றொரு தீப்பந்தத்துடன் குலச் அவனையே பார்த்துக்கொண்டிருந்தான். "குரங்குப் பயல்.." என்றான்.

ஒரு கிளைமேல் உட்கார்ந்து கொண்டு, "ஏய் குலச், தேனீக்கள் ஏராளம் இருக்கிறது" என்றான்.

"இருக்கும்"

பீமன் பந்தத்தைத் தேனடையின்கீழே வைத்தான். தேனீக்கள் நெருப்பையும் புகையையும் தாளாமல் எரிந்து பிரிந்து பறந்து போய்விட்டன. தோளில் கட்டியிருந்த பானையைத் தேனடைக்குக் கீழே பிடித்துக்கொண்டு அடையை அறுத்து எடுத்தான் பீமன். பெரிய பெரிய அடைகள் பல இருந்தன. அறுத்து

எடுத்துக் கொண்டு இறங்கி வந்தான். வழியில்லாமல் தேனீக்கள் தூரத்தில் மொய்த்தன.

"உன்னால் முடியுமாடா..?" என்றான் குலச்.

"முடியும்" என்றான் பீமன்.

சில தேன் துளிகள் கீழே கொட்டின. குலச் பானையை அங்கு வைக்க முயன்றும் முடியவில்லை.

பந்தத்தையும் பிடித்துக்கொண்டு, பானையையும் தொங்கவிட்டுக்கொண்டு பீமன் இறங்கி வந்தான். தேனீக்கள் அவனைக் கொட்டவில்லை.

பானை நிறையத் தேன்; தவிர எல்லா அடைகளையும் அறுத்துக்கொண்டு வந்திருந்தான்.

"தேன் ஏராளம்" என்றான் பீமன் தாங்காத சந்தோஷத்துடன். இருவரும் இலைகளின் மீதே உட்கார்ந்து வயிறு நிறையத் தேனைக் குடித்தார்கள். பீமன் கையில் தேன் வழிந்தது; அதை அவன் நக்கி நக்கி நொட்டையிட்டான்.

"இன்று இதை அறுத்திராவிட்டால், நாளைக்கு இதில் புழுபூச்சி வந்துவிடும்"

"ஆமாமாம்"

தேனைப் பங்கிட்டுக்கொண்டு இருவரும் காட்டிலிருந்து கிளம்பினார்கள்.

"நீ பார்த்திராவிட்டால் இது வீணாகத்தானே போயிருக்கும். காட்டுக்குள் போய்ப் பார்த்தால் இன்னும் அடைகள் கிடைக்கும்; ஆனால் உள்ளே போகத்தான் பயமாயிருக்கிறது.."

இரவு முதிர்ந்துகொண்டு வந்தது. ஊரில் அநேகமாய் எல்லாருமே தூங்கி விட்டார்கள். அங்கும் இங்கும் சுற்றும் சில இள வயதுப் பிள்ளைகள் மட்டும் நிலவில் உட்கார்ந்திருந்தார்கள்.

பீமன் தேன் குடத்துடன் தன் வீட்டுக்குப் போனான்; போகும்போது, "என்னை ஞாபகம் வைத்துகொள்... எங்காவது தேன் கிடைத்தால்; வேறு யாரையும் கூப்பிட்டுக் கொள்ளாதே" என்று சொல்லிவிட்டுப் போனான்.

சரியென்றான் குலச். தன் வீட்டிற்கருகில் போனபோது, குலச்சுக்கு வேறு எண்ணம் வந்தது; நான் வீட்டுக்குப் போய்விட்டால், அதற்குப் பிறகு கபாஹி அக்கா வீட்டுக்குப்போக முடியாது. ராத்திரி நேரம் கழித்துப் போவதால் அம்மாவும் கத்துவாள். ஆக நான் இப்போது வீட்டுக்குப் போகப் போவதில்லை. இப்படியே கபாஹி வீட்டிற்குப் போய்விட்டு, அப்புறம்தான் வீட்டுக்குப்போக வேண்டும். இந்த எண்ணம் வந்ததும் நேரே கபாஹி வீட்டுப் பக்கம் போனான். அவள் வீட்டு வாசலுக்குப் போனதும், அவன் சற்றுப் பயந்துவிட்டான். இந்த நடுநிசியில் இங்கே நான் வருவதை யாராவது பார்த்துவிட்டால்.. என்ன நினைப்பார்கள்.

சுற்றும் முற்றும் பார்த்தான். யாரும் இல்லை; எல்லாரும் தூங்கி விட்டிருந்தனர். கபாஹியின் வீடு ஒரு கோடியில்தான் இருக்கிறது. தவிர சுற்றிலும் மரங்கள் மறைக்கின்றன. வாசலுக்கு வந்து பார்த்தால் தான் தெரியும். மேலும் இப்போது வழியில் யாரும் இல்லை. ராத்திரி மூன்றாம் ஜாமம்.

கதவின் அருகில் நின்று கொண்டு மெல்லிய குரலில், "அக்கா, அக்கா..." என்று அழைத்தான். உள்ளே படுக்கையில் சிறு சத்தம் கேட்டது. "அக்கா, தூங்கிவிட்டாயா?" என்றான் மறுபடியும்.

"யார், குலச்சா, இரு.. இதோ வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, விள்க்கை ஏற்றிக்கொண்டு வந்து கதவைத் திறந்து, "வா உள்ளே வா. இத்தனை நேரம் ஆக்கிவிட்டாயே" என்றாள் கபாஹி.

கொடுவாளையும் தேன் குடத்தையும் எடுத்துக்கொண்டு உள்ளே புகுந்தான். கதவைத் தாழிட்டுக்கொண்டே, "அது என்ன?" என்று கேட்டாள் கபாஹி.

"தேன் எடுக்கப்போயிருந்தேன்; நேரம் ஆகிவிட்டது; அப்படியே அங்கிருந்து நேரே வருகிறேன்."

"தேனா, எங்கே எடுத்தாய்? என்று கேட்டபின் சிறிது தயங்கி, "நீ சோறு தின்றுவிட்டாயோ?" என்று கேட்டாள்.

"சோறு எங்கே தின்பது? அந்தி வந்ததுமே புறப்பட்டுவிட்டேன். ஆனால் இன்று தேன் சாப்பிட்டே வயிற்றை நிரப்பிவிட்டேன்."

"செம்பில் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்து, "தேன் சாப்பிட்டு வயிறு நிரம்புமா? இந்தா, கைகால் கழுவிக்கொண்டு வா. உனக்காக நான் சமைத்து வைத்திருக்கிறேன்.." என்றாள் கபாஹி.

சாப்பிட்டுக்கொண்டே, "தரா போயிருக்கிறாளா?" என்று கேட்டான்.

"ஆமாம், காலையிலேயே போய்விட்டாள் அவள். நான் தனியாக இருக்கிறேன். நீ வருவாய் என்று ரொம்ப நேரம் உட்கார்ந்திருந்தேன். அப்புறம் படுக்கையிலும் படுத்துக் கிடந்தேன். தூக்கமே வரவில்லை. தனியாயிருக்க பயம் வேறு.."

"அப்படியா?" என்றான் சுருக்கமாக.

குலச்சுக்குச் சற்றே பயம்தான்; தரா இல்லை. கபாஹி மட்டும் இருக்கிறாள். அவளுடைய நடத்தை பற்றியும் சுபாவம் பற்றியும் முன்பே அவனுக்குத் தெரியும்; ஆனால் அவள் அவனை விட மூன்று நான்கு வயது மூத்தவள்.

சாப்பிட்டபிறகு இருவரும் நடு அறைக்கு வந்தார்கள்.

வெற்றிலைத் தட்டில் வெற்றிலை நறுக்கி வைத்து, அவனுடைய முகத்தையே பார்த்துக்கொண்டு, "பாஹியில் எவ்வளவு நிலம் சாகுபடிக்குக் கொண்டு வந்திருக்கிறாய்?" என்று கேட்டாள்.

"ஏதோ கொஞ்சம்தான்; நான் ஒருவன்தானே; எவ்வளவு செய்ய முடியும்?"

"வீடு கட்டி விட்டாயா இல்லையா?"

"இன்னும் கட்டவில்லை. வரும் கார்த்திகை மாதம் ஏற்பாடெல்லாம் செய்து கொண்டு, அறுவடைக்குப் பிறகுதான் அதை ஆரம்பிப்பேன்."

"அந்த வீட்டுக்கு உன் அம்மாவும் வருவாளோ?"

"அவளுக்கு அங்கு வர இஷ்டமில்லை.."

"அப்படியென்றால் யாருக்காக வீடு கட்டுகிறாய்"

இந்த கேள்வி அவனை வெட்கப்பட வைத்தது. என்ன சொல்வது, எதைச் சொல்லாமல் விடுவது என்று புரியாமல் அவன் தடுமாறுவதற்குள், கபாஹி சிரித்துக்கொண்டு, "ஏன் வெட்கப்படுகிறாய்? நீயோ வாலிபன்; நல்ல பெண்ணாகக் கொண்டு வந்து." என்றாள். குலச் வெற்றிலையை வாயில் போட்டுக் கொண்டு அவளைப் பார்த்தான். அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்த கபாஹியின் முகம், விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் ரொம்ப அழகாயிருந்தது. கபாஹி இப்போதும் பருவ மங்கையாகத்தான் இருந்தாள். அவளுடைய உடம்பின்

வளைவுகளிலும் மேடு பள்ளங்களிலும் அவனுடைய கண்கள் புதைந்து நின்றன.

"என் உடம்பில் என்ன பார்க்கிறாய் இப்படி? நீ யாராவது பெண்ணைப் பார்த்திருக்கிறாயா இல்லையா?" என்றாள் கபாஹி.

அப்போதும் குலச்சால் ஒன்றும் பேச முடியவில்லை. அவன் முகம் சிவந்தது. தராவைப்பற்றிப் பேச வேண்டுமென்று அவனுக்கு மிகுந்த ஆவல் இருந்தது; ஆனால் தொண்டை வரண்டுவிட்டது பேச முடியாமல்.

கபாஹி, ஆறுதல் தோய்ந்த குரலில், புன் சிரிப்புடன் "வீடு கட்டு, தோட்டம் போடு, கொஞ்சம் வேறு ஏற்பாடுகளும் செய்; ஐப்பசி பிறக்க இன்னும் எத்தனை நாள் பாக்கியிருக்கிறது?" என்று சொன்னாள். உடனேயே அவனுடைய முகவாய்க்கட்டையைப் பிடித்து முகத்தைத் தூக்கி, "நீ எதற்கும் பயப்படவேண்டாம்: ஒரு யோசனையும் செய்ய வேண்டாம். நான் உன்மேல் ரொம்ப நாளாகவே கண் வைத்திருக்கிறேன். உன்னை நான் விடமாட்டேன்; தெரிந்ததா..." என்றாள்.

குலச்சுக்கும் சந்தோஷம்தான்; அப்படியென்றால் அக்காவுக்குத் தன் எண்ணம் தெரியும் போலிருக்கிறது; தராவை எனக்குக் கல்யாணம் செய்து தருவாள் என்றெல்லாம் நினைத்துக்கொண்டு தலை குனிந்து உட்கார்ந்திருந்தான்.

கபாஹி, உட்கார்ந்திருந்தவள் எழுந்துபோய்க் கதவு நன்றாகத் தாழ் இட்டிருப்பதைப் பார்த்துக்கொண்டு வந்தபின், "நீ சேனிமாயியைப் பற்றியே நினைத்துக்கொண்டிருக்காதே குலச், என்னைப்போல் உன்மேல் வேறு யாரும் ஆசை வைக்க முடியாது.." என்றாள்.

அதுவும் சரிதான். அவனிடம் இன்றுவரை இவ்வளவு பிரியமாக யாருமே பேசியது இல்லை. கபாஹியின் மேல் அவனுக்குப் பிரியம் தோன்றிற்று.

சற்று நேரம் பேசாமல் இருந்தபின், குலச் மிகவும் முயன்று எப்படியோ பேச ஆரம்பித்து, "தேனை வைத்துக்கொள்; ராத்திரி ரொம்ப நேரம் ஆகிவிட்டது; நான் போகிறேன்-" என்றான்.

"போகவா விரும்புகிறாய்? நீ போய்விட்டால் நான் எப்படித் தனியாய் இருப்பேன்? போக வேண்டுமென்றால் ஏன் வந்தாயாம்?" என்றாள் அவள்.

அவன் பதில் பேசவில்லை. அதுவும் சரிதானே; தரா இல்லை வீட்டில். அவள் போய்விட்டால், கபாஹிக்குப் பயமாகத்தான் இருக்கும். "சரி, நான் இருந்துவிடுகிறேன். ஆனால் விடிவதற்கு முன்பே கிளம்பிவிட வேண்டும் நான். ஊர்க்காரர்கள் பார்த்துவிட நேர்ந்தால்..?"

"பார்க்கட்டுமே; என்ன ஆகிவிடும்; நீ ஆண்பிள்ளை. உனக்கே இவ்வளவு பயமா?" என்று சொல்லிவிட்டுக் கையில் விளக்கையும் எடுத்துக்கொண்டு தன் படுக்கையறைக்குச் சென்றுவிட்டாள். படுக்கையைத் தட்டி உதறிவிட்டு அவனையும் கூப்பிட்டாள். "வா குலச்; படுத்துக்கொள். ராத்திரி ரொம்ப ஆய்விட்டது. படுக்கையில் உட்கார்ந்துகொண்டு, "இன்னொரு படுக்கை இருக்கிறதா அக்கா? நீ எங்கே படுத்துக் கொள்வாய்?" என்று கேட்டான், அவன்.

கபாஹி மேலாக்கைத் தன் உடம்பிலிருந்து உருவிக் களைந்துவிட்டு, உடனே விளக்கையும் ஊதி அணைத்தபின், "வேறு படுக்கை ஏது? கொஞ்சம் ஒதுங்கி ஒருக்களித்து இடம் கொடு பார்ப்போம்" என்றாள்.

ஒரு ஓரத்தில் குலச் பேசாமல் கிடந்தான். கபாஹி அவன் பக்கம் நெருங்கி அணைத்துத் தன் முகத்தை அவனுடைய முகத்தின் அருகில் வைத்துக்கொண்டு, "நீ ஒன்றும் யோசிக்கத் தேவையில்லை; இனிமேல் நீ என்னை அக்கா என்றும் அழைக்கக்கூடாது; நான் உனக்கு அக்காவா என்ன?" என்றாள்.

அவள் தனக்கு என்றுமே அக்காவாக இருந்தது இல்லை என்பதை உணர்ந்தான்.

இரவின் அமைதி வளர்ந்து கொண்டிருந்தது வெளியே. சுவரின் இடுக்கு வழியாக நிலவின் மெல்லிய கோடுகள் உள்ளே விழுந்துகொண்டிருந்தன. இன்றுவரை தான் தராவைத் தேடவில்லை; கபாஹியைத்தான் தேடியிருக்கிறான் என்பதை உணர்ந்தான் குலச்.

## எட்டு

குலச்சின் தகப்பனாருக்கு நோய் அதிகமாகி, ஆபத்தான நிலைமை. இந்தச் செய்தி பாஹிக்கே வந்தது. குலச் போகவில்லை.

அவனுக்கு ஆசை கூடக் காட்டப்பட்டது. கிழவருக்கு எப்போது என்ன நேருமோ சொல்ல முடியாது. ஏதாவது நேர்வதற்குள், நிலம் நீச்சு ஆஸ்தி பாஸ்திகளைப் பாகம் செய்து கொடுத்துவிட விரும்புகிறார் அவர்; இதற்காகத்தான் உன்னைக் கூப்பிடுகிறார் என்று கூடச் சொன்னார்கள்.

அப்போதும் அவன் கேட்கவில்லை. "அப்பனுக்கு நான் மகன் என்றால், என் பங்கு எனக்குக் கிடைக்கும். கிடைக்காவிட்டாலும் பெரிய நஷ்டம் இல்லை. வேறு என்ன இருக்கிறது இதில்? கொடுக்காவிட்டால் போகட்டுமே. என்மேல் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நான் சம்பாதித்துக் கொள்வேன்" என்பது எண்ணம்.

இதே விஷயத்தில் அவனுடைய அம்மாவுக்கும் அவனுக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. கிழவருடைய நிலைமை ஒன்றும் சொல்ல முடியாமல் இருக்கும் செய்தி தெரிந்து, அவள் அவரைப் பார்க்கப்போனாள். ஒரு நாள் குலச் வீட்டுக்கு வந்த நேரத்தில் அம்மாவைக் காணவில்லை. விசாரித்ததில், அவள் கொஞ்ச நாளாய் அப்பாவின் வீட்டில் இருப்பதாகக் கேள்விப்பட்டான். அவனுக்குக் கோபம் வந்து விட்டது. வீட்டைவிட்டு வெளியே கிளம்பிச் சென்றான் பாஹுிக்கு. போகும்போது ஊர்க்காரர் களிடம், "நான் மறுபடியும் வீட்டுக்குவரப் போவதில்லை. பாஹுியிலேயேதான் இருக்கப்போகிறேன். என் தாயாரிடமும் இதைக் கண்டிப்பாகச் சொல்லிவிடுங்கள்; அவள் இந்த வீட்டுக்கு வரத் தேவையில்லை. அங்கேயே இருக்கட்டும். மூத்தபிள்ளை இருக்கிறான்; அவனே அவளுக்குச் சோறு போடட்டும். மாடுகன்றுகளை நான் நேபாலியிடம் விட்டுவிடப்போகிறேன்... பார்த்துக்கச் சொல்லி" என்று சொல்லிவிட்டுப் போனான்.

"ஏய், எல்லாரிடமும் இப்படி நீ கோபித்துக்கொள்ளக் கூடாது; சொந்த அம்மா அப்பாதானே அவர்கள்; தாங்கள் பெற்ற பிள்ளைகளிடம் கோபப்படாமல், அவர்கள் வேறு யார் மேல் கோபப்படுவார்கள். நீயும் அங்கே போய், சமாசாரம் தெரிந்து கொண்டு வா" என்று சிலர் புத்திமதியும் சொன்னார்கள். அவன் போகவில்லை.

வியாதியில் படுத்துக் கிடக்கும் அப்பனைப்போய் ஒரு தடவையாவது பார்த்து வரவேண்டுமென்று அவனுக்கு ஆசைதான். ஆனால் அவன் தான் சொன்ன சொல்லை மீற

விரும்பவில்லை. அவன் அப்படிப் போய்விட்டால், அவனை யாராவது ஆண்பிள்ளை என்று மதிப்பார்களா அதற்குப்பிறகு; இது ஆண்பிள்ளை சமாசாரம்.

அம்மா தன்னைவிட்டுப் போய்விட்டதும், அவனுக்கு ஒரு வகையில் நல்லதாகவே பட்டது. அவனுடைய கவலை குறைந்தது. வீடு கிடக்கும் சும்மா; அந்த வீட்டில் என்ன இருக்கிறது; அம்மாவை விட மாடு கன்றுகளைப் பற்றித்தான் அவனுக்கு அதிகக் கவலை. அவற்றிற்கு ஒரு ஏற்பாடு செய்தாகி விட்டது. நேபாலிப் பேட்டையில் இருக்கும் சக்கிர பகாதூர், குலச்சின் மாடுகளைப் பார்த்துக்கொள்வான். அதற்குப் பதிலாக, நேபாலி தன் வயலில் ஏர் ஓட்டச் சொல்வான். ஏர் உழுவது காளைகள், உழட்டுமே..

தராவையும் கபாஹியையும் பற்றி அதிகமாய்க் கவலைப்படாமலேயே காரியம் நடக்கும். கபாஹி கொஞ்சம் குழப்பிவிட்டாள் காரியத்தை; ஆனால் அவனிடம் அவளுக்கு மிகவும் அன்பு உண்டு. விதிப்படி நடக்கட்டுமே மற்றது.

ஐப்பசி மாதத்தின் பின்பாதி நாட்கள்; தன்சிரியாற்றின் தண்ணீர் நாளுக்கு நாள் குறைந்து கொண்டு வருகிறது. ஆற்றின் நடுவில் சேறு சேர்ந்து திட்டுக்கள் மேடிட்டிருக்கின்றன. இந்தத் திட்டுக்களில் உருளைக்கிழங்கு, மிளகு, கத்திரிப் பயிர்கள் நன்றாய் வரும். கடுகும் பயிராகும் நன்றாய். ஆவணி, புரட்டாசி மாதங்களில் தண்ணீருக்கடியில் கிடந்த ஆற்றின் கரை நிலத்துப் புற்களும் அடித்தாள்களும் இப்போது வெளிப்பட்டுக்கிடந்தன. குலச் சீர்திருத்தியிருந்த நிலங்களில் நான்கைந்து ஏக்கர்கள் இப்படி ஆகியிருந்தன. சற்றுப் பள்ளமான இடம் அது. இப்போது அந்த நிலத்தில் குறுகிய காலப்பயிர் செய்யலாம். ஆற்றின் கரையிலிருந்து கொஞ்சம் மண்ணை வெட்டிக் கொட்டினால் மழைக்காலத்தில் கூடத் தாக்குபிடிக்கும், மழைக்காலப் பயிரும் ஏற்றலாம். வெள்ளம் வராதிருந்தால் நெல்கூட விளைக்கலாம். பெரிய வெள்ளம் வந்தால்... எல்லாமே முழுகிப்போய் விடும்; அது தனி விஷயம்.

புதிய நம்பிக்கையுடனும், புதிய உணர்ச்சிகளுடனும் குலச் புதிய நிலத்தைச் சீர்திருத்த ஆரம்பித்தான். பொழுது விடிந்தது முதல் பொழுது சாயும் வரை அவனுக்கு வேறு கவலைகளே கிடையாது.

தனக்கென்று நாலு ஏக்கர் நிலத்தை வருஷப்பட்டாவாக வாங்கித் திருத்திவிட்டால் போதும். வேறு யோசனையே இல்லை. அந்த நிலையில் அப்பாவின் நிலத்தை எதிர்பார்க்காவிட்டாலும் கூடத் தன் சோறு துணிக்குக் கவலை இல்லை. மண்வெட்டி, கோடாலி, கொடுவாள் முதலியவற்றைக் கொண்டு, காட்டையும் புதரையும் வெட்டியழித்து எவ்வளவு முடியுமோ அவ்வளவு நிலத்தை அவன் சீர்திருத்திக் கொண்டே வந்தான். ஒரு நாளைக்கு ஒரு கஜம் நிலத்தைச் சீர் செய்தால் கூட அவன் மிகவும் சந்தோஷத்துடன் காணப்பட்டான். அவன் தனக்குத்தானே சிரித்துக் கொள்வான் நிலத்தைப் பார்த்துப் பார்த்து. ஆறு அவனிடம் அன்பு காட்டித்தான், நன்றாக விளையும் இந்த நிலத்தை அவனுக்காக விட்டுச் சென்றிருக்கிறது. அவனுக்கும் தன்சிரியின்மேல் அன்புதான். வெள்ளத்தில் கூட முழுகாத நிலையில் இவன் நிலத்தை ஆறு மேடாக்கிச் செல்கிறது.

வெயிலில் வியர்வையால் நனைந்து, களைத்துப்போய் அவன் இலவ மரத்தினடியில் உட்கார்ந்துவிடுகிறான். மண்வெட்டியும் கோடாலியும் உபயோகித்து, அவனுடைய உள்ளங்கைகள் இரண்டும் காய்ச்சுக் கரடு தட்டிப்போய்விட்டன. உள்ளங்கை களைத் தன் முன்னே நீட்டிப் பார்க்கிறான். உள்ளங்கைகளில் பாக்யரேகை இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறான். ஆனால் அவனுக்கு அது தெரியாது. உள்ளங்கையில் இப்படியும் அப்படியும் கோடுகள் கிடக்கின்றன. அவற்றின் அர்த்தம் இன்னதென்று யாருக்குத் தெரியும்?

குலச் வானத்தைப் பார்த்தான். ஐப்பசி மாதத்துத் தூய வானம்; அவனுடைய உள்ளமும் தெளிவடைகிறது; சிறுது தூரத்தில் தெரியும் தன் பாஹுி வீட்டு மனையைப் பார்த்தான்; அந்த இடத்தில்தான் வீடு கட்டவேண்டும். முன்னாடியே அவன் தோட்டத்தைப் போட்டிருந்தான்; சில வகை வாழைகள் தார்போட்டிருந்தன. மேட்டில் நிறையச் சிவப்பு ஆப்பிள்கள் வளர்ந்திருக்கின்றன. இந்தத் தடவை கடுகும் நன்றாகவே விளையும்போல் இருக்கிறது. அது கொஞ்சம் கை கொடுத்து உதவும் இந்தப் பசலியில்.

குலச் தன் கைகளை உற்றுப் பார்த்தான். அவை நன்றாகவே கறுப்பாய் ஆகிவிட்டன; அதுவும் சரிதான். "நாள் பூராவும் இந்த ஐப்பசி வெய்யிலில் கடுமையாய் வேலை செய்ய

வேண்டியிருக்கிறது. ஏன் கறுப்பு ஆகாது? உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து போய் தன்சிரியின் தண்ணீரில் இறங்கினான். இப்போது அதன் தண்ணீர் ஸ்படிகத் தாரை போல் சுத்தமாய் இருக்கிறது. கைகால் முகங்களை நன்றாகக் கழுவித் துடைத்துக் கொண்டான். பிறகு தன் முகத்தை ஆற்று நீரில் பார்த்தான். ரொம்ப நாட்களாக அவன் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்க்கவே இல்லை. அவன் முகம் அதிகமாகக் கறுப்பு ஆகி விடவில்லை. ஆனால் கடுமையான உழைப்பால் அவன் சற்றே இளைத்திருந்தான். அவன் தன் கையைக் கன்னங்களில் தடவிப் பார்த்தான். கண்ணுக்குக் கீழே அவனுடைய கன்னங்கள் ஒட்டிப் போயிருக்கின்றன. சோறு, தண்ணீர் வேளைக்குச் சாப்பிடுவதில்லை. பகல் முழுவதும் உழைத்த பிறகு சாயங்காலம் நன்றாகப் பக்குவமாய் வேண்டியதைச் சமைத்துச் சாப்பிட வேண்டியிருக்கிறது. ஆனால் அடிக்கடி மீனும் மாமிசமும் கோழிக்கறியும் சாப்பிடாவிட்டால், உடம்பு ஒத்துழைக்காது அல்லவா.

ஐப்பசி நாட்கள் எப்படியாவது கழிந்து விடவேண்டும். வீடு கூட ஒரே வீடாய் இருந்தால் பற்றாது. குறைந்தது இரண்டாவது வேண்டும் கட்டாயம். சமையல் சாப்பாட்டுக்குத் தனியாகவும், உட்காரக்கொள்ள மற்றொன்றும் ரொம்பப் பெரிய காரியம்தான். நாளும் அதிகமாயில்லை. மார்கழி பிறந்ததுமே அரிவாளும் சுத்தியலும் எடுத்துவிட வேண்டியதுதான். ஒரு ஆள், இரண்டு கைகளை வைத்துக் கொண்டு எவ்வளவு வேலை செய்ய முடியும்?

குலச் மேலே நிமிர்ந்து இலவ மரங்களின் பக்கம் பார்த்தான். அநேகமாய் எல்லா இலைகளுமே பழுத்து உதிர்ந்து விட்டன. இரண்டொரு பழுப்பு இலைகள், சில கிளைகளில் இப்போதும் இருக்கின்றன. ஒரு கிளையில் பறவைகள் கூடுகள் கட்டியிருப்பதைப் பார்த்தான். காய்ந்த வைக்கோல்களால் கட்டிய கூடுகள் கிளையிலிருந்து தொங்கின. அவற்றில் சில பழைய கூடுகள்; அநேகமாய் வைகாசி மாதம் கட்டியவையாயிருக்கலாம். இரண்டொன்று மிகப் புதியனபோல் தோன்றின. ஒவ்வொரு காய்ந்த வைக்கோல் துரும்புகளாகச் சேர்த்துப் பறவை தன்னுடைய அழகான வீட்டைத் தனக்குத் தேவையான முழு அளவுக்குக் கூடு கட்டிக் கொள்கிறது.

குலச்சும் அப்படியே கட்டிக் கொள்வான்; ஆனால் வீட்டைக் கட்டுவதற்கு முன், ஆற்றோர நிலத்தில் இன்னும் கொஞ்சம்

சேர்த்துவிட வேண்டும். நிலம்தான் உயிர் நாடி. எவளாவது ஒருத்தி வரவேண்டுமென்றால் எந்த தைரியத்தில் என்னிடம் வருவாள்.

ஒருநாள் அவன் டாலிமுக்குப் போய்ச் சந்திரனைப் பார்த்தான். அவனும் குலச்சுக்குத் தைரியமூட்டினான்; ஆனால் மிகவும் கடிந்து கொண்டான். "நீ ஒரு பெரிய முட்டாள். நீ தன்னந்தனியாக உலகத்தின் எல்லா வேலைகளையும் செய்துவிட முடியுமா? மனி இருக்கிறதா ரூபாய்? பத்து இருபது செலவழிக்கத்தான் வேண்டும். லேபர் வைத்துக்கொள்; நான் அழைத்து வருகிறேன். மிகிர் கிராமத்துக்காரர்களான துருவும் யதுவும் பணம் வாங்கிக்கொண்டு வேலைக்கு வருவார்கள். நன்றாக வேலை செய்வார்கள். நீ அவர்களை வேலைக்கு விட்டுக் கொஞ்சம் சூபர்வைஸ் பண்ணவேண்டும். முடிந்தால் நானும் வருகிறேன். எல்லாம் நன்றாகவே நடக்கும். பயப்பட வேண்டாம்" என்றான்.

சந்திரனுடைய ஆங்கிலம் அவனுக்குப் புரியாவிட்டாலும், அதன் கருத்து விளங்கிற்று. குலச்சிடம் இருபத்தேழு ரூபாய் இருந்தது. வாழையும் கரும்பும் விற்றதில் கிடைத்த பணம்; பணம் எதற்குப் பின்னே; மிகிர் கிராமத்து ஆட்களை அமர்த்தி நிலத்தைச் செய்நேர்த்தி பண்ணிவிட்டால் கவலையே இல்லையே.

அவன் இதைக் கபாஹியிடமும் சொன்னான்.

"சேர்த்து வைத்திருக்கும் பணம் எல்லாவற்றையும் செலவழித்துவிட்டு, வெறும் கையாய் இருப்பதும் நல்லதன்று" என்றாள் அவள். அப்போது தரா, "என்னிடமும் கொஞ்சம் பணம் இருக்கிறதல்லவா? அதை அண்ணனிடம் கொடுப்போமே. பணம் கொடுத்தால் அதற்குப் பதிலாக நாலுகுழி நிலம் தரமாட்டாரா அண்ணன்" என்றாள்.

"உங்கள் பணம் வேண்டாம்" என்று குலச் முதலில் மறுத்தான்; ஆனால் கபாஹியும் தராவும் மிகவும் எடுத்துச் சொல்லியபிறகு, பதினைந்து ரூபாய் வாங்கிக் கொண்டான். "இந்தப் பணத்தால் எவ்வளவு நிலம் திருத்தமுடியுமோ அது உங்களுக்கு" என்றான்.

"நீ என்ன உன்னுடையது என்னுடையது என்கிறாய்? நாங்கள் பெண்பிள்ளைகள். நிலத்தை வாயில் போட்டுக்கொண்டா தின்னப் போகிறோம்? அது நம்முடைய நிலமாய் இருக்கட்டுமே" என்றாள் கபாஹி சிரித்துக்கொண்டு.

ஜாடையைப் புரிந்து கொண்டு குலச் புன்முறுவல் பூத்தான். தராவும் அந்த ஜாடை புரிந்து வெட்கி முகம் சிவந்தாள்.

குலச் தன் நிலம் என்று சொல்லிக் கொள்ளவும் காரணம் எதுவுமில்லை; அது நமது நிலமாகத்தான் இருக்கும்.

குலச், கபாஹி மூலமாகத்தான் அப்பாவின் உடல் நிலை முன்பிருந்ததைவிடச் சற்றே குணம் பெற்றிருப்பதாகவும், அவனுடைய தாயாரும் அங்கேயே இருப்பதாகவும், அவள் செய்த பணிவிடைகளாலும், காட்டிய அக்கறையினாலும்தான் கிழவர் பிழைத்து உயிர் பெற்றதாகவும் அறிந்தான். அந்தக் குடும்பத்தில் யாருமே அவனுடைய தாயாரை விட்டுவிட விரும்பவில்லை என்றும் சொன்னாள் கபாஹி.

குலச் இந்தச் செய்திகளைப்பற்றி சிரத்தை காட்டாமல், பட்டுக் கொள்ளாமல் இருந்ததைப் பார்த்த கபாஹி, "அதுவும் நல்லதாகத்தான் ஆயிற்று. உன் அம்மா அவளுடைய புருஷனை விட்டுப்பிரிந்து இப்படி எத்தனை நாள் இருக்க முடியும்? புருஷன் பெண்சாதிகளுக்கிடையில் சண்டை இருக்கத்தான் இருக்கும். அதற்காக..." என்றாள்.

"ஆண்டவன் செயல், மறுபடியும் இப்படி நேராமல் இருக்கட்டும்" என்று மட்டுமே பதில் சொன்னான் குலச்.

"நீ இன்னும் ஒரு சேனிமாயியை இழுத்துக்கொண்டு ஓடிவந்தால்தான் சண்டை வரும்; ஆனால் இப்போது உன் அம்மா அங்கேதான் இருக்கிறாள்" என்று சொல்லிக்கொண்டு, அவனுடைய முகத்தருகே வந்து சிரித்தாள். கபாஹி பேசுவதைக் கேட்ட குலச் மிகவும் மகிழ்ச்சியடைந்தான்; இந்தப் பெண்-கபாஹி-பேசும்போது அவளிடம் அவனுக்கு ஆசை அதிகமாகிறது.

தராவோ, தன் மனத்திற்குள் "குலச் தன்னை இழுத்துக்கொண்டு ஓடிப் போவதில் தனக்கு ஆட்சேபனை இல்லை. சித்தி வழக்காடவா போகிறாள்? நம்மைப் போன்ற ஏழைகளுக்குப் பந்தலும் மேடையும் போட்டா கல்யாணம் நடக்கப்போகிறது. மழைக்காலம் போகட்டும்; குலச்சும் நிலம் திருத்திச் சேர்க்கட்டும்; விளைந்ததை அறுவடை செய்து வீட்டுக்கும் கொண்டு வந்து சேர்க்கட்டும். அதற்குப்பிறகு குலச்சின் எண்ணத்தைத் தெரிந்து

கொண்டு, நானே அவரோடு ஓடிப்போய்விடுவேன். இதில் என்ன நடக்காதது நடந்துவிடப்போகிறது" என்று எண்ணமிட்டாள்.

சந்திரனுடைய யோசனை நிறைவேறிவிட்டது. மிகிர் கிராமத்திலிருந்து துருவும் யதுவும் வேலைக்கு வந்தார்கள். நோபாலிப் பேட்டையிலிருந்து கேலா என்பவனையும் சேர்த்துக்கொண்டு, விடாமல் ஏழுநாள் வேலை செய்து, காட்டை மேட்டை வெட்டி அழித்தான்; சுமார் இரண்டு ஏக்கர் நிலம் தேறிற்று. குலச்சுக்கு மேலும் துணிச்சல் வளர்ந்தது. திருத்தப்பட்ட நிலத்தைப் பார்த்துப் பார்த்து அவன் பெருமைப்பட்டான்; கர்வப்பட்டான். மூன்று ஏக்கர் புதிய நிலம் சேர்ந்துவிட்டது. இதற்கு முன்னால் இருந்ததும் இருக்கிறது. இன்று அவன் நிலத்தின் சொந்தக்காரன் ஆகிவிட்டான். அவனுக்கு இனிமேல் ஒன்றுமே வேண்டாம். நன்கு விளையும் ஆற்றுப் படுகை நிலம். பெரும் வெள்ளம் வந்தாலொழிய இது நல்ல சொத்துதான்.

தன்சிரியைப் பார்த்துக் கொண்டு, "தன்சிரி இன்னும் சற்று அப்பால் விலகி ஓடினால் நல்லது; இந்தப் பக்கம் என் நிலத்துக்கருகில் மேடும் திட்டும் ஏற்படும். என் நிலத்தைத் தண்ணீர் தொந்தரவு செய்யாது" என்று கூறினான். அவன் கண் முன்னே கற்பனைச் சித்திரங்கள் தோன்றின. தன்சிரி விலகி அவனுடைய நிலத்திற்கு அப்பால் ஓடுகிறது. அவனுடைய நிலம் நாளுக்கு நாள் மேடாகிக் கொண்டே வருகிறது. நெல் முதலிய தானியங்கள் விளைந்து அவனுடைய நிலம் நிறைந்து கிடக்கிறது. தரா அறுவடை செய்கிறாள். கபாஹுயும் வேலை செய்கிறாள். அவன் தானியங்களை மூட்டை மூட்டையாகக் கட்டித் தோளில் சுமந்துகொண்டு வந்து வீட்டில் போடுகிறான். புதுவீட்டின் நான்கு மூலையிலும் புதிய தானியங்களின் வாசனை வீசுகிறது. பசுமையான நிலங்களுக்கிடையில் அவனுடைய வசதியான சிறிய வீடு இருக்கிறது. தரையை ஊதிவிட்டுச் சோறு சாப்பிடும்படி அமைந்த தூய்மையான கூடமும் வாசலும். குளம் குட்டைகளுக்கு அவசியமே இல்லை. தன்சிரி உள்ளவரையில் தண்ணீருக்குக் கவலைப்படவே தேவையில்லை.

வாசல் முன்புறத்தில் அவன் பூச்செடிகளும் வளர்ப்பான்.

நிலம் சீர் செய்ய அவனுக்கு முப்பது ரூபாய்கள் செலவு ஆயிற்று. அதில் பாதி ரூபாய் தராவினுடையது; ஆனால் அதற்காகவே

அவளுக்கு நிலம் கொடுக்கப்போவதில்லை. அவளுக்கு நிலம் எதற்கு? தானே ஏர் கட்டி உழப்போகிறாளா? பயிர் செய்தாலும் பதினைந்துக்கு இருபதாகக் கொடுப்பேனே தவிர நிலம் தரமாட்டேன். நிலத்தின்மேல் அவனுக்கு அவ்வளவு மோகம்.

பொன் விளையும் பூமி. நல்ல சேற்றுப் பாங்கான பூமி, மெல்லிய மண். தன் உடம்பிலிருந்து ஒரு துண்டு மாமிசத்தை வேண்டுமானாலும் கொடுத்துவிடலாம். நிலத்தைக் கொடுக்கவே முடியாது அவனால்.

தராவும் கபாஹியும் அவனிடம் பணத்தைப்பற்றியோ, தாங்கள் கேட்ட நிலத்தைப் பற்றியோ பேச்சே எடுக்கவில்லை; தரா மட்டும் ஒரு நாள், "அங்கே பக்கத்தில் வேறு யாரும் நிலம் திருத்தவில்லையே?" என்று கேட்டாள்.

"கிடையவே கிடையாது. எவன் வருவான் அங்கே. அந்த நிலம் முழுவதுமே நம்முடையது. வேறு எவனும் கண்ணால்கூடப் பார்த்ததில்லை" என்று பதில் சொன்ன குலச்சின் குரலில், வெற்றி பெற்ற ஒரு சக்கிரவர்த்தியின் தற்பெருமை தொனித்தது.

தரா ஒன்றுமே பிறகு பேசவில்லை.

குலச்சின் நிலம்தான் தராவின் நிலம். பணம் காசு நிலைத்து நிற்காது. நிலம் சாசுவதமாய் இருக்கும். நான் சேர்த்து வைத்த பணத்திலிருந்து நிலத்திற்காகச் சிறிது கொடுக்க முடிந்ததே என்று அவளுக்கும் சந்தோஷம்தான்..

மார்கழி பிறந்துவிட்டது. குறுகிய காலப் பயிர் முற்றிவிட்டது. தன்சிரி ஆற்றின் கரையில் விடியற்காலைப் பனி மூட்டம் கனமாக ஆரம்பித்திருந்தது. பகல் நேரத்து வெய்யில் இனிமையாகத் தொடங்கி இருந்தது. இரவில் கனமான போர்வைகளின் சௌக்கியம் மனதிற்குப் பிடிக்கத் துவங்கிற்று.

இந்தக் காலம் குறுகிய பயிருக்கு ஏற்றதன்று; இருந்தாலும் குலச் தன் புதிய நிலத்தில் மண் வெட்டிக் கொட்டிக் கொஞ்சம் கடுகு விதைத்துக் காய்கறிகளும் போட்டிருந்தான். இன்னும் கொஞ்ச நாளில் எல்லாமே முளை விடும். ஆற்று வண்டல் படிந்த சாரமான நிலமல்லவா.

குலச்சுக்குச் சிறிதுகூட களைப்பே ஏற்படுவதில்லை. வேலை செய்யச் செய்ய அவனுக்குக் குஷி. இரவில் கூடத்

தூங்கமாட்டானோ என்னவோ. வயலுக்குப்போகும் வரையில் வீடு கட்டுவதற்கான முன்னேற்பாடுகளைக் கவனிக்கிறான்.

மரக்கட்டைகளுக்குப் பஞ்சமில்லை. வைக்கோலும் தூர் துரும்புகளும் நிறைய இருக்கின்றன. தன்சிரியாற்றின் கரையில் உள்ள காட்டில் மூங்கில் முற்றிக் கிடக்கிறது. மழைநாட்களில் பெரிய பெரிய மூங்கில்கள் வெள்ளத்தில் வருகின்றன. இடையிடையே டாலிம் கிராமத்துக்குப் போய் கால்களும் தூண்களும் உத்தரங்களும் வெட்டிச் சேர்த்தான். டாலிமுக்கு மேற்கேயிருக்கும் பெரிய காட்டில் நல்ல மரங்கள் கிடைக்கும்; தேக்கு, மருது, வேங்கை போன்ற மரங்கள் அவை. கொஞ்சம் உள்ளே புகுந்து, அவன் நல்ல நல்ல மரங்களாகவே வெட்டிக் கொண்டு வந்தான். வீடு கட்டினால் பக்கா வீடாகவே கட்ட வேண்டும்.

பயிர் செய்யும்போது அவசரப்படுவதுபோல், இறுதிக்காலத்தில் அவசரப்பட வேண்டியதில்லை; ஆனாலும், தானியங்கள் முற்றிப் பழுத்து உதிர்ந்து போவதற்கு முன்பே, அறுவடை செய்து கொண்டு வந்தால்தான் நல்லது. பறவைகள் கொத்தித் தின்பது பெரிதில்லை. ஆனால் மானோ அல்லது காட்டுப்பன்றியோ அல்லது யானையோ புகுந்து அழிக்காமல் இருப்பதே பெரிய காரியம். யானைதான் எல்லாவற்றையும்விடப் பயங்கரமானது. ஒரு கோடியிலிருந்து ஆரம்பித்து மறுகோடி வரையில் அழித்துவிடும். ஆனால் இந்தக் கரைக்கு எப்போதாவதுதான் யானை வரும். டாலீம் கிராமத்தில்தான் யானையின் பயம் அதிகம். கிராமத்தை ஒட்டினாற்போலப் பெரிய காடு இருக்கிறது.

குலச்சின் நிலம் அதிகமில்லை. மிகக்குறைந்த பழைய நிலத்தில் அவன் நட்டிருக்கிறான். அவன் பிறர் நிலத்தில்தான் அதிகமாய்ச் சாகுபடி செய்கிறான். அவனுக்கு நல்ல அதிர்ஷ்டமிருந்தால் அவன் அடுத்த வருஷத்திலிருந்து, பிறர் நிலத்தில் உழைக்காமலேயே காலம் தள்ளலாம். ஒண்டிக்கட்டை, நான்கு ஏக்கர் நலம் இருக்கிறது. இதுவே அதிகம்தான்; ஆனால் இந்தத் தடவை அம்மா அவனுடன் இல்லை; நடவுக்கும் அறுவடைக்கும் கொஞ்சம் கஷ்டப்படும் ஆனால் அதற்கு முன்பே நாற்று நடுவதற்கு ஒருத்தி வந்துவிடுவாள் அவன் வீட்டிற்கு. கவலையே இல்லை.

கவலையே இல்லை. நிலம் வந்தது; வேலை செய்யும் ஒருத்தி வருவாள். ஆனால் அவனுக்கு இரண்டுதான் இல்லை. ஒன்று, நல்ல வேஷ்டி; மற்றொன்று புதிய சட்டை. இத்தனை நாள்வரை அவன்

தன் அம்மா நெய்த கனமான அகலம் இல்லாத வேஷ்டியையே கட்டிக்கொண்டு வருகிறான். எப்படிக் கட்டினாலும் அது முழங்கால் வரைதான் வரும். அவனுடைய சட்டையும் மிகவும் பழையது. மூன்று வருஷம் ஆகிவிட்டது. அதைத் தைத்து. அது சில இடங்களில் கிழியவும் ஆரம்பித்திருந்தது. அவன் எப்போதும் சட்டையும் போட்டுக் கொள்வதில்லை. எங்கேயாவது சுற்றப்போனால் போட்டுக் கொள்வான். தோளில் துண்டிருந்தால் போதும் அவனுக்கு; ஆனால் அவன் இந்தத் தடவை கடுகு விற்க முடியுமானால் ஒரு வேஷ்டியும், சட்டையும் வாங்கிக் கொள்ளலாம் என்றிருந்தான்.

## ஒன்பது

பெரிய காட்டில் வெட்டிப்போட்டிருந்த கட்டைகளைச் சீர் செய்வதற்காக, கோடாலியை எடுத்துக்கொண்டு புறப்பட்டான் குலச். அப்போது மார்கழி மாதத்தின் நடு நாட்கள். அறுவடை வேலை அநேகமாய் முடிந்துவிட்டிருந்தது. பள்ளத்தாக்கில் இருந்த நெற்பயிர் இன்னும் முற்றவில்லை நன்றாக. இதற்கிடையில் வீட்டிற்கான வேலைகளைக் கொஞ்சம் கவனித்தால் நல்லது. காட்டிலேயே கட்டைகளைச் சீர் செய்து, அவற்றை ஆட்கள் மூலம் தலைச்சுமையாகவோ அல்லது மாட்டு வண்டி மூலமாகவோ ஆற்றின் கரைப்பக்கம் கொண்டு வரவேண்டியிருக்கும். மெதுவாய் ஆற்றுக்கருகில் கொண்டு வந்து சேர்த்துவிட்டால், அப்புறம் கவலை இல்லை. நேபாளிப் பேட்டைக்குச் சென்று அவன் தன் மாடு கன்றுகளைப் பற்றி விசாரித்தான். அவை மிகவும் நன்றாகவே இருந்தன. கொழுத்துப் பருத்துப் போயிருந்தன. தன்சிரிக்குப் பக்கத்தில் புல்லுக்குக் குறைச்சலே இல்லை. புலிக்கு இரையாகாமல் தப்பினால் சரி; அதுவே பெரிது. அடுத்த வருஷத்திலிருந்து அவன் மாடுகளை நேபாளியிடம் விட வேண்டியதில்லை; தானே வைத்துக்கொள்ளலாம்.

குலச்சுக்குத் தண்ணீர் தாகம் ஏற்பட்டது. டாலிம் கிராமத்தில் இன்று அவனுக்கு வீடு இல்லை. இடிந்து விழும் அவனுடைய வீடு இன்னும் இருக்கிறது. ஆனால் அங்கே அவன் அம்மாவும் இல்லையே; அவனுக்கு அங்கே போக விருப்பமில்லை.

எல்லாரும் வயலில் இருந்தார்கள். ஊர் முழுதும் அமைதியாயிருந்தது. வீட்டில் இருக்கும் குழந்தை குட்டிகள். மகள்

மருமகள் உட்பட எல்லாரும் சாப்பிட்டு விட்டு வயலுக்குப் போயிருந்தனர். எல்லாரும் சேர்ந்துதானே உழைக்கவேண்டும்.

கபாஹுயின் வீட்டுக் கதவு சற்றே திறந்து இருப்பதைப் பார்த்து, குலச் உள்ளே போனான். "அக்கா..." என்று கூப்பிட்டான்.

உள்ளேயிருந்து தரா வெளியே வந்தாள். குலச்சை பார்த்துவிட்டு அவள் ஒருகணம் வியப்புடன் மலைத்து நின்றாள். பிறகு மெல்லிய குரலில், "அடே, அண்ணனா?" என்றாள்.

"ஆமாம், உன் சித்தி எங்கே? வீட்டில் இல்லையா?"

"ஆமாம், வயலுக்குப் போயிருக்கிறாள்."

"எந்த வயலுக்குப் போயிருக்கிறாள்" என்று மோடாவின் மேல் உட்கார்ந்து அவளுடைய முகத்தைப் பார்த்துக் கேட்டான்.

"ஸபீயத் கிழவன் வயலுக்கு; நீ எங்கிருந்து வருகிறாய்?"

"பாஹுயிலிருந்துதான்; பெரிய காட்டில், தூணுக்கும் உத்திரத்திற்கும் மரம் வெட்டிக் கொண்டிருக்கிறேனே? சரி, ரொம்ப தாகமாய் இருக்கிறது. ஒரு டம்ளர் தண்ணீர் கொடு; உன் சித்தி எப்போ வருவாள்?"

"சித்தி இப்போ எங்கே வரப்போகிறாள்; பொழுது சாய்ந்துதான் வருவாள்".

"நீ ஏன் போகவில்லை?"

"உனக்குத் தெரியாதா?"

"எனக்கென்ன தெரியும்? சரி இன்னுமொரு டம்ளர் தண்ணீர் கொண்டு வா"

"நான் டீ போடுகிறேன். நீ கொஞ்சம் இரு அண்ணா; இந்தக் குளிரில் தண்ணீர் அதிகம் குடிக்கக் கூடாது." என்று சொல்லிக் கொண்டு அவனுடைய முகத்தைப் பார்த்தாள். அவனும் தராவின் முகத்தைப் பார்த்தான். நாளுக்கு நாள் அவளுடைய முகம் மலர்ந்து வருகிறது. அவளுடைய இரண்டு கன்னங்களும் ரோஜாப் பூக்கள் ஆகி வருகின்றன. அவளுடைய உடம்பு வாளிப்பும் வாகான அமைப்பும் பெற்றுவிட்டது. மேலாக்கு அவளுடைய உடம்பை மறைத்துப் போர்த்தப் பற்றவில்லை

சிறிது நேரம்வரை இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே இருந்தனர். பிறகு, "நெல் அறுவடை செய்ய நீ ஏன் போகவில்லை தரா?" என்று கேட்டான்.

தரா கதவருகே வந்து வெளியே தலையை நீட்டி எட்டிப் பார்த்தாள். மாலை நேரத்து மெல்லிய வெய்யில் ஒளிவீசிக் கொண்டிருந்தது. அக்கம் பக்கத்தில் யாருமே இல்லை. வயல் வெளியிலிருந்து குறைவான காற்று வீசிக் கொண்டிருந்தது. அந்தக் காற்றில் முற்றிப் பழுத்த நெல்லின் மணமும் கலந்து வந்து கொண்டிருந்தது.

தரா குலச்சின் அருகே வந்தாள். அவன் முன்னே முழங்கால்களை மண்டியிட்டு உட்கார்ந்தாள். சற்றே குனிந்து, "நான் வேறு என்ன சொல்ல முடியும்? நீ வரும்போது எல்லாம் சித்தியும் இருக்கிறாள். என்னை ஸபீயத் கிழவன் மகன் ஊமைக்குக் கொடுக்க ஏற்பாடாகிறது; நானும் அவனைப் பிரியமாக ஏற்றுக் கொள்ள வேண்டுமாம்" என்று சொன்னாள்.

"எவனுக்கு?" என்று குலச் இரைந்து கேட்டான்.

"அதிகமாகச் சத்தம் போடாதே; யார் காதிலாவது விழும்.

என்னை அந்த ஊமைக்கு கட்டிக் கொடுத்தால், நான் ஆற்றில் குதித்து செத்துப் போய்விடுவேன்"

குலச் தராவை ஒரு கையால் பிடித்துக் கொண்டு, "ஓகோ, உள்ளுக்கு உள்ளாக இது நடக்கிறதா? நீ இதை என்னிடம் ஏன் இதற்கு முன்பு சொல்லவில்லை?"

ஏங்கிய கண்களை மேலே தூக்கி அவனைப் பார்த்து, "எப்படிச் சொல்வேன்? சித்திதான் எப்போதும் எதிரில் நிற்கிறாளே; நீ தான் அப்போ என்ன சொல்ல முடியும்?"

"ரொம்ப சரி; அவன் நிலத்து அறுவடைக்கு நீ போகாமல் இருந்தது ரொம்ப நல்லது; துணிச்சல்தான். சரி, உன் சித்திக்கு, கூட இதை என்னிடம் சொல்ல விருப்பமில்லையா? அவள் என்ன சொல்கிறாள் இதற்கு?"

"சித்தி என்ன சொல்வாள்?" ஸபீயத்தின் நிலத்தில் வேலை செய்து வயிறு வளர்க்கிறோம்; எங்களுக்கு நிலம் நீச்சு

இருக்கிறதோ? தவிர எங்களைப்பற்றி நினைப்பவர்கள் யார் இருக்கிறார்கள்?"

"ஏன் நான் இல்லையா? நான் உங்களுக்கு ஒன்றும் ஆக மாட்டேனா? இவ்வளவு பெரிய விஷயத்தை இத்தனை நாள் என்னிடம் சொல்லாமல் ஒளித்திருக்கிறீர்கள். நான் உங்களுக்கு அயலான்-வெகுதூரம் அல்லவா?"

அவன் மிகவும் குறைபட்டுக் கொண்டான்.

"உன்னை வேறாக நினைத்தால், இதை நான் உன்னிடம் சொல்வேனா? ஏதாவது செய்ய முடியுமானால் உன்னால்தான் செய்ய முடியும்? வேறு யார் எங்களுக்கு உதவி செய்ய இருக்கிறார்கள்? சித்தி ஒரு பெண்பிள்ளைதானே; நிர்பந்தப்படுத்தினால் அவளும் ஒப்புக் கொண்டுவிடலாம்.."

"நிர்பந்திப்பானா? எவன் நிர்ப்பந்தம் செய்வான்? இந்த அரிவாளைப் பார். ஒரே தடவையில் இரண்டு துண்டாக்கிப் போடுவேன். அந்தக் கஞ்சப்பயலிடம் ஏதோ கொஞ்சம் பணம் இருக்கிறது. அதற்காக அவன் உன்னைப் பலாத்காரமாக இழுத்துக் கொண்டு போவான். நாங்களெல்லாம் இருக்கிறோமா, இல்லை செத்துப்போய் விட்டோமா?"

தராவின் முகத்தில் சிரிப்பு தவழ்ந்தது. அவள் மனத்தில் நம்பிக்கை துளிர்த்தது. குலச் அவளுக்குப் புகல் அளிப்பான். அவளைக் காப்பாற்றுவான். அவள் பக்கத்தில் குலச் இருக்கும்வரை, அவள் யாருக்கும் பயப்படவேண்டியதில்லை.

அவள் எழுந்திருந்து, "அண்ணா, நீ தவறாக நினைக்காதே. உன்னிடம் சொல்ல வேண்டுமென்று தினமும் நினைத்துக் கொண்டு, ஆனால் உன்னைத் தனியாகவே சந்திக்க முடியவில்லை. சித்தியின் எதிரில் இதை நான் எப்படிச் சொல்வது? நீ இரு; இதோ டீ போடுகிறேன். நீ ஏதாவது சாப்பிட்டாயோ?" என்ற் கேட்டாள்.

"சாப்பிடுகிறேனே" என்றான் குலச்.

தரா சமயலறைக்குள் போனாள். குலச் என்னவோ யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். தராவுக்கு இதை என்னிடம் சொல்லச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. சரி; ஆனால் கபாஹ் ஏன் சொல்லவில்லை? பணம் வாங்கிக் கொண்டு, அந்த ஊமையிடம் தராவை விற்றுவிடலாம் என்ற எண்ணமோ. பெண் பிள்ளைகளின்

உள்ளத்தைப் புரிந்து கொள்வது மிகவும் சிரமம். பணத்தைக் கண்டதும் அவர்கள் குருடாகி விடுகிறார்கள்.

"ஏ தரா." என்று கூப்பிட்டான்.

"ஏன் அண்ணா, என்ன ஆயிற்று?"

"நீ கொஞ்சம்கூடப் பயப்படாதே. பணம் வாங்கிக் கொண்டு உன் சித்தி உன்னை ஊமைப் பயலுக்கு விற்க நினைத்தால், அவளையும் வெட்டித் துண்டாடிவிடுவேன். வருவது வரட்டும் அப்புறம்" என்றாள்.

தரா பதிலே சொல்லவில்லை; ஒரு பேலா நிறையப் புதிய நெல்லின் பொரி மாவும், பாலும் வெல்லமும் கொண்டு வந்து அவன் முன்னே வைத்தாள்; இந்த நேரத்தில் தராவை விட இன்பமுற்றவள் யாருமே கிடையாது. அவள் இன்று தனியாகவே உலகத்துடன் போர் தொடுப்பாள். தோற்கவும் மாட்டாள் கட்டாயம். அவளுடன் குலச் துணை இருக்கிறான்; பிறகு ஒரு கிண்ணம் டீயும் கொடுத்தாள். இன்று அவளுக்குக் குலச்சிடம் பயமில்லை. அவளுக்கு அறவே எந்த பயமும் சந்தேகமும் இல்லை. இன்று அவள் தன் எண்ணத்தைக் குலச்சிடம் திறந்து சொல்லிவிட்டாள்.

சாப்பிடும் போது மறுபடியும் அவளுக்குத் தைரியம் சொன்னான்: "தரா, நான் வீடு கட்டி முடித்து விட்டு, உங்களை என் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போவேன். அங்கே இதுபோல மற்றவர்கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டு இருக்கத் தேவையில்லை. எனக்கு வேறே யார் இருக்கிறார்கள்?"

குலச்சிடம் தராவுக்கு முன்னிலும் அதிகமாக ஆசை உண்டாயிற்று. அவனுக்கென்ன தனி ஆண்பிள்ளை. தானும் தனிதான்; சித்தி கூட இருப்பதால் கொஞ்சம் தைரியம்; இல்லாவிட்டால் அவளுக்கு என்ன பயம் இருக்கும்.

"இன்னும் கொஞ்சம் பொரிமா வைக்கட்டுமா அண்ணா"

"வேண்டாம்; வெற்றிலை இருந்தால் கொடு."

தரா பீடா செய்து கொடுத்தாள்; அதை வாயில் போட்டுக்கொண்டு, "தரா, உன்மேல் எனக்கு ரொம்ப ஆசை;

ஊரில் வேறு எவர் வீட்டுக்கும் நான் போவதில்லை. உங்கள் வீட்டுக்கு மட்டும்தான் வருகிறேன்" என்றான்.

அவனுக்குத் தன் ஆசையை இப்படித்தான் வெளியிடத் தெரிந்தது.

தராவின் கண்கள் பனித்தன. "எனக்கும் உன்மேல் மிகவும் ஆசை" என்றாள். அந்தப் பகல் நேரம் இதற்கு சாட்சியாக இருந்தது. இருவருமே பொய் பேசவில்லை.

"நான் போய் வருகிறேன். எதற்கும் கவலைப்படாதே; வீடு கட்டி முடிந்ததும் உங்களை அழைத்துப் போய்விடுகிறேன்.."

தரா தயங்கிக் கொண்டே, "என்னிடம் இன்னும ஆறு ரூபாய் பணம் இருக்கிறது.." என்றாள்.

"இருந்தால் இருக்கட்டுமே. வைத்துக்கொள்; எங்கிருந்து கிடைத்தது?"

"துணி நெய்து விற்றேன். பால் கொஞ்சம் விற்று இரண்டு ரூபாய் கிடைத்தது.."

"பத்திரமாக வைத்துக்கொள். சிரமம் ஏற்படும்போது தேவைப்படும்"

"எனக்கு வேண்டாம்; நீயே வாங்கிக் கொள்ளேன்.."

"நானா, ஏன்? நான் ஊர் சுற்றுபவன். பணத்தை எப்படி வைத்துக்கொள்ள முடியும்?"

"வைத்துக்கொள்ள வேண்டாமே; செலவு செய்யேன்; நிலத்திலிருந்து மூட்டை தூக்க வேண்டும். காட்டில் மரம் வெட்ட வேண்டும்; வீடு கட்ட வேண்டும். யாரையாவது காசு கொடுத்து வேலைக்கு வைத்துக்கொள். ஒருவனாக எத்தனை வேலைதான் செய்வாய்?" என்று சொல்லி அவள் பணத்தை எடுத்து வர விரும்பினாள்.

"தரா.." என்று அழுத்தமாகக் கூப்பிட்டு, "பைத்தியக்காரி ஆகாதே; என்னாலே முடியவில்லையென்றால, வேறு ஆள் வைத்துக்கொள்வேன். பணத்திற்கும் நானே தோது செய்து கொள்வேன். உன் பணம் வேண்டாம். நீயே வைத்துக்கொள், வெறுங்கையாய் இருக்கக்கூடாது.."

"நீ படும் கஷ்டத்தைப் பார்த்துதான் கொடுக்க விரும்பினேன். நீ வேண்டாம் என்றால் நான் என்ன செய்யட்டும். முடிந்தால் நானே உனக்கு உதவியாக வரலாம். ஆனால் நீ தன்சிரியின் அக்கரையில் இருக்கிறாயே." அவளுடைய கன்னத்தில் மெதுவாகத் தட்டிக் கொடுத்து, "அடேயப்பா, பெரிய உதவி செய்வாளாமே இவள்! என்ன உதவி செய்வாய்? மரம் அறுத்துச் சீர் செய்வாயா?"

தரா சிரித்துவிட்டாள்.

"இன்று மரம் வெட்டவில்லை; உன்னுடன் பேசியே காலம் கழித்துவிட்டேன்; நான் போகிறேன்."

"வேலையில் அவ்வளவு அக்கறை இருந்தால் ஏன் வருகிறாயாம்? வராமேயிரேன்"

"எப்படி வராமல் இருக்க முடியும்." என்றான் வாய் நிறையச் சிரித்துக்கொண்டே

அவன் புறப்படும் போது, "அடிக்கடி வந்து கொண்டிரு அண்ணா; ஸபீயத் கிழவன் எப்போது என்ன செய்வானென்று சொல்லமுடியாது. சித்தியின் எண்ணமும், இன்னதென்று எனக்குப் புரியவில்லை. என்னை எங்கேயாவது ஒப்படைத்துவிட்டு, அவள் கவலையில்லாமல் இருக்க விரும்புகிறாள்" என்றாள் தரா.

"எல்லாரையும் வெட்டி விடுவேன் வெட்டி. நீ பயப்படாதே; நான் வந்து கொண்டிருப்பேன்; அந்த ஊமைப் பயலுடைய மற்றொரு கண்ணையும் பிடுங்கி விடுவேன்—சரி, நான் போய் வருகிறேன்."

"சரி." குலச்சை இன்னும் சிறிது நேரம் இருக்கச் சொல்லவேண்டும் என்பது அவள் ஆசை. ஆனால் சொல்லவில்லை. வாய் வார்த்தை பேசி என்ன பயன். இந்த நேரத்தில் காட்டில் அவன் ஒரு கட்டை வெட்டினாலும் வெட்டலாம்‖ பாவம்-குலச் தனியாக இருக்கிறானே." என்று தரா அவனிடம் அன்பைச் சொரிந்தாள்.

## பத்து

மார்கழி மாதம் பதினெட்டாந் தேதியன்று, சிபரியா கிராமத்து மோலோகா நாட்டாண்மைக்கார கிழவன் மகன் கேலாயிக்கும் சேனிமாயிக்கும் கல்யாணம் நடந்தேறிற்று.சேனிமாயி பெரியத்தின் இளைய தம்பியின் மகள். குலச்சுடன் அவள் ஓடியபோது, அவளை

வேறு யாருக்காவது கட்டிக் கொடுக்க யாரும் ஒரு ஏற்பாடும் செய்யவில்லை இதுவரை. கெட்ட பெயர் வாங்கிய பெண்ணைக் கட்டிக் கொண்டு, எப்போதும் ஊரார் தூற்றும் பழிக்கு எவன் ஆள் ஆவான்? இருந்தும் யாரோ சிலர் துணிந்து அவளை மணக்க முன் வந்தார்கள். அவர்களில் ஒருவன் மனைவியை இழந்தவன்; மற்றொருவன் வயதானவன். சேனிமாயியின் தந்தை கல்யாணம் செய்து கொடுக்கவில்லையே. ஓடினவள்தான்; உண்மைதான். ராத்திரி ஓடினாள்; காலையில் திரும்ப அழைத்து வந்துவிட்டான். அவள் வயிற்றிலும் குழந்தை ஒன்றும் பிறந்துவிடவில்லை. குலச்சுடன் போனதால் அவளைத் தூரவா எறிந்துவிடமுடியும்.

இதைப்பற்றி ஸபீயத் ஒன்றும் அதிகமாகக் கவலைப்பட்டுவிடவில்லை. தம்பி தீதாரத்துதான் மிகவும் கவலை அடைந்தான். அந்தப் பெண்ணும் அந்தக் கவலையில் கருகிப்போய் விட்டாள்; அதற்காக அவள் வயல்வேலைக்கும் போகாமல் இருக்கவில்லை. ஊரில் இருக்கும் எத்தனையோ வயதான பெண்களும், பலர் வீட்டு மருமகப் பெண்களும் முதலில் ஓடிப்போய்ப் பிறகு கல்யாணம் செய்து கொண்டவர்கள் தான்; அதனால் சேனிமாயை அதிகமாக ஒன்றும் பழி தூற்றிவிட முடியாது. தீதாரத்தும் தனியே தனக்குள், "பாவம், குலச்சுடன் ஓடிப்போனாள் என் மகள்; அவனுக்கே இவளைக் கல்யாணம் செய்து கொடுத்திருக்க வேண்டும். அவன் தானும் கஷ்டப்பட்டான். இந்தப் பெண்ணையும் கஷ்டத்திற்கு ஆளாக்கினான். கடைசியில் என் கழுத்தையே கட்டிக்கொண்டு தொங்குகிறாள் இவள்?" என்று வருத்தப்படுவான். கடைசியில் அண்ணன் ஸபீயத்துதான் எப்படியோ மோலோகாவின் பையனுக்கு இவளைக் கட்டிக் கொடுக்க ஏற்பாடு செய்தான். அவன் குடும்பம் ஏழைக் குடும்பம். கேலாயிக்கும் முப்பது வயது ஆகிவிட்டது. நீண்ட நாட்களாக அவன் வியாதியால் வருந்துகிறான். அவனுக்கு வலிப்பென்றார்கள் சிலர்; வேறு சிலர் ஆஸ்த்மா என்றார்கள். டி.பி. என்றும் சொல்பவர் உண்டு. பட்டணத்து டாக்டர் அவனுக்கு டி.பி. இல்லையென்று சொன்னாராம். இங்கிலீஷ் வைத்தியம் பார்க்க அவர்களுக்குச் சக்தி இல்லை. கிராமத்தில் அப்படி யாரும் வைத்தியம் செய்து கொள்வதும் இல்லை. ஒரு தடவை டாலிம் கிராமத்துக்கு அம்மை குத்த வந்தவன் அடிபடாமல் தப்பி ஓடிப்போனதுண்டு. கிராமத்து மந்திரவாதிகளிடம் வைத்தியம் செய்து கொண்டு அவன் இத்தனை

நாள் உயிரோடு இருக்கிறான். வியாதியை மறக்க அவன் கஞ்சா குடிக்கிறான்; கஞ்சா குடிப்பதால் அவனுக்கு இருமல் கொஞ்சம் குறைகிறது. அவனுக்குத் தாயார் இல்லை. அப்பா மோலோகா இருக்கிறான். ஒரு தம்பி இருக்கிறான். மூன்றே பேர்தான் குடும்பத்தில். கேலாயி வெளுப்பு நிறமில்லை. பழுப்பு நிறம் தான். வியாதியால் ரத்தம் குறைந்து, மஞ்சள் நிறமாக மாறியிருக்கிறது அவன் உடம்பு. அவன் கொஞ்சம் உயரம். வியாதியால் மிகவும் இளைத்திருந்ததால் அதிக உயரமாகத் தெரிந்தது; வெளிறிய உதடு, ரத்தம் இன்மையால் பஞ்சடைந்த கண்கள், துரும்பாய் இளைத்த கையும் காலும். பேசக்கூடத் தெம்பில்லை அவனுக்கு. இரவு முழுவதும் தூங்காமல் கிடக்க வேண்டியிருந்தது; தூங்கினால் இருமல் வரும். கடுகு எண்ணெய் தேய்த்துத் தேய்த்து, உடம்பில் கறையே படிந்து விட்டது. வருஷத்தில் நான்கு தடவைதான் குளிக்கிறான். அடிக்கடி குளித்தால் இருமல் அதிகமாகி விடுகிறது. வியாதியால் பலமிழந்திருந்த காரணத்தால் அவன் இயல்பாகவே மிகவும் பணிவாகவே பேசுவான். எல்லாரிடமும் அவனுக்கு என்றுமே கோபம் வராது. கஞ்சா குடித்தாலும் அவனுக்கு போதை அதிகமாக ஏறுவதில்லை. வயலுக்கும் போக முடியாது அவனால். ஆகவே அவன் வேலையே இல்லாமல் இருப்பவன். வீட்டிற்குள்ளேயோ வெளியிலேயோ அவனால் சிரமமான வேலை எதுவுமே செய்ய முடியாது. அடுப்பருகில் உட்கார்ந்து சோறு சமைப்பது, வெய்யில் வந்ததும் வாசலில் உட்கார்ந்து கூடை முடைவது, மாடுகளை மேய்த்துகொண்டு வருவது போன்ற வேலைகளையே அவன் செய்வான்; அதுவும் உடல் நிலை நன்றாக இருந்தால்தான். பௌர்ணமியிலும் அமாவாசையிலும் அவனுக்கு இருமல் அதிகம் ஆகிவிடும். அப்போதெல்லாம் சூடான சாம்பல் பற்றைப் பூசிக் கொண்டு பேசாமல் கிடப்பான்.

குலச்சுக்குக் கேலாயியை நன்றாய்த் தெரியும். குலச்சினுடைய அக்கரைப் பாஹி நிலம் சிபரியா கிராமத்தின் தென்மேற்குப் பக்கம் இருக்கிறது. பாஹியில் இருக்கும் குலச்சின் வீட்டுக்கும் கேலாயி வீட்டுக்கும் ஒரு மைல் தூரம்தான் இருக்கும்.

மோலோகாவுக்கும் பாஹியில் நிலமுண்டு. எப்போதாவது வயலில் இருவரும் சந்திப்பதும் உண்டு. ஒரு தடவை குலச் அவனுக்கு ஒரு பூசணிக்காய் கொடுத்து மீன் பிடிக்கும் கருவி வாங்கியிருக்கிறான். கேலாயி மரவேலைகளை நன்றாகச்

செய்வான். கேலாயியைப் பார்க்கும் போதெல்லாம், அவன் எந்த நேரத்தில் செத்துப்போய் விடுவானோ என்ற நினைப்பான் குலச். கேலாயி அவ்வளவு மெலிந்து போய் இருந்தான். கடுகு எண்ணெயும் கஞ்சாவும் சேர்ந்து அவன் உடம்பிலிருந்து வீசும் ஒரு நாற்றத்தை குலச்சால் பொறுத்துக் கொள்ளவே முடிவதில்லை. வாலிபனான ஆள், கொஞ்சம் சுத்தமாய் இருக்கக்கூடாதா.

கேலாயிக்கும் சேனிமாயிக்கும் கல்யாணம் என்ற செய்தி குலச்சுக்குத் தெரிந்தது. சந்திரன் சொன்னான் இதை. கபாஹியும் சொன்னாள். அந்தச் செய்தி அவனுக்கு இனம் விளங்காத அதிர்ச்சியைத் தந்தது. அவனுடைய உணர்வு கொஞ்சம் குழம்பியது. இந்த அவனுடைய மன நிலைமையையும் புரிந்து கொண்டுதான் ஒரு நாள் கபாஹி சேனிமாயியின் கல்யாண சமாசாரத்தைக் கேள்விப்பட்ட பிறகு, "நீ ஊக்கம் குறைந்து சோர்ந்துவிட்டாய்; பருவம் வந்த பெண்; கல்யாணம் ஆகாமல் வீட்டில் அடைந்து கிடப்பாளா? உனக்கு அவளைக் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும் போல் இருந்தால், நீ அதற்காக ஏதாவது முயற்சி செய்திருக்கவேண்டும்.." என்று சொன்னாள்.

குலச் பற்றில்லாமலும் அவளை மறுத்தும், "அவள் கல்யாணம் செய்து கொள்வதால் எனக்கு ஒரு தீமையும் இல்லை; பாவம், அவன் ஆஸ்துமாக்காரன் ஆயிற்றே; அவள் அவனை எப்படிக் கல்யாணம் கட்டிக் கொள்வாள்; அவனைப் பார்க்கும்போது, இப்போது சாவானோ அல்லது இன்னும் சற்றுக் கழித்துச் சாவானோ என்று தோன்றுகிறது" என்று பதில் சொன்னான்.

கபாஹி இதற்கு மேலும் அதைப்பற்றி விளையாட்டாகப் பேசவில்லை. ஒரு பருவப் பெண், இதுபோன்ற துர்ப்பாக்கியமான நிலையில் சிக்கித் தவிக்க வைக்கும் செய்தியைப் பற்றிப் பரிகாசமாகப் பேசுவது கொடிய நெஞ்சமுடையார் செயல்; ஆகவே அவளுடைய மனத்திலும் சேனிமாயியைப் பற்றி அனுதாபம் உண்டாயிற்று; ஆனால் அதில் தலையிட்டு யாரும் எதுவும் செய்யமுடியாத நிலை இப்போது; யாரோ ஒருத்தியின் கல்யாணத்தை யாரோ ஒருவன் நடத்தி வைக்கிறான். அதில் குலச்சின் வார்த்தையையோ அல்லது கபாஹி சொல்வதையோ யாரும் கேட்கப்போவதில்லை.

குலச் வாய்விட்டுச் சொல்லவில்லையே தவிர, மனத்திற்குள் சேனிமாயியின் இந்த துர்பாக்கிய நிலைக்குத் தானே காரணம் என நினைத்து வருத்தப்பட்டான். அவளைத் தன்னோடு முன்பு

அழைத்துக்கொண்டு போயிருக்காவிட்டால், அவளுக்கும் கெட்ட பெயர் வந்திருக்காது; நல்ல பையன் ஒருவனும் அவளை மணக்க முன் வந்திருப்பான்.

இவ்வாறு அதிகமாகவே நினைத்து வருந்தியபின் அவன் தன்னையே ஒருவாறு தேற்றிக்கொண்டான். "நான்தான் குற்றவாளி என்றாலும் முழுப்பழியும் என்னுடையதில்ல. நான் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளும் எண்ணத்தோடுதான் இழுத்துக் கொண்டு வந்தேன்; ஆனால் என் அப்பாக் கிழவரும், அவளுடைய அப்பாவும் சேர்ந்து இந்த ஜோடியைப் பிரித்துவிட்டார்கள்; என் குற்றமில்லையே அது" என்று நினைத்து வருத்தப்பட்டான். பாவம்; அவள் அந்தக் கஞ்சாவாலாவுடன் தீராத நித்திய நோயாளியுடன் வாழ வேண்டி வந்துவிட்டதே என்பதுதான் அவன் வருத்தம்.

தான் குற்றவாளியே என்ற நினைவு இருந்ததால், அவன் உள்ளுக்குள்ளே சொல்ல முடியாத ஒரு மனவேதனையால் வெம்பித் தவித்தான். கூடவே கேலாயி மேலும் இரக்கப்பட்டான்; பாவம், வாலிப வயதில் அவளை வியாதி பிடுங்கித் தின்கிறதே. அவன் ரொம்ப அடக்கமானவன், அமைதியானவன் என்று நினைத்தபோது குலச் உருகினான். கேலாயியின் வெளிறிய முகம் அவன் நினைவுக்கு வந்தது.

'கல்யாணம் ஆனால், சேனிமாயியினால் அவனுக்குக் கொஞ்சமாவது சுகம் கிடைக்குமா?' என்று நினைத்து அனுதாபப்பட்டுக் கொண்டே கபாஹியிடம், "சேனிமாயி என்னைச் சபிப்பாளோ? ஆனால் நான் அவளை வேண்டாமென்று சொல்லவில்லையே; அவளுடைய அப்பன் தான் அவளை என்னிடமிருந்து பிடுங்கிப் பிரித்தான்" என்றான்.

"சரிதான் விடு; ஆனது ஆகிவிட்டது. மற்றவர்களைப்பற்றி ஏன் நாம் கவலைப்படவேண்டும்? மார்கழி முடிந்துவிட்டது. தை போக மாசியிலாவது உன் வீட்டில் குடித்தனம் செய்யவேண்டும். வீடு கட்டி முடிந்துவிட்டதா?" என்று கேட்டாள் கபாஹி.

குலச் அப்போதும் சேனிமாயியைப் பற்றியேதான் ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தான். ஆகவே, "கேலாயிக்கும் அவன் அப்பனுக்கும் என்னைப் பற்றிய சங்கதிகள் எல்லாம் தெரியாது என்று நினைக்கிறேன்; தெரிந்திருந்தால் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளமாட்டார்கள்." என்றான்.

"எத்தனை பேருக்குத் தெரியும் அந்தச் சேதியெல்லாம்; யார் அவற்றைப்பற்றிப் பேசிக்கொண்டு அலையப் போகிறார்கள். நம் டாலிம் கிராமத்துக்காரர்களுக்கு வேறு வேலை என்ன? இதையே வம்பளப்பார்கள். சிபரியா கிராமத்தார்களுக்கு இதெல்லாம் தெரிய வழி இல்லையல்லவா?" என்றாள் சுபாஹி.

உண்மையோ, பொய்யோ; சுபாஹி சொன்னது குலச்சுக்குச் சற்றே தைரியம் தந்தது. மோலோகாக் கிழவனுக்குச் சேனிமாயியின் கெட்ட பெயரைப் பற்றித் தெரியாமல் இருக்குமானால் ரொம்பச் சரி. இல்லாவிட்டால் அவளை வைதுகொண்டே இருப்பான் கிழவன். அந்தத் தீராத நோயாளியும் அவளைத் தொல்லைப்படுத்துவான். நிஜமாகவே அவர்களுக்கு இந்த சமாசாரமெல்லாம் தெரியாமல் இருக்குமானால், இவனே அடிக்கடி சென்று அவளைப் பற்றித் தெரிந்து கொண்டு வரலாம். அவன் வீடும் அவர்கள் வீடும் அருகருகே இருந்தன. சாதாரணமான, ஊர்க்காரன் என்று உறவு சொல்லிக்கொண்டு அவன் போகலாம் அங்கே. ஒருக்கால் குலச்சைப் பார்ப்பதால் சேனிமாயியும் கொஞ்சம் தெம்பும் தேறுதலும் கொள்ளலாம்.

அந்தக் கல்யாணம் நடந்தபிறகு, பல நாட்கள் வரையில் குலச்சின் மனதிலிருந்து அந்தச் சுமை இறங்கவே இல்லை. வயலில் அறுவடை நடந்த காலத்தில் கூட அவனால் அதை மறக்க முடியவில்லை. அந்த நல்லவனுடைய வாழ்வே வீணாகிவிட்டது. மேலும் வீணாகப் போகிறது. அந்த வியாதிக்காரனுக்குப் பணிவிடை செய்வதைத் தவிர, அவளுக்கு மண வாழ்க்கையின் வேறு எந்த மகிழ்ச்சியும், இல்லறத்தின் மற்ற எந்த சுகமும் கிடைக்கப்போவதில்லை. கேலாயி சாகும்வரை ஏற்கனவே பாதி செத்துவிட்ட அவனுடன் இருந்தே தீர வேண்டும் அவள். அவன் தனக்குள் எத்தனையோ தடவை, "நான் செய்தது தான் அக்கிரமம்; என்னால்தான் அவளுக்கு இந்த நிலை வந்தது. சேனிமாயி நிச்சயமாக என்னை மன்னிக்கவே மாட்டாள்" என்று சொல்லிக் கொண்டான்.

'நான் அவளைப் பார்க்கப்போனால், அவள் என்னை அவமானப்படுத்தித் திருப்பி அனுப்பினால் ஆச்சரியப்படுவதற்கில்லை. நான் குற்றவாளிதானே. ஆமாம். நான்தான் குற்றம் செய்தவன்..' என்று சொல்லிக் கொண்டான் குலச்.

# பதினொன்று

தை மாதக் கடைசியில் அறுவடை முடிந்துவிடும். மாசி பிறக்க இன்னும் அதிக நாள் இல்லை. குலச்சுக்கும் சாகுபடியும் அதிகமில்லை. ஆகவே அவனுக்கு அறுவடை எல்லார்க்கும் முன்பு ஆகிவிட்டது. அவனும் கொஞ்சம் விரைவுபடுத்தினான் அறுவடையை; ஏனென்றால் அவன் வீடு கட்ட வேண்டியிருந்தது.

சில தினங்களுக்குள் அவன் வீட்டையும் கட்டிவிட்டான். மரத்தூண்களும் உத்திரங்களும் போட்டிருந்தான்; ஆனால் வீடு சின்னது; மூன்றே அறைகள்தான். அறைகளும் மிகச் சிறியவை. இன்னும் கொஞ்ச காலத்திற்குப் பிறகு அவன் பெரிய வீடு கட்டுவதாயிருந்தான். நேரமும் காலமும் நிறைய இருந்தால் வேலையும் நிறையச் செய்யலாம். முன்புறத்து வாசலை நன்றாகவே அமைத்தான்; ஆனால் அவன் வளர்க்க நினைத்த பூச்செடிகள் தேடிக் பார்த்தும் பக்கத்தில் எங்கும் கிடைக்கவில்லை. சரி, பின்னால் பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டுவிட்டான்; அரிசியோடு அப்படியே நெல் வைத்துக் கொள்வதென்றால் பெரிய களஞ்சியம் வேண்டும்; ஆகவே அதை அடுத்த வருஷம் பார்த்துக் கொள்ளலாம்; இப்போதைக்கு பூமிக்குக் கீழ் குழியில் வைக்கும் ஏற்பாடு செய்துவிட்டான். அவனிடம் அதிகம் நெல் இல்லையே இந்த வருஷம். அவன் உட்கார்வதற்காக வைத்துக்கொண்டிருந்த கொட்டகையை இடித்துவிட்டு, அந்த இடத்தில் மாட்டுக் கொட்டில் கட்டிக் கொண்டான். இப்போதைக்குக் கொட்டில் தேவையில்லையென்றாலும் மழைக் காலத்தில் அவன் மாடுகளைக் கொண்டு வரவேண்டும். மாடு கன்றுகளும் காளைமாடுகளும் இல்லையென்றால் குடும்பத்திற்கு அழகாயிருக்குமா; கோழிகளுக்கும் வாத்துக்களுக்கும் ஒரு ஏற்பாடு செய்துவிடவேண்டும். குழந்தை குட்டிகள் ஏற்படும்வரை, வீட்டு வாசலில் கோழிகளும் வாத்துக்களும், காளைகிடாரிக் கன்றுகளுமாவது இல்லாவிட்டால் வீடு சூன்யமாயிருக்குமே. ஆனால் அதற்கு இப்போது அவசரமில்லை. தூங்கும் அறையில் கூடையைப் போட்டுக் கவிழ்த்து விடலாம் கோழிகளை. இப்போதெல்லாம் நரியோ வேறு பிராணிகளோ அதிகம் வருவதில்லை.

அவசியம் இரண்டு கட்டில்களாவது வேண்டும். மூன்றாவதாகவும் ஒன்று தேவைப்படலாம். அவனுக்கும்

தராவிற்கும் ஒன்று. மற்றொன்றில் சுபாஷி படுத்துக் கொள்வாள். விருந்தாளி வந்தால் மூன்றாவது தேவைப்படும். இப்போது வேண்டுமானால் தரையில் படுத்துக் கொள்ளலாம். கல்யாணம் ஆகி ஒரு பெண் வந்து விட்டால் தரையில் படுத்துக் கொள்வது சரிப்பட்டு வருமா? ஸபீயத்தின் வீட்டில் எல்லாருமே கட்டிலில் படுத்துக் கொள்கிறார்கள்; அடேயப்பா. படுத்துக் கொள்ளட்டுமே. பணக்காரர்கள்; நாமும் ஒரு நாள் அப்படி ஆகத்தான் போகிறோம்.||டாலிம் கிராமத்து வீட்டில் இரண்டு கட்டில்கள் கிடக்கின்றன. அவற்றில் ஒன்று மிகவும் பழையது; அதன் கால்கள் கூடக் கொஞ்சம் உளுத்துவிட்டன; மற்றது புதியது. அவன்தான் அதை ஆறு ரூபாய்க்கு வாங்கினான்; அவை இரண்டையும் கொண்டுவர வேண்டியதுதான். இவ்வளவு தூரம் கொண்டு வருவது கஷ்டம்தான். வண்டியிலோ, படகிலோ, தலைச் சுமையாகவோ கொண்டு வரவேண்டியதுதான். ஒரு புது வீடு கட்டி சாமான்கள் சேர்ப்பது கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருக்கும். பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்.

ஒரே ஒரு அசௌகரியம்தான். எப்படி அதை சமாளிக்கலாம், என்ற வழி புரியவில்லை; வீட்டுக்கருகில் குளம் குட்டை கிடையாது. ஆற்றுக்கும் வீட்டுக்கும் சுமார் கால் மைல் தூரம் இருக்கும். தண்ணீர் கொண்டு வந்து நிரப்ப, பாவம், தரா வேர்த்து விறுவிறுத்துக் களைத்துப் போய்விடுவாளே; வீட்டுக்கு அஸ்திவாரம் போட்டபோது, மண்ணுக்கும் கல்லுக்குமாகத் தோண்டிய பெரிய பள்ளத்தை இன்னும் சற்று அகலமாகவும் ஆழமாகவும் ஆக்கிவிட்டால் தண்ணீர் ஊறிவிடும். நிறையவே. ஆனால் நான் ஒரு தனியாள்; வீட்டைக் கட்டுவேனா, அல்லது குளம் வெட்டிக் கொண்டிருப்பேனா. இது பெரிய கஷ்டம்தான். வீட்டுக்குப் பக்கத்தில் ஜலம் அவசியம் வேண்டுமே.||அதற்காக அவன் வீட்டுக்குப் பக்கத்திலேயே ஆறு ஓட வேண்டுமென்றும் விரும்பவில்லை. ஆறு இன்னும் எவ்வளவு தூரம் தள்ளிப் போனாலும் போகட்டும் என்பதுதான் அவன் ஆசை. அவன் நிலத்திற்கு ஆற்று வெள்ளத்தால் தீமை ஏற்படவே கூடாது என்பதுதான் அவன் விருப்பம். தன்சிரியின் மேல் அவனுக்கு இருக்கும் ஆசையினாலும்தான், அவன் அந்த ஆற்றின் கரையிலேயே தன் குடும்ப வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருக்கிறான்; அப்படிப்பட்ட தன்சிரி அவனுக்குப் பகையாகிவிடுமோ?

வயல் வழியே நடந்து ஒரு நாள் குலச் மோலோகாவின் வீட்டுப் பக்கம் போனான்; ஆனால் வீட்டிற்குப் போகவில்லை. வழியிலேயே மோலோகாவின் இளைய மகன் திகரைச் சந்தித்தான். "யார், அண்ணனா? வாருங்கள் எங்கே இப்படி?" என்றான் திகர். "கொஞ்சம் பிரம்புக்கழிகள் வேண்டும்; இங்கே ஜரத் வீட்டில் இருப்பதாகக் கேள்விப்பட்டேன்; சரி எல்லாரும் சௌக்கியம்தானே?"

"ஏதோ ஒரு மாதிரியாக சௌக்கியம்தான். என் அண்ணனுக்குத்தான் உடம்பு கொஞ்சம் சரியில்லை; உங்கள் வீடு கட்டி முடிந்துவிட்டதா அண்ணா?"

"கட்டி விட்டேன்; நான் ஒரே ஆள்; தனியாக..."

"வாருங்கள்; சற்று உட்கார்ந்துவிட்டுப் போகலாம்"

"இப்போது உட்கார நேரமில்லை எனக்கு. முடிந்தால் இப்போதே ஜரத் வீட்டிலிருந்து பிரம்பு வாங்கிக் கொண்டு போக வேண்டும். அப்புறம் ஒரு நாள் வருகிறேன்"

"நீங்கள் வரும்போதே பார்த்தேன். உங்களுக்கு ஏதாவது உதவி ஒத்தாசை செய்யவேண்டும் என்றுகூட எண்ணம் உண்டு எனக்கு; வருகிறேன் ஒரு நாள்..."

"உன் அண்ணி எப்படி இருக்கிறாள்?" என்று பட்டுக் கொள்ளாமல் கேட்டான் குலச்.

"ஏன், நன்றாயிருக்கிறாளே; உங்களுக்குத் தெரியுமா அண்ணா? அண்ணி வந்தாளோ, நான் பிழைத்தேன். சோறு சமைத்துச் சமைத்து என் இடுப்பே வளைந்து விட்டது."

அதற்குமேல் குலச் ஒன்றும் கேட்கவில்லை. பிரம்புக் கழிகளைத் தேடி கிராமத்திற்குள் புகுந்துவிட்டார்கள். ஊர்க்கோடியில், ஊருக்குள் போகும் வழியில் இருந்தது மோலோகாவின் வீடு. திகார் பார்ப்பதற்கு நன்றாயிருப்பான். அவன் உடம்பும் ஆரோக்யமாகவே இருந்தது. கொஞ்சம் கறுப்பு நிறம்; மிகவும் பணிவுடன் பேசுவான். சமையல் செய்வதும் தண்ணீர் கொண்டுவருவதுமாகவே காலம் கழித்துவிட்டான்; ஆகவே அவனிடம் ஒரு வகையான பெண்மை வளர்ந்திருந்தது. தினமும் தானே சமைத்துத் தானே போட்டுக்கொண்டு சாப்பிட்டதால் அவன் சற்றே நிறையச் சாப்பிட்டு, தொந்தியும்

தொப்பையுமாயிருந்தான். அவனும் வாலிபன்தான். இருபத்து மூன்று அல்லது இருபத்து நான்கு வயதிருக்கும் அவனுக்கு. வீட்டுக்குக் கூரை வேயும் போது உதவிக்கு அவனைக் கூப்பிட்டுக் கொள்ளலாம் என்று நினைத்தான் குலச். கூரை போடும் வேலையை அவனால் செய்யமுடியாது. என்றாலும் கீழே இருந்து வைக்கோல் வேயும் வேலையைத் தனியே செய்ய முடியாது. சிபரியா கிராமத்துப் பையன்களுள் சிலரைக் கூப்பிட்டுக்கொள்ள வேண்டும் கட்டாயம். இப்போதெல்லாம் இந்தச் சந்திரனையே பார்க்க முடியவில்லையே. எங்கே சுற்றிக்கொண்டிருக்கிறானோ. அவன் இருந்தால் நல்லது; ஆனால் அவன் எங்கோ எல்லாரையும் வைது கொண்டு திரிகிறான்.

கல்யாணத்திற்குப் பிறகு சேனிமாயியின் முகம் எப்படியிருக்கிறது என்று பார்க்க அவனுக்கு ஆவல்தான்; ஆனால் வீட்டு வாசலுக்குப் போனதும் அவனுக்குத் தைரியம் வரவில்லை. ஸபீயத்தையும் கேலாயியையும் அவன் தம்பி திகரையும் நன்றாகத் தெரியும் குலச்சுக்கு; ஆனாலும் தானாக வலியப் போய் சேனிமாயி பற்றி விசாரித்தால் யார் என்ன சொல்வார்களோ. அவளே என்ன நினைப்பாளோ? எப்போதுமே அவள் அதிகமாகமாய்ப் பேசாத பெண்; மனதிற்குள் துக்கம் இருந்தாலும் வாய்விட்டுச் சொல்லமாட்டாள்; இல்லாவிட்டால், இப்படி ஒரு தீராத வியாதிக்காரன் கையில் தன்னை ஒப்படைக்கப் பேச்சு வார்த்தை நடந்தபோதே, தன் அப்பனிடம் ஏதாவது சொல்லியிருக்கலாமே அவள். வாய் திறந்து பேசாமல் இருப்பது அவளுக்கு ஒரு வியாதியாகவே இருக்கிறது.

வீட்டின் முன்புறம் உட்கார்ந்து பிரம்புகளை வெட்டிக் கொண்டிருந்தபோது, அவன் சேனிமாயியைப் பற்றியே எண்ணிக்கொண்டிருந்தான். அவளுக்குத் தாயார் இல்லை; சின்னம்மா தான் இருந்தாள். அவள் பெரிய வாயாடி. அவளுடைய அப்பனும் சிற்றப்பனும் யமகிங்கரர்களைப் போல் இருப்பார்கள். குழந்தைகள் புலிக்கும் பயப்படுவதுபோல் அவர்கள் இருவருக்கும் பயப்படுவார்கள். இப்படிப்பட்ட ஒரு குடும்பத்தில், மூத்த பெண்ணாய் இருந்த சேனிமாயி வாயைத் திறக்காமல் விடியக்கருக்கல் முதல் இரவு வரை வேலை செய்யத்தான் கற்றிருந்தாள். நெல் முற்றுவதும், தண்ணீர் கொண்டுவந்து கொட்டுவதும், வயலில் நடவு வேலை செய்வதும், நார்ப்பட்டு நூல் நூற்பதும், துணி நெய்வதும் அவளுடைய நிரந்தரமான வேலைகள்

ஆகிவிட்டன. அவள் கைகால்களுக்கு ஓய்ச்சல் ஒழிவே கிடையாது; அவள் பேசுவதற்கு நேரமோ வாய்ப்போ கிடையாது.| இந்த நிலையில்தான் அவளுக்கும் குலச்சுக்கும் பழக்கம் ஏற்பட்டது. குலச்சும் எப்போதும் அதிகம் பேசாதவன்; அவன் யோசிக்கும் நேரம்தான் அதிகம். அவனுடைய தாயாரோ எப்போதும் ஏதாவது வேலை செய்து கொண்டேயிருப்பாள். அவன் தன் அப்பாவுடன் சேர்ந்து இருந்தபோது, மற்றவர்கள் எல்லா வேலைகளையும் செய்துவிடுவார்கள்; அவன் சாப்பாட்டிற்கு மட்டுமே தன் வீட்டிற்குப் போவான். வயலிலும், வெளியிலும், காட்டிலும், தண்ணீர்த் துறையிலும் ஆற்றின் படுகைகளிலும் சுற்றிக் கொண்டிருப்பான்; இவ்வாறு ஜனங்களிடமிருந்து விலகித் தூரத்தில் சென்றதால்தானோ என்னவோ அவனுடைய உள்ளம் மிகவும் மென்மையடைந்திருந்தது. அவனுக்கு ஜனங்களைக் கண்டால் பிடிக்கவில்லையென்றும் சொல்ல முடியாது; ஆனால், வானத்தையும் வனத்தையும் ஆற்றையும் அண்டை நிலங்களையும் பார்க்கும்போது அவன் ஒரு சிறு வயதுப் பிள்ளைபோல் ஆகிவிடுகிறான்.| |மழைக் காலத்தில் தன்சிரியில் வெள்ளம் பெருகும்போது அவன் கரையில் நின்று குதித்துக் களிப்பான். பங்குனிமாதத்தில் மெல்லிய காற்று வீசத் தொடங்கினால், அவன் தனியே இருந்து நாட்டியமாடுவான். ஆவணி மாதத்தில் பெரிய வெள்ளம் குமுறிக் கொண்டு வரும்போது, வீட்டில் இருப்பதற்குப் பதிலாக வெளியில் வந்து மழையில் நனைந்து குளிப்பான். சிரிப்பான். கொம்மாளம் போட்டுக்கொண்டு கத்துவான்.| அவன் தனக்குள் தலையும் காலும் இல்லாமல் அடியும் முடிவுமாய் ஏதாவது பாடி மகிழ்வான். தனக்குத்தானே, தன் ஆசைக் கதைகளையும், ஆசை நிறைவேறாத கதைகளையும் தன் இன்ப துன்பக் கதைகளையும் சொல்லிக் கொள்வான். தன் பாட்டில் தன்னந்தனியே சுற்றித்திரிவான்.| இந்த மாதிரிச் சுற்றிக் கொண்டிருந்தபோதுதான் சேனிமாயின் பழக்கம் ஏற்பட்டது. அவளுக்கும் அவனைப் பிடித்துவிட்டது. சிநேகம் ஏற்பட்டு வளர்ந்தது. அவளால் தன் மனத்திலிருப்பதை வெளியிட்டுச் சொல்ல முடியவில்லையே தவிர, இருவர் உள்ளங்களும் ஒட்டி உறவாடின. இருவரும் சேர்ந்து குடும்பம் நடத்தும் கனாக் கண்டனர்; அதைப்பற்றி ஊரில் கிசுமுசுவென்று பேச்சும் அடிபட்டது. ஆனால் இரண்டு குடும்பங்களுக்கும் இடையில் ஏதோ மனஸ்தாபம் இருந்தது. இருவருக்கும் கல்யாணம் நடக்கவில்லை. சேனிமாயியின் அப்பன் மறுத்துவிட்டான்.

ஒரு நாள் இரவு நேரத்தில் இருவரும் ஓடிப்போனார்கள்; அந்த ஓர் இரவு இரண்டு கைகளாலும் அவளை ஆரத் தழுவி, அவளுடைய உள்ளத்திற்குள் இருந்த காதலை அநுபவித்தான் குலச்; ஆனால் அந்த அனுபவமே முதலும் கடைசியுமாயிற்று.

சேனிமாயி பேசாமல் இருந்துவிட்டாள். தன் அப்பனை மறுத்துப் பேச முடியாமல் குலச் வீட்டிலிருந்து பிரிந்து போய் விட்டான். வெற்றி யாருக்கு; தோல்வி யாருக்கு? ஒருவருக்கும் புரியவில்லை.

சேனிமாயிக்கும் கேலாயிக்கும் கல்யாணம் ஆகிவிட்டது. குலச்சும் ஒரு பெண்ணை அழைத்துதான் வரப்போகிறான். இருவருடைய வீடுகளும் பக்கத்தில்தான் இருக்கப்போகின்றன; ஆனால் தனித்தனியே, வெவ்வேறு குடும்பங்களாக இருக்கும். இரண்டு பெண்களும் பரிசயம் இல்லைதான். குலச், சேனிமாயி இருவருக்குமே பழைய பழக்கத்தை மறக்க வேண்டித்தான் இருக்கும்.

குலச்சுக்கும் மனம் மிகவும் சுமையாய்த் தோன்றிற்று.

## பனிரெண்டு

ஆற்றின் கரையில் இலவ மரங்களில் செக்கச் சேவேல் என்ற பூக்கள் மலரும் காலம். இலைகள் உதிர்ந்த மரங்களெல்லாம் புதிய துளிர்ப்பும் பெற, வசந்தம் வரும் வழியில் விழி வைத்துக் காத்திருந்தன.

தன்சிரி ஆறு வற்றிவிட்டது. தேங்கிக் கிடந்த தண்ணீர் நீல நிறமாகி விட்டிருந்தது. தண்ணீர் இல்லை. காய்ந்த கரைகள் நின்றன. அவற்றிற்கு மிகுந்த நீர் வேட்கை. அவளுடைய மடி ஒரு நாள் நிரம்பி வழியும்; அப்பொழுது அந்தத் தாயின் வற்றிய மார்பு தடாகமாகும்.

ஆற்றின் மணலில் தண்ணீர் தேடி வந்த மான்களின் காற் சுவடுகள் பதிந்திருந்தன. கூட்டமாக வந்து தண்ணீர் குடித்துவிட்டு அவை திரும்பிச் செல்லும். இறக்கைகளை அசைக்காமல் விரித்துக் கழுகுகள் மேலே பறந்து கொண்டிருக்கின்றன. அவற்றின் கண்கள் கீழே ஆற்றின் மணலில்தான் இருக்கும்; ஏதாவது இரை கிடைக்காதா என்று அவை பார்க்கின்றன.

காட்டில் காட்டுப் பறவைகள் இன்பமாகத் தன்னிச்சைப்படி பாடிக் கொண்டு பறக்கின்றன. அவற்றின் குரல்களில் வசந்த காலத்தை வரவேற்கும் உத்ஸாகம் தொனிக்கிறது. அமைதியான மாலை நேரங்களில் காட்டுப் புறாக்களின் ஜோடியொன்று இணைந்து, உலகத்தில் தம்மைத் தவிர வேறு யாரும் இல்லையோ என்று தோன்ற கும் கும் என்று சத்தம் எழுப்பின. யாரோ ஒரு வாலிபன் வருத்தத்துடன் ஏதோ ஒரு காட்டுப்புறப்பாட்டை முணுமுணுக்கிறான்; அவன் தன் துயரக் கதையை உள்ளம் எரிந்த கதையைச் சொல்கிறான்; அவன் குரலில் கலக்கம் கரைந்திருக்கறது.

புதுப்பசலியின் பொங்கலைத் தின்று சிவப்பேறியிருந்த இளவயதுப் பெண்கள், கல கலவென்று சிரிக்கிறார்கள் காரணம் இல்லாமல்; அவர்களுடைய சிரிப்பில் பங்குனியின் பசுமையான தாக்குதல் தெரிகிறது. அவர்களுடைய உள்ளத்தில் எல்லையில்லாத குதூகலம் காண்கிறது. அவர்களுடைய மனமும் உடம்பும் புறுபுறுவென்று துள்ளிக் கொண்டிருந்தன. ஒருத்தி மற்றொருத்தியைச் சீண்டினாள், ஒருவருக்கொருவர் நெருடிக் கொண்டார்கள்; கிச்சுக்கிச்சு மூட்டிக் கொண்டார்கள். ஊரில் இருக்கும் பல்லுப்போன கிழவர்களுடன் ஒருத்தியை மற்றொருத்தி சம்பந்தப்படுத்தி, ஜோடி கட்டிப் பேசிச் சிணுங்க வைத்தார்கள். சிரித்துக் கொண்டு அங்கும் இங்கும் திரிந்தார்கள். மனத்தில் பொங்கிவழிந்த ஆனந்தத்தால் அவர்களுடைய கண்கள் சுடர் விட்டன. அவர்கள் உதடுகளில் நிரந்தரமாகப் புன் சிரிப்பு தவழ்ந்தது.

குலச்சின் மனமும் மயில் போல் ஆடியது. அவனுடைய மனமும் பாடல் இசைத்தது. அதில் எல்லா வாத்தியங்களின் இசையும் கேட்டது.

அவன் சேனிமாயி, தரா, கபாஹி போன்ற யாரைப்பற்றியும் யோசிக்கவில்லை. அமைதியற்ற அவனுடைய மனம் எதையும் தனித்து நினைக்காமல், யாவற்றையும் பற்றிச் சேர்த்து நினைக்க விரும்பிற்று. பட்டத்தின் (காற்றாடியின்) வெள்ளைச் சிறகில் அவன் தனது அமைதியற்ற மனத்தின் ஊசலாட்டங்களைக் கண்டான். தன்சிரியின் கரையில் உட்கார்ந்து, தன் துறையில் அஸ்தகிரியின் சாக்குப்படகு கட்டப்படும் காட்சியைக் காண்கிறான். அந்தப் படகில் ஏழு ராஜாக்களின்

பொக்கிஷங்களில் இருந்த வைரமும் தங்கமும் இருக்கிறது. யாருக்கு வேண்டுமோ அவர்கள் வாருங்கள். அள்ளிக் கொண்டு போங்களேன்.

பகல் வேளையின் இனிமையான வெய்யில் வேர் கொண்ட தாள்களுடன் தோழமை பூண்டுவிடுகிறது. அந்தியின் பனிமூட்டம் வைக்கோல் வேர்களுக்குத் தாலாட்டு பாடுகிறது. இரவின் ஒளி மழுங்கிய தாரகைகள் தன்சிரியின் மடியில் ஜலதேவியின் நுழைவாசலைத் தேடுகின்றன. வாசலில் வைக்கோல் போர்களில் வெய்யிலின் வெப்பம் வந்து கூடித் தங்கி விடுகிறது.

டாலிம் கிராமத்திலும், சிபரியா கிராமத்திலும் தன்சிரியின் படுகையில் புதிதாகத் திருத்தப்பட்ட நிலங்களின் மீதும், கடைசிக் குளிரின் மெல்லிய காற்று வீசுகிறது.

பால் குடிக்கும் கன்றுகளின் வாயெல்லாம் நுரை வழிகிறது. அவற்றின் தாய்ப்பசுக்கள் அவற்றை நக்கிக்கொடுத்து, உரோமங்களைப் பிரித்து விடுகின்றன. கன்றுகள் வாலை உயர்த்தி முறுக்கிக்கொண்டு அங்கும் இங்கும் துள்ளி ஓடுகின்றன.

குலச்சின் மனமும் வாலை உயர்த்திக் கொண்டு துள்ளி ஓடுகிறது.

அவனுக்குத் தன் வீட்டு வாசலின் மெல்லிய புழுதிகள் மிகவும் பிரியமாய் இருக்கின்றன.

சில நாட்கள் அவனுக்கு இப்படியே கழிந்துவிடுகின்றன. மனம் இல்லாவிட்டால் வேலை செய்யவேண்டாம்; நாம் பிறர்க்கு அடிமையில்லையே. தராவும் அவள் குடும்பமும் வந்துவிட்டால், அவன் அடுப்படிக்குக்கூட போக வேண்டியதில்லை. அம்மா இருந்தபோது அவனுக்குச் சமைக்கும் வேலை இருக்கவில்லை. ஆனால் சோறு கொதிக்கும்போது அதைப் பார்த்துக் கொண்டே இருப்பது நன்றாயிருக்கும். புத்புத்தென்று கொதிக்கும் சோற்றின் ஒரு வித வாசனை வந்து மூக்கைத் துளைக்கும். சோற்றின் கஞ்சி, பானையில் பொங்கி நெருப்பில் விழும்போது குலச் அதை மிகவும் ரசிப்பான்.

விரைவில் எல்லா வேலைகளையும் செய்து முடித்துவிட வேண்டும் என்று தோன்றும்; உடனே, எதையுமே செய்யாமல், இப்படி எங்கேயாவது போய்ச் சுற்ற வேண்டும் போலவும் தோன்றும். || குலச் ஒருநாள் சந்திரனைத் தேடிக் கொண்டு

டாலிமுக்குப் போனான். சந்திரன் வீட்டில் இல்லை. வெளியூர் போயிருந்தான். சந்திரன் ஊரில் கூட்டம் போட்டு சங்கம் அமைத்து, தலைவரையெல்லாம் தேர்ந்து எடுத்துச் சில பிரசாரங்களைச் செய்து கொண்டிருந்தான். பெண்களும் படிக்க வேண்டும். அவனுக்கு வெட்கமே இல்லையே இதைச் சொல்வதற்கு. பையன்கள் ஏதோ இரண்டு வகுப்பு படிக்கிறார்கள். எங்கேயாவது பெண்கள் படிக்கப் போவார்களோ? சந்திரனுக்குப் பட்டணத்து வாடை வந்திருக்கிறது. கிராமத்தைப் எப்படிக் குட்டிச்சுவர் ஆககப்போகிறானோ. கிராமத்துச் சாலையை அரசாங்கமே எடுத்துக்கொண்டு சீர்திருத்த வேண்டுமென்று அவன் எழுதிப் போட்டிருக்கிறானாம். மேலிடத்தாருக்கு ஊருக்கு ஒரு போஸ்ட் ஆபீஸ் மிகவும் அவசியமென்று சொல்கிறானாம். ஊர் நடுவில் ஓர் ஆஸ்பத்திரியும் வைக்க வேண்டுமென்று கேட்கிறானாம் அவன். சந்திரனுக்கு மூளை குழம்பிவிட்டதோ என்னமோ. ஆனால் அவன் தைரியசாலி. ஊரில் இருக்கும் சில வாலிபர்களையும் துணைக்குச் சேர்த்துக் கொண்டிருக்கிறானாம். ஹோலிப் பண்டிகையின்போது, ஊரில் ஒரு தியேட்டர் கட்டப் போவதாகச் சொன்னானாம். டாலிமில் நடக்கக்கூடிய காரியமா இது? கிராமத்துக்கு எப்போதாவது சாமியாரோ மடாதிபதியோ வரும்போது ஊரில் "மாவோநா" (நாடகம்) நடப்பதுண்டு. அது வந்து போனபிறகு, ஊரில் உள்ள இளஞ்சிறுவர்கள் அந்த நாடகத்தின் உரையாடல்களைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டு விளையாடுவார்கள். "நீ யாரடா துராத்மா? உனக்கு இந்தத் தடவை மன்னிப்பு கிடைக்காது.." என்றெல்லாம் வரும் அந்த உரைகள்.

தியேட்டராமே. சந்திரனுக்குப் பைத்தியம் பிடிக்காமல் இருக்கவேண்டுமே. அவன் இரண்டொரு பெண்களைக்கூடத் தன் கட்சியில் சேர்த்துக் கொண்டிருப்பதாகக் கேள்வி. உலகமே முழுகிப் போய்விடப் போகிறது.

குலச்சால் சந்திரனைப் பார்க்க முடியவில்லை; ஆனால் சந்திரன் வீட்டு வாசலில் பகாதூர் ஓஜாவை-மந்திரவாதியைச் சந்தித்தான். அந்த ஓஜா வியாதிக்கு வைத்தியம் செய்வார். பேய் பூதங்களை மந்திரம் போட்டு விரட்டுவார். சோதிடம் பார்த்து இழந்துவிட்ட பொருளைக் கண்டு பிடித்துச் சொல்லி, கைரேகை பார்த்து அதிர்ஷ்டத்தை விளக்கிச் சொல்வார். குலச்சும் தன் கையைக் கட்டிக்கொண்டு அவர் எதிரே உட்கார்ந்தான்.

"உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார் ஓஜா.

குலச் பதில் சொல்ல யோசித்தான்; அதற்குள் சந்திரனுடைய அம்மாவே, "பருவம் வந்த வாலிபப் பிள்ளை; அவனுக்கு என்ன வேண்டும்? ஒரு தடவை ஏற்பாடான கல்யாணம் தடைப்பட்டுவிட்டது. பாவம் மனைவி இல்லாமல் வாழ்கிறான்; மறுபடியும் அவனுக்கு எப்போது குடித்தனமும் குடும்பமும் ஏற்படும் என்று பார்த்துச் சொல்லுங்களேன்?" என்றாள்.

"இரண்டு அணா தரவேண்டும்" என்றார் ஓஜா.

குலச்சின் முகம் வாட்டம் கண்டது. அவன கையில் காசு இல்லை. அவனுக்கு என்னவோபோல் ஆகிவிட்டது.

"சரி, பார்த்துச் சொல்லுங்கள். நன்றாய், உள்ளது உள்ளபடிச் சொல்லி விட்டால் நான்கு அணா தருகிறேன் நான்" என்றாள் சந்திரனுடைய தாயார்.

குலச்சின் முகம் மலர்ந்தது. சந்திரன் அம்மா எத்தனை நல்லவள்.

குலச்சின் ரேகையைச் சிறிது நேரம் கவனித்துப் பார்த்துவிட்டு, "உன் கை சாதாரணக் கை இல்லை; நீ ஏதாவது பெரிய காரியம் செய்து காட்டப் போகிறாய். வீடும் குடித்தனமும் ஏற்படும் நிச்சயமாக. இதோ இந்த ரேகை ஓடுவதைப் பார். எல்லாம் மிக விரைவில் நேரப் போகின்றன. உனக்கு வரப் போகிற பெண்ணும் லட்சுமியே தான். ஆனால் நீ கொஞ்சம் ஜாக்கிரதையாகவே இருக்கவேண்டும். எதிலும் யாரிடமும் ஏமாந்து போய்விடாதே. ஆமாம், அதற்காகப் பயப்படாதே. நல்லகாலம் வரப்போகிறது. மிக நல்ல காலம். நிலம் நீச்சு ஆஸ்தி பாஸ்தியெல்லாம் நிறைய உண்டாகப் போகிறது உனக்கு" என்றார் ஓஜா. இன்னும் என்னவெல்லாமோ சோதிடம் சொன்னார் ஓஜா. குலச்சுக்கும் சந்தோஷமாகத்தான் இருந்தது அதைக்கேட்க; ஆனால் அவர் சொல்வது விளக்கமாகப் புரியவில்லை. அவர் பேச்சே அப்படி இருந்தது.

"இவனுக்கு எப்போது கல்யாணம் ஆகும்?" என்று கேட்டாள் சந்திரனின் தாய்.

ஓஜா சிரித்துக்கொண்டு, "வாலிபப் பையனுக்குக் கல்யாணம் எப்போது? எப்போது ஒருத்தியை இழுத்துக்கொண்டு

வருகிறானோ அப்போதே கல்யாணம்தான்? யாருக்குக் கவலை இதில்?" என்றார்.

குலச்சுக்கு வெட்கம் வந்துவிட்டது.

பெண்ணை இழுத்துக்கொண்டு வந்தால் கல்யாணம்தான்; இது சரிதானே. கல்யாணத்திற்கு என்ன அவசியம்; பெண்ணைக் கொண்டு வந்து வீட்டில் வைத்துக் கொண்டால் போதுமே. காரியம் முடிந்தது போலத்தான்.

எங்கோ சுற்றிவிட்டு ஒரு நாள் மாலை நேரத்தில் கபாஹியின் வீட்டுக்குப் போனான் குலச்.

அம்மாவும் பெண்ணும் வீட்டில் இருந்தார்கள். தரா சால்வை நெய்யும் வேலையை ஆரம்பித்திருந்தாள். மாலை வரை நெய்து விட்டு தறியிலிருந்து இப்போதுதான் எழுந்து வந்திருந்தாள். குலச்சைப் பார்த்துவிட்டு உள்ளே வந்தாள். "என்ன அண்ணா, எங்காவது வெளியூர் போயிருந்தீர்களா?" என்று தரா கேட்டாள்.

"எங்கே போவேன் நான்? ஓய்ச்சல் ஒழிவு இல்லாமல் வேலை இருக்கிறதே எனக்கு? நீங்கள் எல்லாம் சௌக்கியம் தானே" என்று விசாரித்தான் குலச்.

"எப்படியோ இருக்கிறோம் நாங்களும்.." என்று பதில் சொன்ன கபாஹி "உன் வீடு கட்டி முடிந்துவிட்டதா?" என்றும் கேட்டாள்.

"கட்டி ஆகிவிடும் விரைவில்.... தரா, கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் கொண்டுவா. எங்கெல்லாமோ சுற்றிவிட்டு வருகிறேன் இன்று" என்றான் குலச்.

"உன் அண்ணாவுக்கும் சேர்த்து சோறு சமைத்துவிடு தரா; ராத்திரி அவனும் இங்கேயே சாப்பிடட்டும்" என்றாள் கபாஹி.

தராவுக்கும் அதற்குமேல் உட்கார நேரமில்லை. விளக்கை ஏற்றி விளக்குக் கம்பத்தில் வைத்துவிட்டு சமையலறைக்குள் சென்றுவிட்டாள். கபாஹி ஒரு டம்ளர் ஜலம் கொண்டு வந்து கொடுத்து அவன் உட்காரச் சொல்லி வெற்றிலை பீடா ஒன்று கொடுத்துத்தானும் ஒன்று போட்டுக்கொண்டு அவனை நெருங்கி உட்கார்ந்து கொண்டாள்.

"வீடு எந்த மட்டும் ஆகியிருக்கிறது" கபாஹி கேட்டாள்.

அவனுக்கு ஆசை கூடக் காட்டப்பட்டது. கிழவருக்கு எப்போது என்ன நேருமோ சொல்ல முடியாது. ஏதாவது நேர்வதற்குள், நிலம் நீச்சு ஆஸ்தி பாஸ்திகளைப் பாகம் செய்து கொடுத்துவிட விரும்புகிறார் அவர்; இதற்காகத்தான் உன்னைக் கூப்பிடுகிறார் என்று கூடச் சொன்னார்கள்.

அப்போதும் அவன் கேட்கவில்லை. "அப்பனுக்கு நான் மகன் என்றால், என் பங்கு எனக்குக் கிடைக்கும். கிடைக்காவிட்டாலும் பெரிய நஷ்டம் இல்லை. வேறு என்ன இருக்கிறது இதில்? கொடுக்காவிட்டால் போகட்டுமே. என்மேல் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நான் சம்பாதித்துக் கொள்வேன்" என்பது எண்ணம்.

இதே விஷயத்தில் அவனுடைய அம்மாவுக்கும் அவனுக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. கிழவருடைய நிலைமை ஒன்றும் சொல்ல முடியாமல் இருக்கும் செய்தி தெரிந்து, அவள் அவரைப் பார்க்கப்போனாள். ஒரு நாள் குலச் வீட்டுக்கு வந்த நேரத்தில் அம்மாவைக் காணவில்லை. விசாரித்ததில், அவள் கொஞ்ச நாளாய் அப்பாவின் வீட்டில் இருப்பதாகக் கேள்விப்பட்டான். அவனுக்குக் கோபம் வந்து விட்டது. வீட்டைவிட்டு வெளியே கிளம்பிச் சென்றான் பாஹிக்கு. போகும்போது ஊர்க்காரர் களிடம், "நான் மறுபடியும் வீட்டுக்குவரப் போவதில்லை. பாஹியிலேயேதான் இருக்கப்போகிறேன். என் தாயாரிடமும் இதைக் கண்டிப்பாகச் சொல்லிவிடுங்கள்; அவள் இந்த வீட்டுக்கு வரத் தேவையில்லை. அங்கேயே இருக்கட்டும். மூத்தபிள்ளை இருக்கிறான்; அவனே அவளுக்குச் சோறு போடட்டும். மாடுகன்றுகளை நான் நேபாலியிடம் விட்டுவிடப்போகிறேன்... பார்த்துக்கச் சொல்லி" என்று சொல்லிவிட்டுப் போனான்.

"ஏய், எல்லாரிடமும் இப்படி நீ கோபித்துக்கொள்ளக் கூடாது; சொந்த அம்மா அப்பாதானே அவர்கள்; தாங்கள் பெற்ற பிள்ளைகளிடம் கோபப்படாமல், அவர்கள் வேறு யார் மேல் கோபப்படுவார்கள். நீயும் அங்கே போய், சமாசாரம் தெரிந்து கொண்டு வா" என்று சிலர் புத்திமதியும் சொன்னார்கள். அவன் போகவில்லை.

வியாதியில் படுத்துக் கிடக்கும் அப்பனைப்போய் ஒரு தடவையாவது பார்த்து வரவேண்டுமென்று அவனுக்கு ஆசைதான். ஆனால் அவன் தான் சொன்ன சொல்லை மீற

விரும்பவில்லை. அவன் அப்படிப் போய்விட்டால், அவனை யாராவது ஆண்பிள்ளை என்று மதிப்பார்களா அதற்குப்பிறகு; இது ஆண்பிள்ளை சமாசாரம்.

அம்மா தன்னைவிட்டுப் போய்விட்டதும், அவனுக்கு ஒரு வகையில் நல்லதாகவே பட்டது. அவனுடைய கவலை குறைந்தது. வீடு கிடக்கும் சும்மா; அந்த வீட்டில் என்ன இருக்கிறது; அம்மாவை விட மாடு கன்றுகளைப் பற்றித்தான் அவனுக்கு அதிகக் கவலை. அவற்றிற்கு ஒரு ஏற்பாடு செய்தாகி விட்டது. நேபாலிப் பேட்டையில் இருக்கும் சக்கிர பகாதூர், குலச்சின் மாடுகளைப் பார்த்துக்கொள்வான். அதற்குப் பதிலாக, நேபாலி தன் வயலில் ஏர் ஓட்டச் சொல்வான். ஏர் உழுவது காளைகள், உழட்டுமே..

தராவையும் கபாஹியையும் பற்றி அதிகமாய்க் கவலைப்படாமலேயே காரியம் நடக்கும். கபாஹி கொஞ்சம் குழப்பிவிட்டாள் காரியத்தை; ஆனால் அவனிடம் அவளுக்கு மிகவும் அன்பு உண்டு. விதிப்படி நடக்கட்டுமே மற்றது.

ஐப்பசி மாதத்தின் பின்பாதி நாட்கள்; தன்சிரியாற்றின் தண்ணீர் நாளுக்கு நாள் குறைந்து கொண்டு வருகிறது. ஆற்றின் நடுவில் சேறு சேர்ந்து திட்டுக்கள் மேடிட்டிருக்கின்றன. இந்தத் திட்டுக்களில் உருளைக்கிழங்கு, மிளகு, கத்திரிப் பயிர்கள் நன்றாய் வரும். கடுகும் பயிராகும் நன்றாய். ஆவணி, புரட்டாசி மாதங்களில் தண்ணீருக்கடியில் கிடந்த ஆற்றின் கரை நிலத்துப் புற்களும் அடித்தாள்களும் இப்போது வெளிப்பட்டுக்கிடந்தன. குலச் சீர்திருத்தியிருந்த நிலங்களில் நான்கைந்து ஏக்கர்கள் இப்படி ஆகியிருந்தன. சற்றுப் பள்ளமான இடம் அது. இப்போது அந்த நிலத்தில் குறுகிய காலப்பயிர் செய்யலாம். ஆற்றின் கரையிலிருந்து கொஞ்சம் மண்ணை வெட்டிக் கொட்டினால் மழைக்காலத்தில் கூடத் தாக்குபிடிக்கும், மழைக்காலப் பயிரும் ஏற்றலாம். வெள்ளம் வராதிருந்தால் நெல்கூட விளைக்கலாம். பெரிய வெள்ளம் வந்தால்... எல்லாமே முழுகிப்போய் விடும்; அது தனி விஷயம்.

புதிய நம்பிக்கையுடனும், புதிய உணர்ச்சிகளுடனும் குலச் புதிய நிலத்தைச் சீர்திருத்த ஆரம்பித்தான். பொழுது விடிந்தது முதல் பொழுது சாயும் வரை அவனுக்கு வேறு கவலைகளே கிடையாது.

தனக்கென்று நாலு ஏக்கர் நிலத்தை வருஷப்பட்டாவாக வாங்கித் திருத்திவிட்டால் போதும். வேறு யோசனையே இல்லை. அந்த நிலையில் அப்பாவின் நிலத்தை எதிர்பார்க்காவிட்டாலும் கூடத் தன் சோறு துணிக்குக் கவலை இல்லை. மண்வெட்டி, கோடாலி, கொடுவாள் முதலியவற்றைக் கொண்டு, காட்டையும் புதரையும் வெட்டியழித்து எவ்வளவு முடியுமோ அவ்வளவு நிலத்தை அவன் சீர்திருத்திக் கொண்டே வந்தான். ஒரு நாளைக்கு ஒரு சுஜும் நிலத்தைச் சீர் செய்தால் கூட அவன் மிகவும் சந்தோஷத்துடன் காணப்பட்டான். அவன் தனக்குத்தானே சிரித்துக் கொள்வான் நிலத்தைப் பார்த்துப் பார்த்து. ஆறு அவனிடம் அன்பு காட்டித்தான், நன்றாக விளையும் இந்த நிலத்தை அவனுக்காக விட்டுச் சென்றிருக்கிறது. அவனுக்கும் தன்சிரியின்மேல் அன்புதான். வெள்ளத்தில் கூட முழுகாத நிலையில் இவன் நிலத்தை ஆறு மேடாக்கிச் செல்கிறது.

வெயிலில் வியர்வையால் நனைந்து, களைத்துப்போய் அவன் இலவ மரத்தினடியில் உட்கார்ந்துவிடுகிறான். மண்வெட்டியும் கோடாலியும் உபயோகித்து, அவனுடைய உள்ளங்கைகள் இரண்டும் காய்ச்சுக் கரடு தட்டிப்போய்விட்டன. உள்ளங்கை களைத் தன் முன்னே நீட்டிப் பார்க்கிறான். உள்ளங்கைகளில் பாக்யரேகை இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறான். ஆனால் அவனுக்கு அது தெரியாது. உள்ளங்கையில் இப்படியும் அப்படியும் கோடுகள் கிடக்கின்றன. அவற்றின் அர்த்தம் இன்னதென்று யாருக்குத் தெரியும்?

குலச் வானத்தைப் பார்த்தான். ஐப்பசி மாதத்துத் தூய வானம்; அவனுடைய உள்ளமும் தெளிவடைகிறது; சிறுது தூரத்தில் தெரியும் தன் பாஹறி வீட்டு மனையைப் பார்த்தான்; அந்த இடத்தில்தான் வீடு கட்டவேண்டும். முன்னாடியே அவன் தோட்டத்தைப் போட்டிருந்தான்; சில வகை வாழைகள் தார்போட்டிருந்தன. மேட்டில் நிறையச் சிவப்பு ஆப்பிள்கள் வளர்ந்திருக்கின்றன. இந்தத் தடவை கடுகும் நன்றாகவே விளையும்போல் இருக்கிறது. அது கொஞ்சம் கை கொடுத்து உதவும் இந்தப் பசலியில்.

குலச் தன் கைகளை உற்றுப் பார்த்தான். அவை நன்றாகவே கறுப்பாய் ஆகிவிட்டன; அதுவும் சரிதான். "நாள் பூராவும் இந்த ஐப்பசி வெய்யிலில் கடுமையாய் வேலை செய்ய

வேண்டியிருக்கிறது. ஏன் கறுப்பு ஆகாது? உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து போய் தன்சிரியின் தண்ணீரில் இறங்கினான். இப்போது அதன் தண்ணீர் ஸ்படிகத் தாரை போல் சுத்தமாய் இருக்கிறது. கைகால் முகங்களை நன்றாகக் கழுவித் துடைத்துக் கொண்டான். பிறகு தன் முகத்தை ஆற்று நீரில் பார்த்தான். ரொம்ப நாட்களாக அவன் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்க்கவே இல்லை. அவன் முகம் அதிகமாகக் கறுப்பு ஆகி விடவில்லை. ஆனால் கடுமையான உழைப்பால் அவன் சற்றே இளைத்திருந்தான். அவன் தன் கையைக் கன்னங்களில் தடவிப் பார்த்தான். கண்ணுக்குக் கீழே அவனுடைய கன்னங்கள் ஒட்டிப் போயிருக்கின்றன. சோறு, தண்ணீர் வேளைக்குச் சாப்பிடுவதில்லை. பகல் முழுவதும் உழைத்த பிறகு சாயங்காலம் நன்றாகப் பக்குவமாய் வேண்டியதைச் சமைத்துச் சாப்பிட வேண்டியிருக்கிறது. ஆனால் அடிக்கடி மீனும் மாமிசமும் கோழிக்கறியும் சாப்பிடாவிட்டால், உடம்பு ஒத்துழைக்காது அல்லவா.

ஐப்பசி நாட்கள் எப்படியாவது கழிந்து விடவேண்டும் வீடு கூட ஒரே வீடாய் இருந்தால் பற்றாது. குறைந்தது இரண்டாவது வேண்டும் கட்டாயம். சமையல் சாப்பாட்டுக்குத் தனியாகவும், உட்காரக்கொள்ள மற்றொன்றும் ரொம்பப் பெரிய காரியம்தான். நாளும் அதிகமாயில்லை. மார்கழி பிறந்ததுமே அரிவாளும் சுத்தியலும் எடுத்துவிட வேண்டியதுதான். ஒரு ஆள், இரண்டு கைகளை வைத்துக் கொண்டு எவ்வளவு வேலை செய்ய முடியும்?

குலச் மேலே நிமிர்ந்து இலவ மரங்களின் பக்கம் பார்த்தான். அநேகமாய் எல்லா இலைகளுமே பழுத்து உதிர்ந்து விட்டன. இரண்டொரு பழுப்பு இலைகள், சில கிளைகளில் இப்போதும் இருக்கின்றன. ஒரு கிளையில் பறவைகள் கூடுகள் கட்டியிருப்பதைப் பார்த்தான். காய்ந்த வைக்கோல்களால் கட்டிய கூடுகள் கிளையிலிருந்து தொங்கின. அவற்றில் சில பழைய கூடுகள்; அநேகமாய் வைகாசி மாதம் கட்டியவையாயிருக்கலாம். இரண்டொன்று மிகப் புதியனபோல் தோன்றின. ஒவ்வொரு காய்ந்த வைக்கோல் துரும்புகளாகச் சேர்த்துப் பறவை தன்னுடைய அழகான வீட்டைத் தனக்குத் தேவையான முழு அளவுக்குக் கூடு கட்டிக் கொள்கிறது.

குலச்சும் அப்படியே கட்டிக் கொள்வான்; ஆனால் வீட்டைக் கட்டுவதற்கு முன், ஆற்றோர நிலத்தில் இன்னும் கொஞ்சம்

சேர்த்துவிட வேண்டும். நிலம்தான் உயிர் நாடி. எவளாவது ஒருத்தி வரவேண்டுமென்றால் எந்த தைரியத்தில் என்னிடம் வருவாள்.

ஒருநாள் அவன் டாலிமுக்குப் போய்ச் சந்திரனைப் பார்த்தான். அவனும் குலச்சுக்குத் தைரியமூட்டினான்; ஆனால் மிகவும் கடிந்து கொண்டான். "நீ ஒரு பெரிய முட்டாள். நீ தன்னந்தனியாக உலகத்தின் எல்லா வேலைகளையும் செய்துவிட முடியுமா? மணி இருக்கிறதா ரூபாய்? பத்து இருபது செலவழிக்கத்தான் வேண்டும். லேபர் வைத்துக்கொள்; நான் அழைத்து வருகிறேன். மிகிர் கிராமத்துக்காரர்களான துருவும் யதுவும் பணம் வாங்கிக்கொண்டு வேலைக்கு வருவார்கள். நன்றாக வேலை செய்வார்கள். நீ அவர்களை வேலைக்கு விட்டுக் கொஞ்சம் சூபர்வைஸ் பண்ணவேண்டும். முடிந்தால் நானும் வருகிறேன். எல்லாம் நன்றாகவே நடக்கும். பயப்பட வேண்டாம்" என்றான்.

சந்திரனுடைய ஆங்கிலம் அவனுக்குப் புரியாவிட்டாலும், அதன் கருத்து விளங்கிற்று. குலச்சிடம் இருபத்தேழு ரூபாய் இருந்தது. வாழையும் கரும்பும் விற்றதில் கிடைத்த பணம்; பணம் எதற்குப் பின்னே; மிகிர் கிராமத்து ஆட்களை அமர்த்தி நிலத்தைச் செய்நேர்த்தி பண்ணிவிட்டால் கவலையே இல்லையே.

அவன் இதைக் கபாஹியிடமும் சொன்னான்.

"சேர்த்து வைத்திருக்கும் பணம் எல்லாவற்றையும் செலவழித்துவிட்டு, வெறும் கையாய் இருப்பதும் நல்லதன்று" என்றாள் அவள். அப்போது தரா, "என்னிடமும் கொஞ்சம் பணம் இருக்கிறதல்லவா? அதை அண்ணனிடம் கொடுப்போமே. பணம் கொடுத்தால் அதற்குப் பதிலாக நாலுகுழி நிலம் தரமாட்டாரா அண்ணன்" என்றாள்.

"உங்கள் பணம் வேண்டாம்" என்று குலச் முதலில் மறுத்தான்; ஆனால் கபாஹியும் தராவும் மிகவும் எடுத்துச் சொல்லியபிறகு, பதினைந்து ரூபாய் வாங்கிக் கொண்டான். "இந்தப் பணத்தால் எவ்வளவு நிலம் திருத்தமுடியுமோ அது உங்களுக்கு" என்றான்.

"நீ என்ன உன்னுடையது என்னுடையது என்கிறாய்? நாங்கள் பெண்பிள்ளைகள். நிலத்தை வாயில் போட்டுக்கொண்டா தின்னப் போகிறோம்? அது நம்முடைய நிலமாய் இருக்கட்டுமே" என்றாள் கபாஹி சிரித்துக்கொண்டு.

ஜாடையைப் புரிந்து கொண்டு குலச் புன்முறுவல் பூத்தான். தராவும் அந்த ஜாடை புரிந்து வெட்கி முகம் சிவந்தாள்.

குலச் தன் நிலம் என்று சொல்லிக் கொள்ளவும் காரணம் எதுவுமில்லை; அது நமது நிலமாகத்தான் இருக்கும்.

குலச். கபாஹி மூலமாகத்தான் அப்பாவின் உடல் நிலை முன்பிருந்ததைவிடச் சற்றே குணம் பெற்றிருப்பதாகவும், அவனுடைய தாயாரும் அங்கேயே இருப்பதாகவும், அவள் செய்த பணிவிடைகளாலும், காட்டிய அக்கறையினாலும்தான் கிழவர் பிழைத்து உயிர் பெற்றதாகவும் அறிந்தான். அந்தக் குடும்பத்தில் யாருமே அவனுடைய தாயாரை விட்டுவிட விரும்பவில்லை என்றும் சொன்னாள் கபாஹி.

குலச் இந்தச் செய்திகளைப்பற்றி சிரத்தை காட்டாமல், பட்டுக் கொள்ளாமல் இருந்ததைப் பார்த்த கபாஹி, "அதுவும் நல்லதாகத்தான் ஆயிற்று. உன் அம்மா அவளுடைய புருஷனை விட்டுப்பிரிந்து இப்படி எத்தனை நாள் இருக்க முடியும்? புருஷன் பெண்சாதிகளுக்கிடையில் சண்டை இருக்கத்தான் இருக்கும். அதற்காக..." என்றாள்.

"ஆண்டவன் செயல், மறுபடியும் இப்படி நேராமல் இருக்கட்டும்" என்று மட்டுமே பதில் சொன்னான் குலச்.

"நீ இன்னும் ஒரு சேனிமாயியை இழுத்துக்கொண்டு ஓடிவந்தால்தான் சண்டை வரும்; ஆனால் இப்போது உன் அம்மா அங்கேதான் இருக்கிறாள்" என்று சொல்லிக்கொண்டு, அவனுடைய முகத்தருகே வந்து சிரித்தாள். கபாஹி பேசுவதைக் கேட்ட குலச் மிகவும் மகிழ்ச்சியடைந்தான்; இந்தப் பெண்-கபாஹி-பேசும்போது அவளிடம் அவனுக்கு ஆசை அதிகமாகிறது.

தராவோ, தன் மனத்திற்குள் "குலச் தன்னை இழுத்துக்கொண்டு ஓடிப் போவதில் தனக்கு ஆட்சேபனை இல்லை. சித்தி வழக்காடவா போகிறாள்? நம்மைப் போன்ற ஏழைகளுக்குப் பந்தலும் மேடையும் போட்டா கல்யாணம் நடக்கப்போகிறது. மழைக்காலம் போகட்டும்; குலச்சும் நிலம் திருத்திச் சேர்க்கட்டும்; விளைந்ததை அறுவடை செய்து வீட்டுக்கும் கொண்டு வந்து சேர்க்கட்டும். அதற்குப்பிறகு குலச்சின் எண்ணத்தைத் தெரிந்து

கொண்டு, நானே அவரோடு ஓடிப்போய்விடுவேன். இதில் என்ன நடக்காதது நடந்துவிடப்போகிறது" என்று எண்ணமிட்டாள்.

சந்திரனுடைய யோசனை நிறைவேறிவிட்டது. மிகிர் கிராமத்திலிருந்து துருவும் யதுவும் வேலைக்கு வந்தார்கள். நோபாலிப் பேட்டையிலிருந்து கேலா என்பவனையும் சேர்த்துக்கொண்டு, விடாமல் ஏழுநாள் வேலை செய்து, காட்டை மேட்டை வெட்டி அழித்தான்; சுமார் இரண்டு ஏக்கர் நிலம் தேறிற்று. குலச்சுக்கு மேலும் துணிச்சல் வளர்ந்தது. திருத்தப்பட்ட நிலத்தைப் பார்த்துப் பார்த்து அவன் பெருமைப்பட்டான்; கர்வப்பட்டான். மூன்று ஏக்கர் புதிய நிலம் சேர்ந்துவிட்டது. இதற்கு முன்னால் இருந்ததும் இருக்கிறது. இன்று அவன் நிலத்தின் சொந்தக்காரன் ஆகிவிட்டான். அவனுக்கு இனிமேல் ஒன்றுமே வேண்டாம். நன்கு விளையும் ஆற்றுப் படுகை நிலம். பெரும் வெள்ளம் வந்தாலொழிய இது நல்ல சொத்துதான்.

தன்சிரியைப் பார்த்துக் கொண்டு, "தன்சிரி இன்னும் சற்று அப்பால் விலகி ஓடினால் நல்லது; இந்தப் பக்கம் என் நிலத்துக்கருகில் மேடும் திட்டும் ஏற்படும். என் நிலத்தைத் தண்ணீர் தொந்தரவு செய்யாது" என்று கூறினான். அவன் கண் முன்னே கற்பனைச் சித்திரங்கள் தோன்றின. தன்சிரி விலகி அவனுடைய நிலத்திற்கு அப்பால் ஓடுகிறது. அவனுடைய நிலம் நாளுக்கு நாள் மேடாகிக் கொண்டே வருகிறது. நெல் முதலிய தானியங்கள் விளைந்து அவனுடைய நிலம் நிறைந்து கிடக்கிறது. தரா அறுவடை செய்கிறாள். கபாஹியும் வேலை செய்கிறாள். அவன் தானியங்களை மூட்டை மூட்டையாகக் கட்டித் தோளில் சுமந்துகொண்டு வந்து வீட்டில் போடுகிறான். புதுவீட்டின் நான்கு மூலையிலும் புதிய தானியங்களின் வாசனை வீசுகிறது. பசுமையான நிலங்களுக்கிடையில் அவனுடைய வசதியான சிறிய வீடு இருக்கிறது. தரையை ஊதிவிட்டுச் சோறு சாப்பிடும்படி அமைந்த தூய்மையான கூடமும் வாசலும். குளம் குட்டைகளுக்கு அவசியமே இல்லை. தன்சிரி உள்ளவரையில் தண்ணீருக்குக் கவலைப்படவே தேவையில்லை.

வாசல் முன்புறத்தில் அவன் பூச்செடிகளும் வளர்ப்பான்.

நிலம் சீர் செய்ய அவனுக்கு முப்பது ரூபாய்கள் செலவு ஆயிற்று. அதில் பாதி ரூபாய் தராவினுடையது; ஆனால் அதற்காகவே

அவளுக்கு நிலம் கொடுக்கப்போவதில்லை. அவளுக்கு நிலம் எதற்கு? தானே ஏர் கட்டி உழப்போகிறாளா? பயிர் செய்தாலும் பதினைந்துக்கு இருபதாகக் கொடுப்பேனே தவிர நிலம் தரமாட்டேன். நிலத்தின்மேல் அவனுக்கு அவ்வளவு மோகம்.

பொன் விளையும் பூமி. நல்ல சேற்றுப் பாங்கான பூமி. மெல்லிய மண். தன் உடம்பிலிருந்து ஒரு துண்டு மாமிசத்தை வேண்டுமானாலும் கொடுத்துவிடலாம். நிலத்தைக் கொடுக்கவே முடியாது அவனால்.

தராவும் கபாஹியும் அவனிடம் பணத்தைப்பற்றியோ, தாங்கள் கேட்ட நிலத்தைப் பற்றியோ பேச்சே எடுக்கவில்லை; தரா மட்டும் ஒரு நாள், "அங்கே பக்கத்தில் வேறு யாரும் நிலம் திருத்தவில்லையே?" என்று கேட்டாள்.

"கிடையவே கிடையாது. எவன் வருவான் அங்கே. அந்த நிலம் முழுவதுமே நம்முடையது. வேறு எவனும் கண்ணால்கூடப் பார்த்ததில்லை" என்று பதில் சொன்ன குலச்சின் குரலில், வெற்றி பெற்ற ஒரு சக்கிரவர்த்தியின் தற்பெருமை தொனித்தது.

தரா ஒன்றுமே பிறகு பேசவில்லை.

குலச்சின் நிலம்தான் தராவின் நிலம். பணம் காசு நிலைத்து நிற்காது. நிலம் சாசுவதமாய் இருக்கும். நான் சேர்த்து வைத்த பணத்திலிருந்து நிலத்திற்காகச் சிறிது கொடுக்க முடிந்ததே என்று அவளுக்கும் சந்தோஷம்தான்..

மார்கழி பிறந்துவிட்டது. குறுகிய காலப் பயிர் முற்றிவிட்டது. தன்சிரி ஆற்றின் கரையில் விடியற்காலைப் பனி மூட்டம் கனமாக ஆரம்பித்திருந்தது. பகல் நேரத்து வெய்யில் இனிமையாகத் தொடங்கி இருந்தது. இரவில் கனமான போர்வைகளின் சௌக்கியம் மனதிற்குப் பிடிக்கத் துவங்கிற்று.

இந்தக் காலம் குறுகிய பயிருக்கு ஏற்றதன்று; இருந்தாலும் குலச் தன் புதிய நிலத்தில் மண் வெட்டிக் கொட்டிக் கொஞ்சம் கடுகு விதைத்துக் காய்கறிகளும் போட்டிருந்தான். இன்னும் கொஞ்ச நாளில் எல்லாமே முளை விடும். ஆற்று வண்டல் படிந்த சாரமான நிலமல்லவா.

குலச்சுக்குச் சிறிதுகூட களைப்பே ஏற்படுவதில்லை. வேலை செய்யச் செய்ய அவனுக்குக் குஷி. இரவில் கூடத்

தூங்கமாட்டானோ என்னவோ. வயலுக்குப்போகும் வரையில் வீடு கட்டுவதற்கான முன்னேற்பாடுகளைக் கவனிக்கிறான்.

மரக்கட்டைகளுக்குப் பஞ்சமில்லை. வைக்கோலும் தூர் துரும்புகளும் நிறைய இருக்கின்றன. தன்சிரியாற்றின் கரையில் உள்ள காட்டில் மூங்கில் முற்றிக் கிடக்கிறது. மழைநாட்களில் பெரிய பெரிய மூங்கில்கள் வெள்ளத்தில் வருகின்றன. இடையிடையே டாலிம் கிராமத்துக்குப் போய் கால்களும் தூண்களும் உத்தரங்களும் வெட்டிச் சேர்த்தான். டாலிமுக்கு மேற்கேயிருக்கும் பெரிய காட்டில் நல்ல மரங்கள் கிடைக்கும்; தேக்கு, மருது, வேங்கை போன்ற மரங்கள் அவை. கொஞ்சம் உள்ளே புகுந்து, அவன் நல்ல நல்ல மரங்களாகவே வெட்டிக் கொண்டு வந்தான். வீடு கட்டினால் பக்கா வீடாகவே கட்ட வேண்டும்.

பயிர் செய்யும்போது அவசரப்படுவதுபோல், இறுதிக்காலத்தில் அவசரப்பட வேண்டியதில்லை; ஆனாலும், தானியங்கள் முற்றிப் பழுத்து உதிர்ந்து போவதற்கு முன்பே, அறுவடை செய்து கொண்டு வந்தால்தான் நல்லது. பறவைகள் கொத்தித் தின்பது பெரிதில்லை. ஆனால் மானோ அல்லது காட்டுப்பன்றியோ அல்லது யானையோ புகுந்து அழிக்காமல் இருப்பதே பெரிய காரியம். யானைதான் எல்லாவற்றையும்விடப் பயங்கரமானது. ஒரு கோடியிலிருந்து ஆரம்பித்து மறுகோடி வரையில் அழித்துவிடும். ஆனால் இந்தக் கரைக்கு எப்போதாவதுதான் யானை வரும். டாலீம் கிராமத்தில்தான் யானையின் பயம் அதிகம். கிராமத்தை ஒட்டினாற்போலப் பெரிய காடு இருக்கிறது.

குலச்சின் நிலம் அதிகமில்லை. மிகக்குறைந்த பழைய நிலத்தில் அவன் நட்டிருக்கிறான். அவன் பிறர் நிலத்தில்தான் அதிகமாய்ச் சாகுபடி செய்கிறான். அவனுக்கு நல்ல அதிர்ஷ்டமிருந்தால் அவன் அடுத்த வருஷத்திலிருந்து, பிறர் நிலத்தில் உழைக்காமலேயே காலம் தள்ளலாம். ஒண்டிக்கட்டை, நான்கு ஏக்கர் நலம் இருக்கிறது. இதுவே அதிகம்தான்; ஆனால் இந்தத் தடவை அம்மா அவனுடன் இல்லை; நடவுக்கும் அறுவடைக்கும் கொஞ்சம் கஷ்டப்படும் ஆனால் அதற்கு முன்பே நாற்று நடுவதற்கு ஒருத்தி வந்துவிடுவாள் அவன் வீட்டிற்கு, கவலையே இல்லை.

கவலையே இல்லை, நிலம் வந்தது; வேலை செய்யும் ஒருத்தி வருவாள். ஆனால் அவனுக்கு இரண்டுதான் இல்லை. ஒன்று, நல்ல வேஷ்டி; மற்றொன்று புதிய சட்டை. இத்தனை நாள்வரை அவன்

தன் அம்மா நெய்த கனமான அகலம் இல்லாத வேஷ்டியையே கட்டிக்கொண்டு வருகிறான். எப்படிக் கட்டினாலும் அது முழங்கால் வரைதான் வரும். அவனுடைய சட்டையும் மிகவும் பழையது. மூன்று வருஷம் ஆகிவிட்டது. அதைத் தைத்து. அது சில இடங்களில் கிழியவும் ஆரம்பித்திருந்தது. அவன் எப்போதும் சட்டையும் போட்டுக் கொள்வதில்லை. எங்கேயாவது சுற்றப்போனால் போட்டுக் கொள்வான். தோளில் துண்டிருந்தால் போதும் அவனுக்கு; ஆனால் அவன் இந்தத் தடவை கடுகு விற்க முடியுமானால் ஒரு வேஷ்டியும், சட்டையும் வாங்கிக் கொள்ளலாம் என்றிருந்தான்.

## ஒன்பது

பெரிய காட்டில் வெட்டிப்போட்டிருந்த கட்டைகளைச் சீர் செய்வதற்காக, கோடாலியை எடுத்துக்கொண்டு புறப்பட்டான் குலச். அப்போது மார்கழி மாதத்தின் நடு நாட்கள். அறுவடை வேலை அநேகமாய் முடிந்துவிட்டிருந்தது. பள்ளத்தாக்கில் இருந்த நெற்பயிர் இன்னும் முற்றவில்லை நன்றாக. இதற்கிடையில் வீட்டிற்கான வேலைகளைக் கொஞ்சம் கவனித்தால் நல்லது. காட்டிலேயே கட்டைகளைச் சீர் செய்து, அவற்றை ஆட்கள் மூலம் தலைச்சுமையாகவோ அல்லது மாட்டு வண்டி மூலமாகவோ ஆற்றின் கரைப்பக்கம் கொண்டு வரவேண்டியிருக்கும். மெதுவாய் ஆற்றுக்கருகில் கொண்டு வந்து சேர்த்துவிட்டால், அப்புறம் கவலை இல்லை. நேபாளிப் பேட்டைக்குச் சென்று அவன் தன் மாடு கன்றுகளைப் பற்றி விசாரித்தான். அவை மிகவும் நன்றாகவே இருந்தன. கொழுத்துப் பருத்துப் போயிருந்தன. தன்சிரிக்குப் பக்கத்தில் புல்லுக்குக் குறைச்சலே இல்லை. புலிக்கு இரையாகாமல் தப்பினால் சரி; அதுவே பெரிது. அடுத்த வருஷத்திலிருந்து அவன் மாடுகளை நேபாளியிடம் விட வேண்டியதில்லை; தானே வைத்துக்கொள்ளலாம்.

குலச்சுக்குத் தண்ணீர் தாகம் ஏற்பட்டது. டாலிம் கிராமத்தில் இன்று அவனுக்கு வீடு இல்லை. இடிந்து விழும் அவனுடைய வீடு இன்னும் இருக்கிறது. ஆனால் அங்கே அவன் அம்மாவும் இல்லையே; அவனுக்கு அங்கே போக விருப்பமில்லை.

எல்லாரும் வயலில் இருந்தார்கள். ஊர் முழுதும் அமைதியாயிருந்தது. வீட்டில் இருக்கும் குழந்தை குட்டிகள். மகள்

மருமகள் உட்பட எல்லாரும் சாப்பிட்டு விட்டு வயலுக்குப் போயிருந்தனர். எல்லாரும் சேர்ந்துதானே உழைக்கவேண்டும்.

கபாஹியின் வீட்டுக் கதவு சற்றே திறந்து இருப்பதைப் பார்த்து, குலச் உள்ளே போனான். "அக்கா..." என்று கூப்பிட்டான்.

உள்ளேயிருந்து தரா வெளியே வந்தாள். குலச்சை பார்த்துவிட்டு அவள் ஒருகணம் வியப்புடன் மலைத்து நின்றாள். பிறகு மெல்லிய குரலில், "அடே, அண்ணனா?" என்றாள்.

"ஆமாம், உன் சித்தி எங்கே? வீட்டில் இல்லையா?"

"ஆமாம், வயலுக்குப் போயிருக்கிறாள்."

"எந்த வயலுக்குப் போயிருக்கிறாள்" என்று மோடாவின் மேல் உட்கார்ந்து அவளுடைய முகத்தைப் பார்த்துக் கேட்டான்.

"ஸபீயத் கிழவன் வயலுக்கு; நீ எங்கிருந்து வருகிறாய்?"

"பாஹியிலிருந்துதான்; பெரிய காட்டில், தூணுக்கும் உத்திரத்திற்கும் மரம் வெட்டிக் கொண்டிருக்கிறேனே? சரி, ரொம்ப தாகமாய் இருக்கிறது. ஒரு டம்ளர் தண்ணீர் கொடு; உன் சித்தி எப்போ வருவாள்?"

"சித்தி இப்போ எங்கே வரப்போகிறாள்; பொழுது சாய்ந்துதான் வருவாள்".

"நீ ஏன் போகவில்லை?"

"உனக்குத் தெரியாதா?"

"எனக்கென்ன தெரியும்? சரி இன்னுமொரு டம்ளர் தண்ணீர் கொண்டு வா"

"நான் டீ போடுகிறேன். நீ கொஞ்சம் இரு அண்ணா; இந்தக் குளிரில் தண்ணீர் அதிகம் குடிக்கக் கூடாது." என்று சொல்லிக் கொண்டு அவனுடைய முகத்தைப் பார்த்தாள். அவனும் தராவின் முகத்தைப் பார்த்தான். நாளுக்கு நாள் அவளுடைய முகம் மலர்ந்து வருகிறது. அவளுடைய இரண்டு கன்னங்களும் ரோஜாப் பூக்கள் ஆகி வருகின்றன. அவளுடைய உடம்பு வாளிப்பும் வாகான அமைப்பும் பெற்றுவிட்டது. மேலாக்கு அவளுடைய உடம்பை மறைத்துப் போர்த்தப் பற்றவில்லை.

சிறிது நேரம்வரை இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே இருந்தனர். பிறகு, "நெல் அறுவடை செய்ய நீ ஏன் போகவில்லை தரா?" என்று கேட்டான்.

தரா கதவருகே வந்து வெளியே தலையை நீட்டி எட்டிப் பார்த்தாள். மாலை நேரத்து மெல்லிய வெய்யில் ஒளிவீசிக் கொண்டிருந்தது. அக்கம் பக்கத்தில் யாருமே இல்லை. வயல் வெளியிலிருந்து குறைவான காற்று வீசிக் கொண்டிருந்தது. அந்தக் காற்றில் முற்றிப் பழுத்த நெல்லின் மணமும் கலந்து வந்து கொண்டிருந்தது.

தரா குலச்சின் அருகே வந்தாள். அவன் முன்னே முழங்கால்களை மண்டியிட்டு உட்கார்ந்தாள். சற்றே குனிந்து, "நான் வேறு என்ன சொல்ல முடியும்? நீ வரும்போது எல்லாம் சித்தியும் இருக்கிறாள். என்னை ஸபீயத் கிழவன் மகன் ஊமைக்குக் கொடுக்க ஏற்பாடாகிறது; நானும் அவனைப் பிரியமாக ஏற்றுக் கொள்ள வேண்டுமாம்" என்று சொன்னாள்.

"எவனுக்கு?" என்று குலச் இரைந்து கேட்டான்.

"அதிகமாகச் சத்தம் போடாதே; யார் காதிலாவது விழும்.

என்னை அந்த ஊமைக்கு கட்டிக் கொடுத்தால், நான் ஆற்றில் குதித்து செத்துப் போய்விடுவேன்"

குலச் தராவை ஒரு கையால் பிடித்துக் கொண்டு, "ஓகோ, உள்ளுக்கு உள்ளாக இது நடக்கிறதா? நீ இதை என்னிடம் ஏன் இதற்கு முன்பு சொல்லவில்லை?"

ஏங்கிய கண்களை மேலே தூக்கி அவனைப் பார்த்து, "எப்படிச் சொல்வேன்? சித்திதான் எப்போதும் எதிரில் நிற்கிறாளே; நீ தான் அப்போ என்ன சொல்ல முடியும்?"

"ரொம்ப சரி; அவன் நிலத்து அறுவடைக்கு நீ போகாமல் இருந்தது ரொம்ப நல்லது; துணிச்சல்தான். சரி, உன் சித்திக்கு கூட இதை என்னிடம் சொல்ல விருப்பமில்லையா? அவள் என்ன சொல்கிறாள் இதற்கு?"

"சித்தி என்ன சொல்வாள்?" ஸபீயத்தின் நிலத்தில் வேலை செய்து வயிறு வளர்க்கிறோம்; எங்களுக்கு நிலம் நீச்சு

இருக்கிறதோ? தவிர எங்களைப்பற்றி நினைப்பவர்கள் யார் இருக்கிறார்கள்?"

"ஏன் நான் இல்லையா? நான் உங்களுக்கு ஒன்றும் ஆக மாட்டேனா? இவ்வளவு பெரிய விஷயத்தை இத்தனை நாள் என்னிடம் சொல்லாமல் ஒளித்திருக்கிறீர்கள். நான் உங்களுக்கு அயலான்-வெகுதூரம் அல்லவா?"

அவன் மிகவும் குறைபட்டுக் கொண்டான்.

"உன்னை வேறாக நினைத்தால், இதை நான் உன்னிடம் சொல்வேனா? ஏதாவது செய்ய முடியுமானால் உன்னால்தான் செய்ய முடியும்? வேறு யார் எங்களுக்கு உதவி செய்ய இருக்கிறார்கள்? சித்தி ஒரு பெண்பிள்ளைதானே; நிர்பந்தப்படுத்தினால் அவளும் ஒப்புக் கொண்டுவிடலாம்.."

"நிர்பந்திப்பானா? எவன் நிர்ப்பந்தம் செய்வான்? இந்த அரிவாளைப் பார். ஒரே தடவையில் இரண்டு துண்டாக்கிப் போடுவேன். அந்தக் கஞ்சப்பயலிடம் ஏதோ கொஞ்சம் பணம் இருக்கிறது. அதற்காக அவன் உன்னைப் பலாத்காரமாக இழுத்துக் கொண்டு போவான். நாங்களெல்லாம் இருக்கிறோமா, இல்லை செத்துப்போய் விட்டோமா?"

தராவின் முகத்தில் சிரிப்பு தவழ்ந்தது. அவள் மனத்தில் நம்பிக்கை துளிர்த்தது. குலச் அவளுக்குப் புகல் அளிப்பான். அவளைக் காப்பாற்றுவான். அவள் பக்கத்தில் குலச் இருக்கும்வரை, அவள் யாருக்கும் பயப்படவேண்டியதில்லை.

அவள் எழுந்திருந்து, "அண்ணா, நீ தவறாக நினைக்காதே. உன்னிடம் சொல்ல வேண்டுமென்று தினமும் நினைத்துக் கொண்டு, ஆனால் உன்னைத் தனியாகவே சந்திக்க முடியவில்லை. சித்தியின் எதிரில் இதை நான் எப்படிச் சொல்வது? நீ இரு; இதோ டீ போடுகிறேன். நீ ஏதாவது சாப்பிட்டாயோ?" என்று கேட்டாள்.

"சாப்பிடுகிறேனே" என்றான் குலச்.

தரா சமயலறைக்குள் போனாள். குலச் என்னவோ யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். தராவுக்கு இதை என்னிடம் சொல்லச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. சரி; ஆனால் கபாஹி ஏன் சொல்லவில்லை? பணம் வாங்கிக் கொண்டு, அந்த ஊமையிடம் தராவை விற்றுவிடலாம் என்ற எண்ணமோ. பெண் பிள்ளைகளின்

உள்ளத்தைப் புரிந்து கொள்வது மிகவும் சிரமம். பணத்தைக் கண்டதும் அவர்கள் குருடாகி விடுகிறார்கள்.

"ஏ தரா.." என்று கூப்பிட்டான்.

"ஏன் அண்ணா, என்ன ஆயிற்று?"

"நீ கொஞ்சம்கூடப் பயப்படாதே. பணம் வாங்கிக் கொண்டு உன் சித்தி உன்னை ஊமைப் பயலுக்கு விற்க நினைத்தால், அவளையும் வெட்டித் துண்டாடிவிடுவேன். வருவது வரட்டும் அப்புறம்" என்றாள்.

தரா பதிலே சொல்லவில்லை. ஒரு பேலா நிறையப் புதிய நெல்லின் பொரி மாவும், பாலும் வெல்லமும் கொண்டு வந்து அவன் முன்னே வைத்தாள்; இந்த நேரத்தில் தராவை விட இன்பமுற்றவள் யாருமே கிடையாது. அவள் இன்று தனியாகவே உலகத்துடன் போர் தொடுப்பாள். தோற்கவும் மாட்டாள் கட்டாயம். அவளுடன் குலச் துணை இருக்கிறான். பிறகு ஒரு கிண்ணம் டீயும் கொடுத்தாள். இன்று அவளுக்குக் குலச்சிடம் பயமில்லை. அவளுக்கு அறவே எந்த பயமும் சந்தேகமும் இல்லை. இன்று அவள் தன் எண்ணத்தைக் குலச்சிடம் திறந்து சொல்லிவிட்டாள்.

சாப்பிடும் போது மறுபடியும் அவளுக்குத் தைரியம் சொன்னான்: "தரா, நான் வீடு கட்டி முடித்து விட்டு, உங்களை என் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போவேன். அங்கே இதுபோல மற்றவர்கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டு இருக்கத் தேவையில்லை. எனக்கு வேறே யார் இருக்கிறார்கள்?"

குலச்சிடம் தராவுக்கு முன்னிலும் அதிகமாக ஆசை உண்டாயிற்று. அவனுக்கென்ன தனி ஆண்பிள்ளை. தானும் தனிதான்; சித்தி கூட இருப்பதால் கொஞ்சம் தைரியம்; இல்லாவிட்டால் அவளுக்கு என்ன பயம் இருக்கும்.

"இன்னும் கொஞ்சம் பொரிமா வைக்கட்டுமா அண்ணா"

"வேண்டாம்; வெற்றிலை இருந்தால் கொடு."

தரா பீடா செய்து கொடுத்தாள்; அதை வாயில் போட்டுக்கொண்டு, "தரா, உன்மேல் எனக்கு ரொம்ப ஆசை;

ஊரில் வேறு எவர் வீட்டுக்கும் நான் போவதில்லை. உங்கள் வீட்டுக்கு மட்டும்தான் வருகிறேன்" என்றான்.

அவனுக்குத் தன் ஆசையை இப்படித்தான் வெளியிடத் தெரிந்தது.

தராவின் கண்கள் பனித்தன. "எனக்கும் உன்மேல் மிகவும் ஆசை" என்றாள்; அந்தப் பகல் நேரம் இதற்கு சாட்சியாக இருந்தது. இருவருமே பொய் பேசவில்லை.

"நான் போய் வருகிறேன். எதற்கும் கவலைப்படாதே; வீடு கட்டி முடிந்ததும் உங்களை அழைத்துப் போய்விடுகிறேன்.."

தரா தயங்கிக் கொண்டே, "என்னிடம் இன்னும ஆறு ரூபாய் பணம் இருக்கிறது.." என்றாள்.

"இருந்தால் இருக்கட்டுமே. வைத்துக்கொள்; எங்கிருந்து கிடைத்தது?"

"துணி நெய்து விற்றேன். பால் கொஞ்சம் விற்று இரண்டு ரூபாய் கிடைத்தது.."

"பத்திரமாக வைத்துக்கொள். சிரமம் ஏற்படும்போது தேவைப்படும்"

"எனக்கு வேண்டாம்; நீயே வாங்கிக் கொள்ளேன்.."

"நானா, ஏன்? நான் ஊர் சுற்றுபவன். பணத்தை எப்படி வைத்துக்கொள்ள முடியும்?"

"வைத்துக்கொள்ள வேண்டாமே; செலவு செய்யேன்; நிலத்திலிருந்து மூட்டை தூக்க வேண்டும். காட்டில் மரம் வெட்ட வேண்டும்; வீடு கட்ட வேண்டும். யாரையாவது காசு கொடுத்து வேலைக்கு வைத்துக்கொள். ஒருவனாக எத்தனை வேலைதான் செய்வாய்?" என்று சொல்லி அவள் பணத்தை எடுத்து வர விரும்பினாள்.

"தரா.." என்று அழுத்தமாகக் கூப்பிட்டு, "பைத்தியக்காரி ஆகாதே; என்னாலே முடியவில்லையென்றால், வேறு ஆள் வைத்துக்கொள்வேன். பணத்திற்கும் நானே தோது செய்து கொள்வேன். உன் பணம் வேண்டாம். நீயே வைத்துக்கொள், வெறுங்கையாய் இருக்கக்கூடாது.."

"நீ படும் கஷ்டத்தைப் பார்த்துதான் கொடுக்க விரும்பினேன். நீ வேண்டாம் என்றால் நான் என்ன செய்யட்டும். முடிந்தால் நானே உனக்கு உதவியாக வரலாம். ஆனால் நீ தன்சிரியின் அக்கரையில் இருக்கிறாயே." அவளுடைய கன்னத்தில் மெதுவாகத் தட்டிக் கொடுத்து, "அடேயப்பா, பெரிய உதவி செய்வாளாமே இவள்! என்ன உதவி செய்வாய்? மரம் அறுத்துச் சீர் செய்வாயா?"

தரா சிரித்துவிட்டாள்.

"இன்று மரம் வெட்டவில்லை; உன்னுடன் பேசியே காலம் கழித்துவிட்டேன்; நான் போகிறேன்."

"வேலையில் அவ்வளவு அக்கறை இருந்தால் ஏன் வருகிறாயாம்? வராமேயிரேன்"

"எப்படி வராமல் இருக்க முடியும்." என்றான் வாய் நிறையச் சிரித்துக்கொண்டே.

அவன் புறப்படும் போது, "அடிக்கடி வந்து கொண்டிரு அண்ணா; ஸபீயத் கிழவன் எப்போது என்ன செய்வானென்று சொல்லமுடியாது. சித்தியின் எண்ணமும், இன்னதென்று எனக்குப் புரியவில்லை. என்னை எங்கேயாவது ஒப்படைத்துவிட்டு, அவள் கவலையில்லாமல் இருக்க விரும்புகிறாள்" என்றாள் தரா.

"எல்லாரையும் வெட்டி விடுவேன் வெட்டி. நீ பயப்படாதே; நான் வந்து கொண்டிருப்பேன்; அந்த ஊமைப் பயலுடைய மற்றொரு கண்ணையும் பிடுங்கி விடுவேன்...சரி, நான் போய் வருகிறேன்."

"சரி.." குலச்சை இன்னும் சிறிது நேரம் இருக்கச் சொல்லவேண்டும் என்பது அவள் ஆசை. ஆனால் சொல்லவில்லை. வாய் வார்த்தை பேசி என்ன பயன். இந்த நேரத்தில் காட்டில் அவன் ஒரு கட்டை வெட்டினாலும் வெட்டலாம்.. பாவம்..குலச் தனியாக இருக்கிறானே." என்று தரா அவனிடம் அன்பைச் சொரிந்தாள்.

## பத்து

மார்கழி மாதம் பதினெட்டாந் தேதியன்று, செபரியா கிராமத்து மோலோகா நாட்டாண்மைக்கார கிழவன் மகன் கேலாயிக்கும் சேனிமாயிக்கும் கல்யாணம் நடந்தேறிற்று.சேனிமாயி ஸபீயத்தின் இளைய தம்பியின் மகள். குலச்சுடன் அவள் ஓடியபோது, அவளை

"உங்களுடன் உங்கள் வீட்டில் இருப்பதைப்பற்றிக் கவலை என்ன? ராத்திரி ஆன பிறகே வந்தாலும் கவலை இல்லை" என்றாள் கபாஹி.

தராவுக்கு தொண்டை சற்று உலர்ந்து விட்டது. சித்தி இப்படிச் சொல்கிறாளே; நாளை இரவு இங்கிருந்து புறப்பட வேண்டும் என்பதை மறந்து விட்டாளா? தான் ராத்திரி ஸபீயத்தின் வீட்டில் இருந்து, நேரமும் ஆகிவிட்டால், குலச் வண்டியுடன் வந்து என்னைக் காணாமல் திரும்பிப்போக நேர்ந்தால், தவறாக நினைப்பானே. சித்திக்கு வேறு ஏதாவது எண்ணம் இருக்குமோ என்று கலங்கினாள்; அவளுக்குப் பயமும் ஏற்பட்டது; ஆனால் அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். விரைவில் அரிசி இடித்துப் பணியாரமும் செய்துவிட்டு, அவள் எப்படியாவது வீட்டுக்கு வந்துவிட வேண்டும். அவளை யார் தடுக்க முடியும்; குலச்சின் வண்டி வந்தாலும் வராவிட்டாலும், அவள் இந்த வீட்டில் இனி இருக்க மாட்டாள். சித்தி என்னவேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும்; அவசியம் நேர்ந்தால் அவள் தானாகவே குலச்சின் வீட்டிற்கே ஓடிப்போய் விடவேண்டும். அவள் இரண்டொரு தடவை சிபரியா கிராமத்திற்குப் போயிருக்கிறாள். அங்கிருந்து குலச்சின் வீட்டைப் பார்த்திருக்கிறாள்.

அவள் கபாஹியிடம் ஒன்றுமே சொல்லவில்லை. 'தன்னை ஏன் கூப்பிட்டான் அந்தக் கிழவன். சித்தியைக் கூப்பிட்டிருக்கலாமே; அது நல்லதாகவும் இருந்திருக்குமே. சித்தி வருவதற்கு நேரமானாலும், தான் குலச்சின் வீட்டிற்குப் போய்விடலாமே. என்னைக் கூப்பிடுகிறான். இதுவும் ஒரு கஷ்டம்' என்று நினைத்துக் கொண்டாள் தரா.

கபாஹி தூங்கப் போய்விட்டாள்; தரா தன் சாமான்களைச் சேர்த்து மூட்டை கட்டினாள்; எல்லாவற்றையும் தயாராக வைத்துவிட்டுப் போகவேண்டும். குலச்சின் வண்டி வந்ததும் புறப்பட்டு விடவேண்டும்.

ஸபீயத்தின் வீட்டில் இப்படிப் பணியாரம் தயார் செய்யும் பொறுப்பு தனக்கு கொடுக்கப்பட்டதில் தராவுக்கு ஒரு திருப்தியும் ஏற்பட்டது. யாருக்குக் கிடைக்கும் இந்த பாக்கியம்; பெரிய புண்ணிய காரியம். புண்ணியத்தில் தனக்கும் சிறிது கிடைக்குமல்லவா.

தராவுக்கு நமாஸ் படிக்கவோ, தொழுகைப் பிரார்த்தனை செய்யவோ தெரியாது. இருந்தாலும் படுக்கையில் இருந்து கொண்டே தன் மனத்திற்குள், "நாளை எந்தவிதமான அசந்தர்ப்பமும் நேர்ந்துவிடக் கூடாது; நாளை நான் இங்கிருந்து குலச்சின் வீட்டுக்குப் போய் விடுவேன். நாளைக்கே எனக்குக் கல்யாணமும் நடக்கும். கிழவன் நாளைக்கு என்னைத் தன் வீட்டிலிருந்து சுருக்கவே திரும்ப அனுப்பிவிட வேண்டும்." என்று பிரார்த்தனை செய்தாள். அவளுக்கு குலச் சொன்னதெல்லாம் நினைவுக்கு வந்தது. நாளையிலிருந்து அவள் தனியே இருக்க வேண்டியதில்லை; நான் அவனுடைய மார்பில் கிடப்பேன்; அவன் தன் இரு தோள்களாலும் தழுவிக் கொண்டிருப்பான். குலச்சுக்காகப் பணியாரமும் கறியும் எடுத்துக் கொண்டு போவேன். பெரியா கிராமத்தில் இன்னும் விருந்து நடக்கவில்லை. பொட்டலங்களை மறைத்து எடுத்துக்கொண்டு போகவேண்டும்.

தன் சித்தியின் கழுத்தில் கிடக்கும் அந்த கில்ட் நகை பற்றிய நினைவு வந்தது தராவுக்கு. சித்தி இப்பொழுதெல்லாம் அதைக் கழற்றுவதே இல்லை, அவள் அதைத் தனக்குத் தருவாளா? தராவிட்டால் போகட்டுமே. எனக்கு என் குலச் தருவான் எல்லாம். இப்போது இல்லாவிட்டாலும் பின்னாடி வாங்கிக் கொள்வேன். நிலம் முழுவதையும் பயிர் செய்தால், உருளைக்கிழங்கும் கடுகும் நன்றாய் விளைந்தால் அரைத் தோலாவில் இரண்டு வளைகள் வாங்கிக் கொள்ள வேண்டும். அதற்கு முன்னாடி ஒரு ஜோடி தோடு காதுக்கு வாங்கிக் கொள்ள வேண்டும். அப்புறம் ஒரு மோதிரம்; அநேகமாய் இப்பொழுதே குலச் எனக்காக ஒரு மோதிரம் செய்தாலும் செய்திருப்பான்.. என்றெல்லாம் நினைத்துக் கொண்டே மெல்லத் தூங்கிவிட்டாள் தரா.

## பதினாறு

விருந்து சாப்பிட்டுவிட்டு மசூதியிலிருந்து மக்கள் தம் வீட்டுக்குச் சென்றனர். மேற்கு நோக்கி அழைக்கப்படும் மசூதியின் கூப்பாடும் முடிந்து விட்டது. அந்தி நேரம். மாசி மாதத்தின் குறுகிய பகல் உள்ள நாட்கள். பார்த்துக்கொண்டிருக்கும்போதே பொழுது சாய்ந்துவிட்டது. மாசி மாதம் பிறந்ததுமே மழையும் ஓய்ந்து விட்டது. இன்று நவமியோ தசமியோ. பனி இருந்தும் வெளிச்சமாகவே இருக்கிறது.

ஸபீயத்து குடும்பத்தில் இருந்த ஆண்கள் அத்தனை பேரும் மசூதிக்குப் போனார்கள். போகும்போது கிழவன், "தரா, நீ இப்போதே போய்விடாதே. சாப்பிட்டுவிட்டுப் போகலாம். உன் அண்ணன் உன்னைக் கொண்டுபோய் விடுவான்" என்றான்.

அவள் ஒன்றுமே பேசவில்லை. ஊமை அவள் இருக்கும் இடத்தைச் சில தடவை வளைய வளைய வந்தான்; ஆனால் அவனுக்கு அவளை நெருங்கத் தைரியம் இல்லை.

மசூதியிலிருந்து பணியாரமெல்லாம் கொண்டு வந்த பிறகும், அவளைக் கொண்டுவிடும் பேச்சே எழவில்லை; அவளுக்குத் தின்பதற்கு, பணியாரம் கொடுத்தார்கள். அவளுக்கு அதைத் தின்ன விருப்பமே இல்லை. அவள் விருப்பமெல்லாம் உடனே புறப்பட்டுப்போக வேண்டுமே என்பதுதான். இதற்குள் அங்கே குலச்சின் வண்டி வந்திருக்கும். அவளுக்காக அவன் காத்துக் கொண்டிருப்பானா?

ஸபீயத்தின் மருமகளைப் பார்த்து, "அண்ணி, நான் போக வேண்டும்! ராத்திரி ஆகிவிட்டது. வீட்டில் சித்தி தனியாய் இருப்பாள்." என்றாள்.

அவள் வெகுண்டையாய்ச் சிரித்துக்கொண்டு, "தரா, ஏன் அவசரப்படுகிறாய்? அது உன் வீடு; இதுவும் உன் வீடுதான். அங்கே போய் என்ன செய்யப் போகிறாய்? இங்கேதான் இரேன்" என்றாள்.

இதைக் கேட்டதும் தரா பயந்தே போனாள். "இவர்கள் எல்லாரும் சேர்ந்து ஏதாவது சூழ்ச்சி செய்கிறார்களா? சதி எதுவும் நடக்காமல் இருக்க வேண்டுமே; இந்த வீடு எப்படி என் வீடாகும்?"

சிறிது நேரம் பார்த்தாள்; பிறகு கிழவனைத் தேடினாள். அவனைக் காணவில்லை. அவளை யார் கொண்டுபோய் விடுவார்கள். அவளுக்கு இது ஒன்றும் பிடிக்கவில்லை. ஊமையோடு அவள் போகத் தயாராய் இல்லை. தனியாகப் போனாலும் போவாள்; அவள் டாலிமில் பிறந்து வளர்ந்தவள். அவளுக்கு வழி எல்லாம் தெரியும். இதுவரை அவளைப் புலியொன்றும் தாக்கியதில்லை; இன்றும் புலி வந்து விடாது.

குழம்பிப்போய் அவள் என்னென்னவோ செய்தாள்; வீட்டில அவளை கவனிக்க யாருக்குமே நேரம் கிடைக்கவில்லையோ

மருதிச் சாப்பாடெல்லாம் முடிந்துவிட்டது. அதற்குப் பிறகும் இங்கே என்ன கூத்தும் கொம்மாளமும் வேண்டிக் கிடக்கிறது; அவள் மனம் புரியாத சந்தேகங்களைக் கிளப்பி விட்டுக் கொண்டு, அவளை பயப்படச் செய்தது. அவள் வீட்டின் உட்புறத்து அறைக்குப் போனாள். கதவருகே போனதும் திடுக்கிட்டாள்; கிழவன் அங்கே உட்கார்ந்திருந்தான். அவனுடன் ஊர்ப் பெரியவர்கள் நாலு பேர் இருந்தார்கள். அவள் சற்றே பின்வாங்கிச் சுவர் ஓரமாய் நின்று கொண்டாள்.

"சீக்கிரம் ஆரம்பியுங்கள்; இன்னும் யார் வரவேண்டும்?"

"முக்கியமானவரே இன்னும் வரவில்லையே. அஹமத் முன்சீ இன்னும் வரவில்லையே. நிக்கா ஓதிப் பண்ணி வைக்கவேண்டுமே.."

தராவின் இரண்டு கால்களும் நடுங்கின. சுவரைப் பிடித்துக்கொண்டு சிரமத்துடன் நின்றாள்.

"பெண்ணின் சித்தியிடம் சொல்லியிருக்கிறதல்லவா?"

"அநேகமாகச் சொன்னது மாதிரிதான். இதில் அவளுக்கு ஆட்சேபிக்க ஒன்றுமில்லை; தவிர இதில் அவள் சொல்ல என்ன இருக்கிறது?"

மேலும் கேட்பதற்குச் சக்தியோ தைரியமோ இல்லை தராவுக்கு. அவளுக்குத் தலை சுற்றியது. அப்படியே அந்த இடத்தை விட்டு இப்பால் வந்தாள். துணையற்றவளாய் நான்கு புறமும் பார்த்தாள். அவள் கண்ணின் எதிரே அரிக்கேன் விளக்கு சுற்றிச் சுற்றி ஆடுவது போல் இருந்தது. கால்களுக்கடியில் இருந்த பூமியே அதிர்ந்து அசைவதைப் போல் இருந்தது. ஒன்றும் புரியாமல் கூடத்து நடுவே நின்றிருந்தாள். சட்டென்று அவளுக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. ஒரு யோசனை பளீரென்று மின்னிற்று. ஒரு கணத்தில் அவள் ஒரு முடிவுக்கு வந்தாள்.

ஆண்கள் எல்லாரும் வீட்டு முன்புறத்துக் காமிரா உள்ளில் கூடியிருந்தனர். பெண்கள் சமையலறையிலும் அதன் பக்கத்திலும் இருந்தார்கள். இனி ஒரு நிமிஷமும் தாமதிக்கக்கூடாது. அடுத்த கணம் அவள் சந்தடியில்லாமல் வீட்டின் கொல்லைக் கதவு வழியாக வீட்டை விட்டு வெளியேறினாள்.

ஸபீயத்தின் வீட்டுக்குப் பின்புறம் திறந்த வெளி ஒன்று இருந்தது; அதன் அருகில் ஒரு சின்னக் காடு இருந்தது. அவள்

எதைப்பற்றியும் சிந்திக்காமலும் கவலைப்படாமலும் அந்தத் திறந்த வெளியை வேகமாய் ஓடித்தாண்டினாள். அப்பால் இருந்த காட்டுக்குச் செல்லும் குறுகலான பாதையில் மிக விரைவாக நடந்து போய்க்கொண்டே இருந்தாள்.

இன்று, இந்த நேரத்தில் அவளுக்கு, கொடிய புலிகளிடமோ விஷம் மிகுந்த பாம்புகளிடமோ சிறிதும் பயமில்லை. மனிதர்களைக் கண்டுதான் அவள் மிகவும் பயப்பட்டாள். ஸபீயத்துக்கும் ஊமைக்கும்தான் பயந்தாள். எப்படியாவது ஓடிவிடத்தான் நினைத்தாளே தவிர, எங்கே போகிறோம் என்ற நினைவே வரவில்லை. காட்டில் இடறிவீழ்ந்து காயம் பட்டுக்கொண்டே ஓடினாள். அவளுக்கு இரண்டே எண்ணம்தான். ஒன்று தன் வீட்டுக்குப் போய்விடவேண்டும்; அல்லது தன்சிரியின் கரைக்குப் போய்விடவேண்டும். யாராவது வந்து தடுத்து நிர்ப்பந்தம் செய்தால் தன்சிரியில் குதித்து உயிரைவிடுவேன், அல்லது பாறையில் முட்டிக்கொண்டு சாவேன், என்று முடிவுக்கு வந்திருந்தாள்.

குலச்சின் வண்டி வழியிலேயே வருமானால்— என்று நினைத்ததும் அவளுக்கு அந்த பயத்தினிடையேயும் மனத்தில் மகிழ்ச்சி பொங்கியது. இந்த சமயத்தில் உலகத்தின் எந்தக் கொம்பனும் என்னை எதுவும் செய்யமுடியாது. |கிட்டத்தட்ட அரை மணி நேரம் ஓடிவிட்டாள்; அவளுக்கு மூச்சுத் திணறிற்று. கொஞ்சம் நின்றாள் மாசி மாதத்தின் குளிரிலும் அவளுக்கு வியர்த்தது. அவள் தலையிலிருந்து வியர்வை வழிந்தது. |

அவள் பயந்தாள்; இந்த இரவில் இப்படி வந்துவிட்டாளே. இது வழியும் இல்லையே. காடாக இருக்கிறதே; வழி தவறி விட்டதோ.. இங்கு வந்தாகிவிட்டது. இப்படியே நடந்தால் அது எங்கே கொண்டுபோய்ச் சேர்க்கும்? ஒருக்கால் நடந்து நடந்து ஸபீயத்தின் வீட்டிற்கே போய்விட்டால் என்ன செய்வது. நிமிர்ந்து வானத்தைப் பார்த்தாள். சந்திரன் தெரிந்தது; ஆனால் அதைக் கொண்டு அவள் வந்திருப்பது இன்ன இடம் என்பதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. தான் வந்த திசையையே திரும்பிப் பார்த்தாள். வெகு தூரத்தில் மனிதக்குரல் மிகவும் தேசல் மாசலாய்க் கேட்டது; ஆனால் எத்தனை தூரம் என்று புரியவில்லை. மிக அருகில் இருப்பது போலவும் தோன்றுகிறது ஒரு சமயம். இன்னொரு சமயம் பார்த்தால், ரொம்ப தூரம்போலவும்

தோன்றுகிறது. அவள் மனம் படக் படக் கென்று அடித்துக்கொள்ளும் ஒலி அவளுக்குக் கேட்கிறது; அவளுடைய கால்கள் கிடுகிடு என்று நடுங்குகின்றன. கைகள் சோர்வுற்றன. ஒரு மரத்தைப் பிடித்துக் கொண்டு சற்று நேரம் நின்றாள். உடனே ஒன்றும் யோசிக்காமல் நடக்க ஆரம்பித்தாள்.

அவள் இரவுக்குப் பயப்படவில்லை. மனிதர்கள் வந்து விடுவார்களோ என்றுதான் பயந்தாள்; அவள் கண்ணுக்குத் தெளிவாக எதுவுமே புரியவில்லை. காடும் முடிந்து விட்டது. காலில் காய்ந்த வைக்கோல் மிதிபடுகிறது. பனி போர்த்த நிலவில் அவளுக்கு எதுவுமே தெளிவாய்ப் புலனாகவில்லை. முன்பின் தெரியாத இடம்போல் தோன்றிற்று. பனி மூட்டத்தினூடே மெல்ல முன்னேறிச் சென்றாள். திடீரென்று தன் கால்களுக்குக் கீழே மிருதுவான ஈரம் கசியும் தரை மிதிபடுவதை உணர்ந்தாள். மண்ணோ அல்லது மணலோ... நின்றாள். எதிரே பார்த்தாள். இது தன்சிரி ஆறுதான். இந்த வழியில் நடந்து அவள் பல தடவை தன்சிரியின் கரைக்கு வந்திருக்கிறாள். சட்டென்று அவளுக்குப் பயம் நீங்கித் தெளிவும் பிறந்துவிட்டது. பழக்கமான ஆறும் கரையும். உலகத்து மக்கள் அனைவருமே அவளை வஞ்சித்து ஏமாற்றினாலும் அன்னை தன்சிரி அவளை ஏமாற்ற மாட்டாள்; தன்சிரி கதியற்றவர்களுக்கெல்லாம் புகலிடம்; துணையற்றவர் களுக்குத் துணை.

மிகவும் அமைதியாக ஓடும் ஆற்றைப் பார்த்தாள்; அதன் நீரில் பனி விழுந்திருக்கிறது. அதன்மேல் நிலவு மங்கலாய்த் தெரிகிறது. அவளால் மேலும் நடக்க முடியாதுபோல் தோன்றிற்று. கரைப் பக்கத்து மணலிலேயே உட்கார்ந்தாள். ஆற்றங்கரையில் குளிர் அதிகம். பனியைத் தழுவிக் கொண்டு மெல்ல வீசுகிறது காற்று. சுற்றுமுற்றும் கண்ணை ஓட்டினாள், யாரும் இல்லை, எதுவுமே இல்லை. அவளைச் சூழ்ந்து பனி கவிந்தமூடிய உலகம்; பழக்கமான ஆற்றின் பழக்கமில்லாத கரை; பழக்கமான கிராமத்தின் முன்பின் தெரியாத ஓர் ஓரம்; புரியாத நிலவு; அறிவின் வெளியே பனி மூட்டம்.

பயத்தால் நடுங்கும் தனியே இருக்கும் ஒரு பெண்....

தராவுக்கு எதையும் பற்றி நினைத்துப் பார்க்கக்கூட முடியாது போல் தோன்றிவிட்டது; திடீரென்று அவள் உணர்வையும்

அறிவையும் இழந்து விட்டதுபோல் இருந்தது. அவளுடைய பிரக்ஞையே மறைந்து விட்டதோ! சிறிது நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தாள்; தான் அங்கு வந்து எத்தனை நேரம் ஆகியிருக்கும்.. ஒரு மணி- இரண்டு மணி... இல்லை இன்னும் அதிகமோ-

ஸபீயத் என்னைத் தேட என் வீட்டுக்கு ஆள் அனுப்பியிருப் பார்; அவர்கள் என்னை எங்கும் தேடிக் கொண்டிருப்பார்கள்; தான் நேரே தன் வீட்டுக்குப் போகாமல், இங்கு வந்துவிட்டதுகூட நல்லதென்றே நினைத்தாள் தரா. அவர்கள் என்னைப் பிடித்து இழுத்துக் கொண்டு போயிருப்பார்கள்.

குலச்சின் வண்டி வந்து, என்னைக் காணாமல் திரும்பிப் போயிருந்தால், அவன் என்ன நினைப்பான்? என்மேல் அவனுக்குக் கோபம் வரும். என்னைப் பற்றித் தவறாக நினைப்பான். நான் எல்லா விவரத்தையும் எடுத்துச் சொன்ன பிறகுதான் அவன் என்னுடன் முகம் கொடுத்தே பேசுவான்; ஆனால் அவன் விஷயம் தெரிந்து கொண்டபிறகு, என்னிடம் முன்னிலும் அதிகமாகவே பிரியமாயிருப்பான்; அதற்காகத்தான் நான் இத்தனை கஷ்டங் களையும் பொறுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது; வேறு எதற்காக?

இரவு வெகுநேரம் ஆகிவிட்டதுபோல் தோன்றிற்று, அவளுக்கு. இந்த மாசி மாதத்து நள்ளிரவில், ஆற்றின் கரையில் இப்படித் தனியாக உட்கார்ந்திருப்பது நல்லதில்லை. நல்ல வேளை நிலா இருக்கிறது. இரவின் இரண்டாவது ஜாமம் நடக்கிறது. மேலும் இங்கேயே உட்கார்ந்து இருப்பது நல்லதில்லை.

தரா எழுந்து நின்றாள். சுற்றிலும் பார்த்தாள். வீட்டுக்கு எந்த வழியில் போவது; கரையோரமாகவே மேலே செல்வதா, கீழே செல்வதா? எப்படிப் போய் எங்கே சேர்வேன்? எங்கே போய்ச் சேர்ந்தாலும் சரி, அது இங்கேயே உட்கார்ந்திருப்பதைவிட நல்லது. பனியில் இருந்தால் வியாதியல்லவா வரும், உதடு உலர்ந்து விட்டது. பனியில் கையும் காலும் மரத்துப் போய்விட்டன. கால் விரல்கள் சுருங்கி மடங்கிவிட்டன. ஆற்றை மீண்டும் பார்த்தாள். கரைமேல் ஏறித் தெற்கு நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

எங்கும் அமைதி; நிசப்தமாயிருந்தது. எந்தப் பக்கத்திலிருந்தும் பறவைகளின் சத்தம்கூடக் கேட்கவில்லை. நரி ஊளையிடும் சத்தம்

கேட்கவில்லை. பனியின் சத்தமில்லாத மூட்டத்தில் ஆழ்ந்து கிடக்கும் மண்தான் எங்கும். அவள் கால்களில் பட்டு, மணல் கசகசவென்று ஓசைப்படுகிறது. மணலில் கிடக்கும் சருகுகளின் சத்தமும் வைக்கோல் மிதிபடும் கரகரவென்ற சத்தம் கேட்கிறது. இலைகளில் விழுந்திருக்கும் பனித்துளிகள் அவளுடைய உடம்பிலும் படுகின்றன. அப்பொழுது இரவு வெகுநேரம் ஆகி விடவில்லை; ஆனால் அவளுக்கு இரவு மிகவும் ஆகிவிட்டதாகத் தோன்றிற்று. அவள் கால்கள் மெல்லவே பெயர்ந்தன; அவளுடைய அடிச்சுவடுகள் தன்சிரியில் ஆழப்பதிந்தன. ஆற்றங்கரையை விட்டு, அந்த உறுதியான புகலிடத்தை விட்டு, அவள் வெகுதூரம் விலகிச் செல்ல விரும்பவில்லை. இன்று காலை முதல் அவளுக்கு இன்றைய தினம் ஒரு யுகம்போல் கழிந்திருக்கிறது. காலையில் அவள் ஸபீயத்தின் வீட்டிற்குப் போனதும், மாவு இடித்துப் பணியாரங்கள் செய்ததும், மசூதியில் அன்று இருந்த கோலாகலமும், அவற்றுக்குப் பிறகு நேர்ந்த இந்தப் பயங்கரமான நிகழ்ச்சியும் எல்லாமே அவளுக்கு மறந்துவிட்டன போலும். ஒரே நாளில் எத்தனையோ நிகழ்ச்சிகள். எத்தனையோ சகிக்க முடியாத நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன. நினைத்துப் பார்க்கவே பயமா யிருந்தது அவளுக்கு. திடீரென்று அவள் போகும் இடம் பழக்கமான இடம் போல் தெரிந்தது. ஆமாம் நிஜம்தான். இது ஆலமரம்; இதுதான் துறை. இது அவள் வீட்டுக்குப் போகும் வழிதான். மீண்டும் ஒருமுறை ஆற்றைப் பார்த்துவிட்டு, வீட்டுக்குப் போகும் பாதையில் நடந்தாள்.

## பதினேழு

சந்திரனும் குலச்சும் சேர்ந்து எல்லா ஏற்பாடுகளும் செய்தார்கள். பீமனும் திகரும்கூட உதவி செய்தார்கள். சந்திரன் வண்டிக்கு ஏற்பாடு செய்தான். துறையில் படகுதான் இருக்கவே இருக்கிறது. படகோட்டியிடம் சந்திரன், அக்கரைக்குச் செல்லும் விஷயம் யாருக்கும் தெரியக்கூடாதென்று சொல்லி வைத்திருந் தான். அவனும் இதுபோல் பல தடவை பெண்களை அக்கரைக்குக் கொண்டு போயிருக்கிறான். அவன் யாரிடமும் சொல்வதில்லையென்று உறுதி அளித்திருந்தான்.

ஒரு சின்னத் தடை ஏற்பட்டது; வீட்டில் பெண்ணைக் கொண்டு சேர்க்க, ஒரு பெண் பிள்ளை வேண்டும். "உன் அம்மாவையே

அழைத்து வருவோமே இந்த சமயத்திற்கு?" என்றான் சந்திரன். குலச் சம்மதிக்கவில்லை. திகர் ஒரு யோசனை சொன்னான். குலச் நேரில் சொன்னால், மோலோகா தன் மருமகள் சேனிமாயியை அனுப்புவாள் கட்டாயம். இதற்கு முதலில் குலச் சம்மதிக்கவில்லை. பிறகு ஒப்புக்கொண்டான். இதில் என்ன தவறு? அவளைவிட அவனுக்கு நன்கு தெரிந்த பெண் வேறு யார் இருக்கிறாள்.

"திருடி இழுத்துக் கொண்டுவரும் பெண்தான் என்றாலும், சிறிதாகவோ பெரிதாகவோ ஒரு கல்யாணம் செய்து வைத்து விடுவோம். நாளைக்கு சமூகத்தில் தராவுக்கும் குலச்சுக்கும் உள்ள உறவு பற்றி, எந்தவித ஆட்சேபணைக்கும் இடம் இருக்கக்கூடாது" என்றான் சந்திரன்.

மௌல்வியும் சரியான சமயத்திற்கு வந்து விட்டார். குலச் துறைக்குப் போகவில்லை. திகர்தான் போனான். சந்திரன் வேறு விஷயத்தைக் கவனிக்க வேண்டியிருந்தது. அவனுடைய ஆலோசனைப்படி ஆற்றின் இக்கரையிலும் ஒரு வண்டி நிறுத்தப் பட்டது. அக்கரையில் வீட்டிலிருந்து நேபாலியின் வண்டியில் கல்யாணப் பெண் வருவாள். பீமன் அங்கே துணையாக வருவான்; மல்லாஹ் (படகுக்காரன்) படகில் ஆற்றைக் கடந்து இக்கரைக்குக் கொண்டு வந்து சேர்ப்பான். இக்கரையில் திகர் இன்னொரு வண்டியில் ஏற்றிப் பெண்ணை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்ப்பான். வந்தவுடன் சிறிதும் தாமதமின்றி மௌல்வி நிக்கா படித்துச் சொல்லச் செய்வார். பெண்ணுடன் சேனிமாயி இருப்பாள். சந்திரன் தைரியமும் தேறுதலும் சொன்னான்.

"எவ்விரிதிங் ஆல்ரைட். எல்லாம் சரியாக நடக்கும். மௌல்வி ஹஜரத்திடம் முன்னாடியே, 'ஐயா சீக்கிரமாகச் செய்து வையுங்கள். பாக்கியிருக்கும் மந்திரங்களையெல்லாம் நீர் வீட்டுக்குப்போய் ஓதிவிடவேண்டும். புரிகிறதா?' என்று சொல்லி வைத்துவிட்டான். இதெல்லாம் மௌல்வி ஹஜரத்துக்கு நன்றாகத் தெரியும். மீசைக்கிடையில் சிரித்துக்கொண்டார். தலையை ஆட்டினார். அய்யாவுக்கும் அம்மாவுக்கும் மனம் ஒன்றுபட்டு விட்டால், அதுதான் உண்மையான நிக்கா, பாக்கியெல்லாம் நமக்காகத்தான்" என்றார் அவர்.

கிராமத்தில் எல்லாருமே சாப்பாட்டுக்கு மசூதிக்குப் போயினர். அதே நேரத்தில் கபாஹி வீட்டின் சாமான்களை ஆற்றின் வழியே

அக்கரைக்குக்கொண்டு வந்து சேர்த்தாகிவிட்டது. எல்லா சாமான்களும் சேர்ந்து ஒரு வண்டிக்குச் சரியாயிருந்தது.

மறுபடியும் இரவு எட்டு மணியளவில் வண்டி வந்து கபாஹூியின் வீட்டு வாசலில் நின்றது. நார்ப்பட்டால் ஆன இடைப்படியும், பட்டுக் கோஷா புர்க்காவும் அணிந்துகொண்டு, எண்பதாம் நம்பர் மெல்லிய துணியாலான போர்வையும் போர்த்துகொண்டு, கபாஹூி வீட்டிலிருந்து புறப்பட்டாள் தனியாக. பீமன் முன்னே சென்றாள்.

"வேறு ஒன்றும் சாமான் இல்லையே?" என்று கேட்டான் பீமன்.

"இல்லை" என்று சொல்லிக்கொண்டே விரைவாக வண்டியில் ஏறினாள் கபாஹூி. வண்டி புறப்பட்டது. படகில் ஏறி ஆற்றைக் கடந்து அக்கரைக்குச் சென்றனர். அக்கரையில் திகர் அவளை மற்றொரு வண்டியில் ஏற்றிக்கொண்டான். வண்டியில் ஏறியதும் கபாஹூி இரைந்து, "பீமா, நீ வீட்டுக்குப் போவதற்கு முன்னால், எங்கள் வீட்டிற்குப் போக வேண்டும் ஒரு தடவை" என்றாள்.

"இன்னும் ஏதாவது வேலை இருக்கிறதா?" என்று கேட்டான் பீமன்.

"தரா ஸபீயத்தின் வீட்டுக்குப் போயிருந்தாள்; ஒருக்கால் அவள் திரும்பி வீட்டிற்கு வந்தாலும் வரலாம். ஆனால் அவள் ஸபீயத்தின் வீட்டிலேயே தங்கியிருக்க வேண்டும்; அவள் வந்தால், வந்து உன்னை சந்தித்தால், நான் இப்படி இங்கே வந்து விட்டேன் என்று சொல்லிவிடு" என்றாள் கபாஹூி.

பீமன் படகுக்காரனிடம் உட்கார்ந்து, ஒரு சிலும்பி கஞ்சா குடித்துவிட்டு, மெதுவாய் கபாஹூியின் வீட்டை நோக்கிச் சென்றான்; செல்லும்போது "சரி, இதெல்லாம் சரியில்லை; ஏதோ கோளாறுதான் நடக்கிறது" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

பீமனுக்கு இதெல்லாம் புதிதில்லை. டாலிமிலும் சிபரியாவிலும் கல்யாணம் என்று நடப்பது மிகவும் குறைவு. அநேகமாய் ஆண்கள் பெண்களை இழுத்துக்கொண்டு வருவார்கள் அல்லது பெண்கள் ஆண்களுடன் ஓடிப்போவார்கள். கடைசியில் சமூகத்துக்கு வெற்றிலை பாக்கு கொடுத்துவிட்டால் எல்லாம் சரியாய்விடும்.

கல்யாணம் செய்வதற்கு யாருக்கு வசதி இருக்கிறது? எல்லாருமே ஏழைகள்.

சந்திரனுடைய உத்தரவை மௌல்வி அப்படியே நிறைவேற்றினார். சேனிமாயி ஒரு நீளமான திரைத் துணியை எடுத்துக்கொண்டு போய் கபாஹியை வண்டியிலிருந்து இறக்கித் துணியால் அவளை முறைப்படி திரையிட்டு மூடி உள்ளே அழைத்து வந்தாள். கபாஹி உட்கார்ந்த உடனே மௌல்வியும் அங்கே வந்தார். திகரும் வண்டிக்காரனும் நிக்காவுக்கு சாட்சி ஆனார்கள். வக்கீலாகவும் மௌல்வியே இருந்தார். தொழுகை தோத்திரம் படித்தார்; ஆனால் மாப்பிள்ளைப் பெயரையும் பெண்ணின் பெயரையும் கேட்க மறந்து விட்டாரோ அல்லது அவசியமில்லையென்று விட்டாரோ, ஆக மொத்தம் கேட்டு அறிவிக்கவில்லை. பெண்ணுக்கான மொய்ப்பணத்தையும் அவரே தீர்மானித்து ஐம்பது ரூபாய் என்று சொல்லி வைத்தார். "இருவரும் மனமார ஒப்புக்கொண்டீர்களா?" என்று கேட்டார். இருவரும் "ஆம்" என்றனர். "சரி, அவ்வளவுதான்" என்றார். மௌல்வி தோத்திரம் செய்தார். பிரார்த்தனை செய்தார். இதற்குப்பிறகு டீ கொடுத்துவிட்டுச் சந்திரனிடமும் குலச்சிடமும் விடைபெற நின்றார். அவரிடம் ஒரு ரூபாய் பணம் கொடுத்து, "நிக்கா மந்திரமெல்லாம் ஒழுங்காகப் பண்ணி வைத்தீரா?" என்று கேட்டான் சந்திரன். "ஆகா, ஒழுங்காகப் பண்ணி வைத்தேன்" என்றார் மௌல்வி.

எல்லாரும் டீ குடித்துவிட்டு வீட்டுக்குப் புறப்பட்டார்கள். குலச் தானே சென்று திகரையும் சேனிமாயியையும் வழி அனுப்பினான்.

சந்திரன் கிளம்பும்போது, "என்ன குலச், ஒருத்திதானே வந்திருக்கிறாள்?" என்று கேட்டான்.

"ஆமாம்; எனக்கும் தெரியவில்லையே" என்றான் குலச். சந்திரன் தன் போர்வைக்குள்ளிருந்து ஒரு காகிதப் பொட்டலத்தை எடுத்து நீட்டினான். "அது என்ன?" என்று கேட்டான் குலச்.

"ஸாண்டில், செருப்பு. நான் தராவுக்குக் கல்யாணப் பரிசாக இதைத் தருவதாக வாக்கு அளித்திருந்தேன் அல்லவா?"

"சரி கொடு..." என்று அதை வாங்கி வீட்டிற்குள் வைத்துக் கொண்டான் குலச்.

"சரி, நீங்கள் ஓய்வு எடுங்கள்; நான் போய்வருகிறேன்" என்றான் சந்திரன்.

அப்பொழுது இரவு வெகுநேரம் ஆகி விட்டிருந்தது; ஆற்றங் கரையின் அமைதியும் பனியும் சேர்ந்து இரவை அதிகமாக்கி விட்டன. ஒரு பெரிய காரியத்தைச் செய்துவிட்ட பெருமிதத்துடன், சந்திரன் விடைபெற்றுக் கொண்டான். சிறிது தூரம் போய்த் திரும்பி, "குலச், குட் நைட்" என்று கத்தினான்.

குலச் சிறிது நேரம் வாசலிலேயே நின்றான். அவன் மனத்தில் ஒரே பரபரப்பும் குதூகலமும் பொங்கின; நான்கு புறமும் பார்த்துவிட்டு, கையில் விளக்கை எடுத்துக் கொண்டு உள்ளே இருக்கும் அறைக்குச் சென்றான்.

கபாஹி சரசரவென்று திரைத் துணியை விலக்கிவிட்டு, கண்களை விரித்து குலச்சைப் பார்த்தாள். குலச்சுக்கு உணர்ச்சி மரத்துவிட்டது. ஒரே குழப்பம் அவன் மனத்தில். அவனுக்குக் கபாஹியே கண்ணுக்குத் தெரியவில்லை.

"என்ன அப்படிப் பார்க்கிறாய்? தெரியவில்லையா? நான்தான்" என்றாள் கபாஹி.

"நீ..யா?"

"ஆமாம், நானேதான்; வேறு யார்..நானேதான்.."

கபாஹி வேகமாய் வந்து அவன் கையைப் பிடித்தாள்.

"தரா, எங்கே போனாள்?"

"எங்கே போவாள்; வருவாள், கிழவன் அவளை அழைத்துக்கொண்டு போயிருந்தான்; வீட்டுக்குத் திரும்பி அனுப்பியிருக்கமாட்டான்" என்று மிகவும் சகஜமாகப் பதில் சொன்னாள் அவள்.

குலச் சடக்கென்று தன் கையை அவள் பிடியிலிருந்து உதறி விடுவித்துக் கொண்டான்.

"ஏன்? என்ன ஆயிற்று?" என்று வியப்புடன் கேட்டாள் அவள் தலையைக் குனிந்து கொண்டு மெதுவாய் வீட்டுக்கு வெளியே வந்தான் குலச்; வாசலில் நின்று தன்சிரியாற்றைப் பார்த்தான். பனிக்கு அப்பால் தன்சிரி தனியே ஓடுகிறது. நன்றாகத் தெளிவாகத் தெரியவில்லை ஆற்றின் ஓட்டம். பயந்து கொண்டே

மெல்ல மெல்ல அவளும் வந்து அவனருகில் நின்றாள். சிறிது நேரம் கழித்து, "அங்கே என்ன பார்க்கிறாய்?" என்றாள். அவளுடைய பேச்சும் குரலும் புதுமையாகவும் முன்பின் பழக்கமில்லாதவை போலவும்பட்டன. குலச்சுக்கு "அது நம்முடைய நிலம்" என்றான் குலச் விட்டேற்றியாக.

கபாஹி இன்னும் அதிகமாய் நெருங்கி அவன் கையைப் பற்றினாள். அவள் குரல் முற்றிலும் தழுதழுத்தது. "அப்படி யானால் மிகவும் கிட்டத்தான் இருக்கிறது" என்றாள்.

"ஆமாம், அதற்குப் பக்கத்திலேயேதான் ஆறும் இருக்கிறது" என்றான்.

இருவரும் பனிக்கிடையிலேயே நிலத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். "உள்ளே போ; இங்கே குளிர் அதிகம்." என்றான் குலச்.

"இரவும் ரொம்ப நேரமாய்விட்டது." என்றாள் கபாஹி.

உள்ளே வந்ததும், "எங்கள் ஊரில், நான் வந்தது பற்றி யாருக்கும் தெரியாது" என்றாள்.

"அப்படியா?"

பேசாமல் இருவரும் அருகில் உட்கார்ந்திருந்தனர். அவன் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான். இடையிடையே அவளையும் பார்த்துக்கொண்டிருந்தான். அடிக்கடி தலையையும் கவிழ்த்துக் கொண்டான். பயத்துடனும் சந்தேகத்துடனும் கபாஹியும் அவனைப் பார்த்தாள் நடுநடுவே. அகல்விளக்கு அவர்களுக்குச் சிறிது தள்ளி மங்கலாய் எரிந்து கொண்டிருந்தது. எங்கும் எந்தச் சத்தமும் இல்லை.

கபாஹி மெதுவாய் "ஸபியத்துக் கிழவன், தராவைத் தனியே விட்டுவிட்டு, என்னை மறுபடியும் நாஹரிடமே அனுப்ப வேண்டுமென்று ஏதோ தந்திரம் செய்து கொண்டிருந்தான்" என்றாள்.

"நாஹரிடமா?"

"ஆமாம்; அவன் இன்னும் வேறு யாரையும் கல்யாணம் செய்து கொள்ளவில்லை; இழுத்துக்கொண்டும் வந்து வைத்துக் கொள்ள

வில்லை; நான் இன்றைக்கு உன்னுடன் ஓடிவந்திருக்காவிட்டால், கிழவன் ஏதாவது பண்ணித் தொலைத்திருப்பான்".

அப்படியானால் கபாஹிக்குத் தன்மேல் மிகவும் ஆசைதான்; தன் புருஷன் இருக்கும்போது, அவனை விட்டுவிட்டுத் தன்னுடன் ஓடிவந்திருக்கிறாளே. குலச் அவளைப் பார்த்தான் நன்றாக. பிறகு, "சரி, தராவை ஏன் கூட அழைத்து வரவில்லை நீ?"

"வருவாள் அவளும்; இங்கு வராமல் வேறு எங்கு போய் அவள் இருக்க முடியும்? ஊமையைக் கட்டிக்கொள்ள அவள் ஒரு போதும் சம்மதிக்க மாட்டாள்; நான் என்னுடனேயே எப்படி அழைத்து வரமுடியும்?"

குலச்சுக்கு என்ன தோன்றிற்றோ. அவன் பேசவில்லை. அவனுக்கு அழவேண்டும்போல் இருந்தது. ஆனால் அவன் சிரித்தான்.

கபாஹி அவன் முகத்தைத் தன் கைகளில் நடுவில் வைத்து அழுத்தி, "ராத்திரி வெகுநேரம் ஆகிவிட்டதே; தூங்கப் போவதில்லையா நீ?" என்று கொஞ்சினாள். அவளைத் தன் மார்பின் மீது போட்டுக் கொண்டபோது, அவனுக்கு அவள் முற்றிலும் ஒரு புது மணப்பெண்ணாகவே தோன்றினாள். அவளுடைய உடம்பில் ஒரு பருவப் பெண்ணின் பசுமையான லாகிரி மயக்கம் இருந்தது. கபாஹி அவனைவிட இளையவளான சின்னப் பெண் என்றும் தோன்றிற்று.

## பதினெட்டு

துறையிலிருந்து பீமன் கபாஹியின் வீட்டுக்கு வந்தான். வீடு முழுவதும் வெறிச்சோடிக் கிடந்தது. அதற்குள். வெறும் வீடு; பாழ்வீடு. பீமனுக்கு என்னவோபோல் இருந்தது. ஆமாம், பாழ் வீட்டிற்குள் மனிதர்கள் போகவே கூடாது.

அதுவோ நள்ளிரவு. பீமன் வீட்டைச் சுற்றிப் பார்த்தான். கபாஹி ரொம்பவும் சாமர்த்தியம் உள்ளவள். கிராமத்தின் ஒரு கோடியில் சித்தியும் மகளும் மட்டும் தனியாக எப்படித்தான் இருந்திருக்கிறார்களோ, ஒரு பயமும் இல்லாமல். அது சரி, இன்றைக்கு அவள் இந்த வீட்டை விட்டுப் போயிருக்கிறாளே, இதற்கும் எத்தனை தைரியமும் சாமர்த்தியமும் இருந்திருக்க வேண்டும் அவளுக்கு.

பீமன் வீட்டிற்குள்ளும் போனான். ஒரே இருட்டு; ஒன்றும் தெரியவில்லை. அங்கே என்னதான் இருக்கிறது; பார்க்க வேண்டுமா? ஆனால் வீட்டிற்குள் இருப்பதும் அவனுக்குப் பிடித்தது; வீட்டிற்குள் குளிர் இல்லாமல் இருக்க முடிந்தது; ஆனால் இருக்க முடியவில்லை; சிறிது நேரத்தில் வாசலுக்கு வந்துவிட்டான். வீட்டில் தட்டுமுட்டுச் சாமான்கள் கூட இல்லை; கபாஹி என்ன லேசுப்பட்டவளா?

வீட்டின் முன்புறத்தில் பனிக்குள்ளிருந்து யாரோ மெல்ல மெல்ல வருவது போலிருந்தது. அவனுக்கே பயமாயிருந்தது; கத்தியை உருவிக் கையில் வைத்துக் கொண்டு, "யார் அது?" என்று கேட்டான் இரைந்து.

|தராவுக்குப் பயம்; அவளும் உடனே "யார் அங்கே" என்று எதிர்க்குரல் கொடுத்தாள்.| |பீமன் அவளருகில் சென்று அவள் யாரென்பதைத் தெரிந்து கொண்டான்.| "நான்தான் பீமன்; நீ தரா தானே?" |

"ஆமாம் பீமா..." /

"இந்த நடுநிசியில் தனியாய் எங்கிருந்து வருகிறாய்?"

"நீ இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? சித்தி எங்கே?"

"உன் சித்திதான் போய் விட்டாளே, ரொம்ப நேரம் ஆகிவிட்டது. அவள் அக்கரைக்குப் போய்; நான்தான் ஆற்றைத் தாண்டத் துணையிருந்தேன். வீட்டில் ஏதாவது சாமான்கள் இருக்கிறதா என்று பார்க்கச் சொன்னாள்; வந்தேன்"

தரா குழம்பினாள்; "அப்படியானால் சித்தி போய்விட்டாளா?"

"குளிர் தாங்கவில்லை தரா; உள்ளே வா நீயும்; என்னிடம் நெருப்புப் பெட்டி இருக்கிறது; தீ மூட்டுகிறேன் வா"

|"அண்ணா.." என்று| |அவன் அருகில் வந்த தரா,| |பீமா நானும் அக்கரைக்கே போகிறேனே.." என்றாள்.

"ஆமாம்; நீயும் போக வேண்டியதுதான்; இங்கே தனியே இருக்கமுடியுமா? ஆனால் இப்போது ராத்திரி ரொம்ப நேரம் ஆகிவிட்டது.."

"ஆகட்டுமே; இனியும் நான் இங்கு இருக்கக்கூடாது; இப்போதே நானும் போகிறேன். நீ என்னைக் கொண்டு விடுவாய் அல்லவா?"

"இந்த ராத்திரியில் ஆற்றைத் தாண்டுவது நல்லதில்லை; இன்னும் பொழுது விடியவில்லை. விடியும் வரையில் இங்கே இரேன்."

தரா வீட்டிற்குள் வந்தாள்; பீமன் கையிலிருந்து தீப்பெட்டியை வாங்கிக் கொண்டுபோய், மூலையில் கிடந்த அரிக்கனை ஏற்றினாள்; வீட்டிற்குள் தன் பெட்டியைத் தேடினாள். இல்லை; சித்தி அதையும் எடுத்துக் கொண்டு போயிருந்தாள். பூனை ஒரு மூலையில் தனியாக உட்கார்ந்திருந்தது. தராவைப் பார்த்துவிட்டு அவளிடம் ஓடி வந்தது. மியாவ் மியாவ் என்று கத்திக்கொண்டே அவள் கால்களில் ஒட்டிக் கொண்டது. அதைக் கண்டதும் தரா யாவற்றையும் மறந்து பூனையைத் தன் இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டாள். அதன் உடற்சூடு அவளுக்குக இதமாயிருந்தது. ஆனால் விரைவில் அதைக் கீழே விட்டுவிட்டு வெளியே வந்தாள் "அண்ணா நான் உடனே போக.."

"இப்போதே போக வேண்டுமா?"

"ஆமாம், நீதான் என்னைக் கொண்டுவிடவேண்டும். அக்கரைக்கு நானே போய்விடுவேன்." என்று சொல்லிக்கொண்டே அவள் கிளம்பியும் விட்டாள். பீமன் அவளுக்குப்பின்னே நடந்தான். "உன் சித்தி ஏன் உன்னை அழைத்துப் போகவில்லை?" என்று கேட்டான். அவள் என்ன பதில் சொல்வாள்?

இன்றைக்கு நேர்ந்ததைப் போல, ஒரு பயங்கரமான தருணம் தன் வாழ்வில் வருமென்று அவள் கனவுகூடக் கண்டதில்லை. அவளுக்குத் தான் பல நாட்களாகத் தனியாக அலைந்து திரிவதுபோல் தோன்றிற்று. சுற்றிலும் ஒரே இருட்டும் பனியும்; பொழுது எப்போது விடியும்?

பனிக் காற்றில் அவளுடைய உதடுகள் வெடித்துவிட்டன. மரத்துப்போன அவளுடைய கையும் காலும் வலித்தன. மனத்தின் உள்ளேயிருந்த கவலையும் துயரமும் சேர்ந்து, அவள் உடல் கதகத வென்று சூடேறியிருந்தது. அப்போது அவளுக்குப் பைத்தியமே பிடித்துவிட்டது போல் இருந்தது.

ஆற்றின் துறையில் பயங்கர அமைதி. பனி கனமாக ஆற்றின்மேல் கொட்டியிருந்தது. சந்திரன் மறைந்து மங்கிப் போய்விட்டிருந்தது. சத்தமே இல்லாத கிராமம் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தது.

இருவரும் பேசாமலேயே நடந்து கொண்டிருந்தார்கள். பீமன் அவளிடம் எதுவுமே கேட்க விரும்பவில்லை; அவனுக்கு எல்லா விஷயமும் புரிந்துவிட்டது. "குலச் சுபாஹியைத்தான் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினானோ? அதனால்தான் சுபாஹி தனியே போயிருக்கிறாள்; தரா ரொம்ப சின்னப்பெண்; பதினான்கே வயதுதான்; ஆனால் தோற்றத்தில் அவள் பெரியவளாகவே, கல்யாணப் பருவம் வந்த பெண்ணாகவே, காண்கிறாள். சுபாஹியோ குலச்சைவிட நாலு வயது மூத்தவள்; அவள் கல்யாணப்பெண் ஆகியிருக்கிறாள். அவளும் நல்ல பருவ மங்கையாகத்தான் இருக்கிறாள்; அவளும் குடும்பக்காரி ஆக வேண்டியவள்தான். அவர்கள் தராவுக்கும் ஒரு நல்ல ஏற்பாடு செய்யாமலா இருக்கப் போகிறார்கள்? கட்டாயம் செய்வார்கள், ஒரு நாள்–"

இருவரும் துறைக்கு வந்து சேர்ந்தார்கள். ஒரு மூலையில் படகு கட்டப்பட்டிருந்தது; துடுப்பைக் காணவில்லை.

"தரா, ஆனது ஆய்விட்டது; குலச்சும் சுபாஹியும் எங்கேயும் ஓடிப் போய்விடமாட்டார்கள். இப்போதே போய் அவர்களுடைய தூக்கத்தைக் கெடுப்பதும், விடிந்ததும் போவதும் ஒன்றுதான். நாம் படித்துறைக் கொட்டகையில் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருப்போம். குளிரில் கை கால்கள் விறைத்து விட்டன."

தரா இதை மறுக்கவில்லை. பீமன் தீ மூட்டினான்- பெரிய நெருப்பு. கிடந்த சுள்ளிகளைச் சேர்த்துக்கொண்டு வந்து போட்டான். இருவரும் நெருப்பின் எதிரே உட்கார்ந்தார்கள். ஒன்றும் பேசவில்லை. கைகால்களைக் காய்ச்சிக் கொண்டபிறகு, இருவருக்கும் சற்று நிம்மதி ஆயிற்று.

"இன்னும் சிறிது நேரத்தில் விடிந்துவிடும். உங்களாலே இன்று இரவு எனக்கும் வீணாகிவிட்டது; நீ இன்று குலச்சுடன் போவதாக இருந்தால், நீ வெளியில் எங்கும் போயிருக்கக்கூடாது?" என்றான். அவள் பதில் சொல்லவில்லை.

தொலைவில் கோழிகள் கூவின. இரவு திடீரென்று முடிந்து போய்விட்டது போலும். தங்கள் உள்ளமும் உடம்பும் இளைத்து விட்டதுபோல் இருந்தது; ஆனால் அப்போதும் மண்ணும் விண்ணும் பனியில் மூழ்கியிருந்தன. தரா எழுந்து நின்றாள். "என்னை அக்கரையில் கொண்டுவிடு பீமா?"

"ஆகட்டுமே; பொழுது விடிந்துவிட்டது;அக்கரையில் உனக்கு வழி தெரியுமா?" "நீ கொஞ்சம் தூரம் கொண்டு போய்விடு; அப்புறம் நானே போய்விடுகிறேன்..." பீமனும் எழுந்தான். கொட்டகையில் செருகி வைத்திருந்த துடுப்பைத் தேடி எடுத்து வந்து துறையிலும் இறங்கினான்.

அப்பொழுதுதான் விடிந்து கிழக்கில் சற்றே மங்கலான வெளிச்சம் பரவியிருந்தது. பீமனைப் பின் தொடர்ந்து குலச்சின் வீட்டை நோக்கிச் சென்றாள் தரா. பனியில் நனைந்த உடம்பு; கீழே ஈரமான மண். காய்ந்த புல்லும் பூண்டும் மிதிபடுகின்றன.

கபாஹி படுக்கையிலிருந்து எழுந்து வீட்டுக்கு வெளியே வந்திருந்தாள். அப்போதுதான்; எதிரில் தராவைப் பார்த்து விட்டுத் திடுக்கிட்டாள்; இருந்தாலும் மிகவும் சமாளித்துக் கொண்டு தன் அதிர்ச்சியைக் காட்டாமல், "வந்து விட்டாயா? வா. உள்ளே போ. உன் சிற்றப்பா இன்னும் படுக்கை யிலிருந்து எழுந்திருக்கவில்லை. நான் ஆற்றில் குளித்துவிட்டு இதோ வந்துவிடுகிறேன்" என்றாள்.

தரா வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள். அவளுடைய கண்பார்வை மங்கி மழுங்கியது. உட்கார்ந்தாள். குலச் இன்று அவளுக்குச் சிற்றப்பா. தராவின் கனவு சிதைந்துவிட்டது. அவள் கிழக்கே பார்த்தாள். ஆகாயம் அவளுக்குத் தெரியவில்லை.

## பத்தொன்பது

இந்தச் செய்தி மறுநாளே டாலிம் கிராமத்துக்குத் தெரிந்தது. ஸபீயத்தின் வீட்டிலிருந்து தரா காணாமற்போனதும், அவளைத் தேடினார்கள் சிறிது நேரம். பிறகு அதை அத்துடன் ரொம்ப அல்லோலகல்லோலப் படுத்தாமல் விட்டுவிட்டார்கள்.

"எல்லாமே ஓடிப்போகும் பெண்கள்; ஓடின வரையில் நல்லது. அவளைத் தேட வேண்டியதில்லை. சோறில்லாமல் திண்டாடப் போகிறாள்" என்றான் கிழவன். ஆனால் மறுநாள் ஆட்களை அனுப்பி, அவள் வீட்டிற்குத் திரும்பிப் போனாளா இல்லையா என்பதை விசாரிக்கச் சொன்னபோதுதான், எல்லா ரகசியங்களும் வெளிப்பட்டன.

ஒருவன் சொன்னான்; "குலச் தராவைக் கல்யாணம் செய்து கொண்டான்" இன்னொருவன், "சீச்சீ, அவன் கபாஹியைத்தான் கல்யாணம் பண்ணினான்" என்றான். இரண்டு நாட்களுக்குள் உண்மை தெரிந்துவிட்டது, கபாஹியைத்தான் குலச் கல்யாணம் செய்துகொண்டிருக்கிறான் என்று.

பலவிதமாக, இதை எதிர்த்தும் ஆதரித்தும் வம்பு அளந்தார்கள்.

"தராவைக் காட்டி அவனை இழுத்துக் கடைசியில் தானே அவனை மணந்து கொண்டாள். பெண்களை நம்பவே கூடாது."

"ஏற்கனவேயே குலச்சுக்கும் கபாஹிக்கும் தொடர்பு உண்டு. அதை இப்பொழுது உறுதி செய்து கொண்டார்கள் அவ்வளவுதான்." "தராவையும் தானே கல்யாணம் செய்து கொள்வதாக நம்பிக்கையூட்டி இருந்தானாமே அவன்"

"வாஸ்தவம்; அவனை அவள் நம்பியிருந்தாள்; ஏமாற்றிவிட்டான்." "யார் யாரை ஏமாற்றினார்களோ, யாருக்குத் தெரியும்? அவரவர் தலையில் எழுதியிருப்பதை மாற்றவே முடியாது".

"தராவுக்கு இன்னும் கல்யாண வயதே வரவில்லையே; அவளுக்கு வயதே ஆகவில்லை இன்னும். குலச் கபாஹியைச் செய்து கொண்டதுதான் பொருத்தம்".

சந்திரன் ஒரு நாள் குலச்சைப் பார்த்தான் "என்னடா, நீ இப்படிச் செய்துவிட்டாய்? நீ தராவுடன்தான் தொடர்பு கொண்டிருந்ததாக நான் நினைத்திருந்தேன்?" என்று கேட்டான் குலச்சை.

குற்றவாளியைப்போல் தலையைக் குனிந்து கொண்டு, "நீ நினைத்தது சரிதான்; நான் இப்படி நினைக்கவே இல்லை. எங்கேயோ குழப்பம் நேர்ந்திருக்கறது" என்றான் குலச்.

"என்னால் தெரிந்து கொள்ளவே முடியவில்லையே. தராவை நீ எதிர்பார்த்து இருந்திருந்தால், நீ ஏன் கபாஹியுடன் நிக்கா மந்திரம் சொன்னாய்?"

"தராவுக்குப் பதிலாக இவள் வந்தது எனக்குத் தெரியாதே சந்திரா. மௌல்வி அப்போது என்ன சொன்னாரோ எனக்கு

நினைவில்லை. புர்க்காவும் திரையும் போட்டுக்கொண்டு தரா வந்திருப்பதாகத்தான் நான் நினைத்தேன்".

"சரி ஆனது ஆய்விட்டது; இனிமேல் ஒழுங்காக நடந்து கொள்ளவேண்டும் நீ. தரா மேலும் அன்பு காட்டவேண்டும்.." என்றான் சந்திரன்.

"கட்டாயம்; அவள் மீது பிரியம் வைக்காமல் இருப்பேனா? ஆனால் அவள் இங்கே வந்ததிலிருந்து, மிகவும் மனம் ஒடிந்து போய் வேதனைப்படுகிறாள் சந்திரா.."

"கொஞ்ச நாள் துக்கம் இருக்கத்தான் இருக்கும். நீங்கள் இருவருமே அவளிடம் ரொம்பப் பிரியமாய் இருக்க வேண்டும். அவள் சின்னப்பெண்."

"அப்படியே இருப்பேன்; விதை தெளிக்கும் பருவம் வந்துவிட்டதே! நான் சாகுபடிக்குக் கொண்டு வந்துள்ள நிலங்களுக்குப் பட்டா வாங்கித் தரவேண்டுமே நீ!"

"கட்டாயம் வாங்கித் தருகிறேன்; கவலைப்படாதே. இந்த வருஷம் நீ நல்லபடி விவசாயம் செய்; துவரை கடுகு விலையெல்லாம் ஏறியிருக்கிறது. நெல் விலையும் ஏறலாம். இப்போது நீ தனி ஆள் இல்லை. நன்றாக விவசாயம் செய்யாவிட்டால் மூன்று பேர் பசியில் சாக வேண்டி வரும்."

குலச்சுக்கும் இந்தக் கவலை உண்டு. வருஷம் முழுவதற்கும் வேண்டிய நெல்லைச் சேகரித்து வைத்துக்கொள்ளாவிட்டால், ரொம்பக் கஷ்டப்படும். மூன்று பேர் சாப்பிடவேண்டுமே.

கபாஹியும் சும்மா உட்கார்ந்து கிடக்கும் பெண்பிள்ளை இல்லை. சென்ற வாரத்தில் குலச்சிடம் சொல்லி, இரண்டு கைத்தறிக்கு ஏற்பாடு செய்தாள். தன்னிடம் உள்ள கொஞ்சம் ரூபாயில் நூல் வாங்கிக்கொண்டு வரச் சொன்னாள். இருவரும் தனித்தனியே தறியில் உட்கார்ந்து நெய்ய ஆரம்பித்தார்கள். சும்மா உட்கார்ந்திருந்தால் சாப்பாடு நடக்குமா. தன் வீட்டிலிருந்தே தறிக்கு வேண்டிய சாமான்களைக் கொண்டு வந்திருந்தாள்.

குலச்சால் தராவின் முகத்தை ஏறிட்டுப் பார்க்கக்கூட முடியவில்லை. அவன் பயந்தான். தான் அவளுக்குத் தீங்கு இழைத்து விட்டதாகவே நினைத்தான்.

தராவின் வாழ்க்கையில் பெரிய மாறுதல் ஏற்பட்டிருந்தது; யாருமே அதிகம் பேசாத அந்தக் குடும்பத்தை, அவள் மேலும் பேச்சற்றதாகச் செய்து விட்டாள். யாருடனும் எதுவும் பேசுவதில்லை. தலையைக் குனிந்து கொண்டே வேலை செய்தாள். குலச்சுக்கும் கபாஹறிக்கும் முன்பாகவே அவள் விடியற்காலை எழுந்துவிடுவாள். வீடு வாசலைப் பெருக்கி மெழுகுவாள். ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வருவாள். நெல் குத்துவாள். எல்லோரும் சாப்பிட்டபிறகு வீட்டு வேலைகளை முடித்துக் கொண்டு தூங்கப் போவாள். ஒரு வார்த்தைகூடப் பேசுவதில்லை அவள். உலகத்தில் தன்னுடன் யாருமே இல்லை; தான் தனி என்று நினைத்தாள்.

தராவின் மனநிலை குலச்சுக்குத் தெரியும்; ஆனால் வழியொன்றும் தெரியாமல் தூரத்தில் விலகியே இருந்தான்; தூண்டிலுடன் ஆற்றில் வெகுநேரம் உட்கார்ந்திருப்பான். மாடுகளை மேய்த்துக்கொண்டு அந்திக்குப் பிறகு வருவான். கபாஹறி மிகவும் சாதாரணமாகவே பேசிக் கொண்டிருந்தாள்; எதுவுமே நேர்ந்துவிடவில்லை என்பதுபோல இருந்தாள். தானும் குலச்சும் வெகுகாலமாகவே இப்படி இருப்பதுபோலவும், தராவும் தன் வீட்டில் ரொம்ப நாட்களாக இருப்பதுபோலவும் நடந்து கொண்டாள்.

பங்குனி முடிந்து சித்திரை வந்தது; பிறகு வைகாசியும் வந்துவிட்டது. தன்சிரியில் புதுவெள்ளம் பெருகிற்று. குலச்சின் வீட்டு வாசலில் புதுப்புல் முளைத்தது. பூமியும் புதுமை பெற்று விளைவுக்கான தகுதி பெற்றது.

கபாஹறி வாத்து முட்டைகளைப் பதமாக ஒத்தடம் கொடுத்துக் குஞ்சுகள் வெளிவரச் செய்து, அவற்றைப் பத்திரமாகக் கூடைகளில் கவிழ்த்து வைத்தாள். தராவும் பெட்டைக் கோழிகளையும் குஞ்சுகளையும் காக்கை கழுகுகள் கவராமல் பாதுகாத்தாள்.

இடையில் ஒரு தடவை குலச் டாலிமுக்குப் போயிருந்தான். தன் அம்மாவை இன்னொருவர் வீட்டுக்கு அழைத்து வரச்சொல்லி, "அம்மா, உன்னை அழைத்துப் போகத்தான் வந்திருக்கிறேன்; என்னுடன் வா" என்று கூப்பிட்டான். அவளுக்கு எல்லையற்ற கோபம் வந்தது. "உன் வீட்டுக்கா? ஏன்? அந்த உன் வைப்பாட்டியின் கையால் சோறு தின்ன நான் தயாராய் இல்லை;

நான் இன்னும் அதிகக் கஷ்டப்பட்டாலும் சரி; அவளுடன் ஒரே கூரையினடியில் இருக்க, ஒரு போதும் அங்கே வரமாட்டேன்" என்றாள்.

"தராவும் கூட இருக்கிறாளே." என்றான் அவன், தலையைக் குனிந்து கொண்டு.

"அவள் இருந்தால் என்னவாம்; அம்மாவைப்போல் பெண்; ஒருநாள் அவளும் எவனுடனாவது ஓடிப்போய்விடுவாள்; ஒரு வைப்பாட்டியை அழைத்துக் கொண்டு வந்து வைத்திருக்கிறாயே! ரொம்ப நல்லது அப்பா, நீ சுகமாய் இரு. என்னைப்பற்றிக் கவலைப்படாதே."

அவனுக்கும் கோபம் வந்துவிட்டது. "வந்தால் வா; வராவிட்டால் போ. மருமகள் கையால் சாப்பிட நீ கொடுத்து வைக்கவில்லை அவ்வளவுதான். போயேன்"

"அவள் கையாலே சாப்பிட வேண்டுமென்று எனக்குத் தலையெழுத்தா?"

யார் யாரை மணந்து கொண்டான்; யார் யாருடன் ஓடினாள் என்றெல்லாம் யோசித்துக்கொண்டிருக்க, டாலிம் கிராமத்து ஜனங்களுக்கு நேரமில்லை. இந்தக் கல்யாணத்தால் குலச்சுக்குக் கஷ்டம் ஒன்றுமில்லையே. சரி; இது நல்லதா கெட்டதா என்று ஆராய வேண்டிய அவசியமே இல்லை. ஒரு வீட்டுக்கு ஒரு பெண்பிள்ளை அவசியம் வேண்டும். கபாஹியோ வேறு ஒருத்தியோ; யாரும் அவனை ராஜா ஆக்கிவிடப் போவதில்லையே.

குலச்சுக்குத் தன் வீட்டிலே கொஞ்சம் கூச்சம் இருந்தது. எதற்கும் அவன் தராவைத்தான் கூப்பிட்டான்; கேட்டான். "இந்தாம்மா, தரா, ஒரு டம்ளர் தண்ணீர் கொடேன். தரா கொஞ்சம் என் சட்டையைத் துவைத்து வைப்பாயாம். இந்தா இந்த மீன்களைச் சமைத்து வை. தரா, இந்தாம்மா, மாடு கன்றுகளுக்குத் தண்ணீர் காட்ட மறந்துவிடாதே." இப்படியெல்லாம் எதற்கும் அவளையே கூப்பிட்ட போதிலும், தராவுடன் அவனால் சகஜமாகப் பழக முடியவில்லை. அவள் பதில் பேசாவிட்டாலும் அவளுடைய உள்ளத்தில் குறைகள் தோன்றித் தோன்றி மறைகின்றன. என்றும் அவற்றைச் சொல்லித் தன்னை குற்றம்சாட்ட முடியாமல் அவள் தவிப்பதையும் குலச்

உணர்ந்தான். அவனுக்குக் கூச்சம்; குழப்பம்; உள்ளுக்குள் வேதனை. இத்தனையும் பொறுத்துக் கொண்டு அவற்றை நீக்கவும்தான் அவன் அவளைக் கூப்பிட்டுச் சொல்கிறான் எல்லாவற்றையும்.

கபாஹி ஒரே நாளில் அவனோடு பழகும் நிலையையும், அவனோடு பேசும் முறையையும் எப்படியோ மாற்றிக் கொண்டு விட்டாள். எந்தக் குலச்சை அவள், நீ என்றே சொல்லி வந்தாளோ அதை நீங்கள் என்று மாற்றிக்கொள்வதில் அவளுக்கு சிரமமே ஏற்படவில்லை. குலச்சுக்கும் அவளை அக்கா என்றழைப்பதற்குப் பதிலாகப் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதில் இடைஞ்சலே தோன்றவில்லை.

தராவுக்கு இப்படி முடியவில்லை. தினமும் யாரை அண்ணா அண்ணா என்று அழைத்தாளோ அவனைச் சித்தப்பா என்று அவளால் கூப்பிட முடியவில்லை. இப்போதெல்லாம் அவள் குலச்சை எந்த உறவும் சொல்லிக் கூப்பிடாமல் எப்படியோ சமாளித்தாள். அவனை நீ என்றும் சொல்வதில்லை, 'நீங்கள், தாங்கள்' என்றும் சொல்வதில்லை. எப்படியோ கூப்பிடுகிறாள். நீக்க முடியாத சங்கோசம் அவளைத் தொல்லைப்படுத்தியது.

இவ்வளவிருந்தும் குலச்சிடம் அவளுக்கு அன்பும் ஆதரவும் சிறிதும் குறையவில்லை. அவனுடைய வசதிகளிலும் சௌகரியங் களிலும் மிகவும் கண்ணும் கருத்துமாயிருந்தாள். அவனுடைய துணிமணிகள் அனைத்தையும் துவைத்தும், கிழிந்தவற்றைத் தைத்துச் சீர் செய்தும், அவனுக்கு வேண்டியதை வாய்க்கு ருசியாகச் சமைத்தும், இன்னும் பல வகைகளிலும் அவனுக்குப் பணிவிடைகள் செய்தாள். குலச்சுக்கும் மிகவும் சந்தோஷம்தான். மிகவும் நன்றி பாராட்டினான்; ஆனால் வாய்விட்டு ஒன்றும் சொல்லவில்லை; அவனால் சொல்லவும் முடியவில்லை. அவன் மாடுகள் மேய்க்கச் சென்றிருக்கும் சமயம்-மழை வந்துவிட்டால் ஓடோடியும் போய்க் குடையைக் கொடுப்பாள். காலில் முள் தைத்தால் எதிரே சப்பளம் கட்டி உட்கார்ந்து முள்ளை எடுப்பாள். வேலை செய்யும்போது அவன் கைகால்களில் வெட்டுக்காயம் பட்டுவிட்டால், பரபரப்புடன் உப்பு வைத்துக் கட்டுவாள். அவன் வெய்யிலில் எங்காவது அலைந்துவிட்டுத் திரும்பும்போது விசிறியைக் கொண்டு விசிறுவாள். அவனுடைய சௌகரியத்துக் காகவே நிழல்போல அவனுடனேயே இருப்பாள் எப்போதும்.

ஆனால் அவள் வாய் திறந்து பேசுவதில்லை; அவள் பேசாமடந்தை, குலச் எதைப்பற்றியாவது கேட்டால்,

தேவையானதை மட்டும் மிகச் சுருக்கமாகச் சொல்வாள். அவள் சிரிப்பதையே மறந்துவிட்டாள் போலும். அவளைப் பேசவைக்க முயன்று [illegible]லச் தோல்வியே கண்டான். கபாஹி இதையெல்லாம் கவனிப்பதே இல்லை; யார் சிரித்தார், யார் பேசினார் என்றெல்லாம் கவனிக்க அவளுக்கு நேரமே கிடையாது. அவள் புதிய குடும்பத்தின் வேலைகளில் அப்படி ஈடுபட்டாள்; ஒரு தனி ஆள் எவ்வளவு செய்ய முடியும். எல்லாரும் சேர்ந்து செய்தால்தானே காரியம் ஓடும்.

தராவைப் பார்க்கும்போது சற்றே கூச்சப்பட்டானே தவிர, குலச் ரொம்பவும் சுகமாய் நிம்மதியாய் வாழ்ந்தான். தன் வீட்டில் சமைத்த சாப்பாடு கிடைக்கிறது; தன் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ள ஒரு பெண்பிள்ளை இருக்கிறாள். தனக்கென்று எப்பொழுதும் திறந்துள்ள சுவாதீனமான வீடிருக்கிறது. இந்தப் புதுக் குடும்பத்தை ஆக்கிப்படைத்தவன் அவன்; காப்பவனும் அவனே. அவனை மறுக்கவோ, எதிர்த்துப் பேசவோ யாருமில்லை.

இப்போது அவன் தன் இஷ்டப்பட்ட நேரத்தில், இஷ்டப்பட்ட அளவு வயலில் வேலை செய்யலாம். இஷ்டப்படிப் பேசாமலும் இருந்து பொழுது போக்கலாம். ஆற்றின் கரையில் உட்கார்ந்து கொண்டு எத்தனை நேரமானாலும் ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டிருக்கலாம். இஷ்டப்படி எங்கும் சுற்றலாம்.

இரவு வேளைகளில் வீட்டு வாசலில் பாய்விரித்துக் கபாஹியும் குலச்சும் உட்கார்ந்திருப்பார்கள்; உள்ளே தரா சோறு சமைப்பாள். இவர்கள் இருவரும் தங்கள் குறைகளையும், இன்னும் வேண்டியிருக்கும் விஷயங்களையும், எதிர்காலத்தைப் பற்றியும் பேசிக் கொண்டிருப்பார்கள். கற்பனை செய்வார்கள். ஒரு குளம் வெட்டவேண்டும். வயல் வேலைக்கு எருமைக்கடா வாங்க வேண்டும். அந்தப் பக்கம் இலவமரத்தடி நிலத்தில் எந்த நெல் நன்றாய் விளையுமென்று பார்த்து நடவேண்டும். இன்னும் கொஞ்சம் விதை நெல் வாங்கவேண்டும்.

இடையிடையே இரைந்தும், சில சமயம் ரகசியமாகவும் அவர்கள் ஆசை மிகுந்த சொற்களைப் பரிமாறிக் கொள்வார்கள். வாழ்க்கையில் நேர்ந்த ஆச்சரியமான நிகழ்ச்சிகளை நினைத்துப் புல்லரிப்பு அடைவார்கள். அவர்களுக்கு நிலா மிகவும் இன்பமா யிருக்கும். அங்கு வீசும் காற்றை அவர்கள் தமது சொந்தக் காற்றாகவே நினைத்து அநுபவிப்பார்கள்.

தராவின் காதிலும் அவர்கள் பேசிக் கொள்வது விழும், ஆனால் எதிலும் பங்கு கொள்வதில்லை. அவள் தன் எண்ணங்களைத் தனக்குள்ளேயே பேசிக் கொள்வாள். அவள் பேசுவதைக் காற்று கேட்கும்; இரவு கேட்கும். உலகத்தில் வேறு யாருக்கும் அது காதில் விழாது. ஒரு சிறிய குடும்பம்; ஓர் அமைதியான வாழ்க்கை. இன்பச் சுவையின் ஒரு சிறிய கனவு. ஆசை மிகவும் அதிகம். இருப்பதோ மிகவும் குறைவு.

"வாசலில் எல்லாப் பக்கத்திலும் பூச்செடி வைக்கவேண்டும்" என்றான் குலச், கையால் வாசல் நிலத்தைச் சுற்றிக் காண்பித்தான்.

"செய்வோமே." என்றாள் கபாஹூி சுருக்கமாக. அப்பொழுது அவள் நினைவு பூவில் இல்லை. தராவின் காதில் விழுந்தது. பூச் செடி வைத்தால் தினம் தான் தண்ணீர் ஊற்றலாமே என்று நினைத்தாள் அவள். குருவி, புறா, நாய்கள், பூனை, மாடு கன்றுகள் போன்றவற்றிடம் அவளுக்கு ஆசை அதிகம். அவற்றைத் தூக்கி வைத்துக் கொள்வாள்; அவற்றுடன் பேசுவாள்.

கபாஹூி முன்னைவிடப் பருமன் ஆகியிருந்தாள். பார்ப்பதற்கும் மிகவும் அழகாயிருந்தாள்; மிகவும் குதூகலமாக இருந்தாள். அவள் முகத்தைவிட்டுச் சிரிப்பு நீங்குவதே இல்லை. அவளைப் பார்க்கும் போதெல்லாம் குலச்சும் முகம் மலர்ந்தான். தரா எங்காவது போயிருக்கும் வேளைகளில் குலச் இதை வாய்விட்டே சொல்லிவிடுகிறான். "மிகவும் அழகும் நிறமும் கூடியிருக்கிறதே, என்ன செய்கிறாய் இப்படி ஆக" என்பான். அப்போது கபாஹூிக்கு வெட்கத்தால் முகம் சிவக்கும். கண்களில் ஆனந்தக் கண்ணீரும் பெருகும்.

தராவும் முன்னைவிடப் பருமனாகவும் அழகாகவும் இருந்தாள். வாட்டசாட்டமான கால் கைகளும், ரோஜாப்பூ போன்ற கன்னங்களும், சிவந்த உதடுகளுமாய் அவள் அழகு கூடி நின்றாள்.

குலச்சால் தராவை அதிக நேரம் உற்றுப் பார்க்க முடிவதில்லை. அவன் தன் முகத்தை வேறு புறம் திருப்பிக் கொள்ள வேண்டியிருந்தது. தராவுக்கும் இது தெரியும். அவளும் வெட்கப்படுகிறாள். தன்சிரியின் கரையில் வாழ்க்கை வெள்ளம் மெல்ல மெல்ல முன்னே செல்கிறது. குலச்சின் குடும்ப வாழ்வும் அப்படியே முன்னேறியது.

# இருபது

ஒற்றைத்தனியாய், ஒரு பக்கமாய் இருந்த திடலில் அமைந்த கபாஹூி வீடு. அதுவே நிரந்தரமான வீடாகியிருக்கிறது. சும்மா போட்டு வைத்த வாழையும், கமுகும் தழைத்துப் பசுமையாய் விடுகின்றன; பாஹூி வீடு பாஹூி வீடாகவே இருந்துவிடவில்லை. பாஹூியில் பராதீனமாகவே வளர்ந்த மனம், மெல்ல மெல்ல வீட்டுக் குடும்ப மனமாக மாறுகிறது. புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வந்த நிலத்தில், புதுவாழ்வின் அடித்தளம் எழுகிறது.

திகர் இடையிடையில் குலச்சின் வீட்டுக்கு வருவான். இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ளும் சில வார்த்தைகளைப் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போவான். தரா அவன் எதிரே அதிகமாய் வருவதில்லை; திகருக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை என்பது அவளுக்குத் தெரியும்; இப்படிப்பட்ட ஆட்களுடன் நெருங்கிப் பழகக்கூடாது. கபாஹூி திகரிடம் சொந்தம் கொண்டாடுவாள்; அவனுக்கு அவள் கடமைப்பட்டவள். ஏனென்றால் அவன்தான் அவளை அன்றிரவில் துறையிலிருந்து வரவேற்று அழைத்து வந்தவன். திகரும் மிகவும் அடக்கமானவன்; மிகவும் அன்பு உள்ளவன். வாலிபனாக இருந்தும், மன அடக்கம் உள்ளவன். கொஞ்சம் உயர்ந்த சுபாவம் உள்ளவம்; ஆகவே குலச்சும் அவனிடம் நட்புக் கொண்டிருந்தான். குலச்சும் உயர்ந்த இயல்பு உள்ளவனானதால் அந்த சிநேகம். இருவருமே வளவளவென்று பேசமாட்டார்கள். ஆண்பிள்ளைகள் அப்படித்தான் கம்பீரமாக இருக்க வேண்டும்.

சந்திரனும் எப்போதாவது வருவான்; கபாஹூி தரா இருவரையும் பற்றி விசாரிப்பான். எதையாவது விளக்கி அறிவுரை கொடுத்து, ஏதாவது உத்திரவுகள் போட்டுவிட்டுப் போவான்.

பீமனும் வந்து மாடு கன்றுகளைப்பற்றிக் கேட்டுக்கொள்வான். குலச்சின் மாடுகளை அவன்தான் பார்த்துக் கொள்கிறான். எப்போதாவது தயிரோ, நெல்லோ வாங்கிக் கொண்டு போவான். இது தவிர சேனிமாயி திடீர் திடீரென்று காலையிலோ பகலிலோ வருவாள். அவள் குலச்சுடன் அதிகம் பேசுவதில்லை. கபாஹூியி டமும் தராவிடமும்தான் பேசிக் கொண்டிருப்பாள். அவளை தராவுக்கு நன்றாய்த் தெரியும்.

சேனிமாயிடம் பல மாறுதல்கள் தோன்றியிருந்தன. அவள் புதுமணப் பெண்தான்; இருந்தாலும் வயதானவள் போலத் தோற்றமளிக்கிறாள். அவள் குடும்பம் மிகவும் ஏழை; அவளுடைய கணவன் நோயாளி. நாளுக்குநாள் அவனுக்கு வியாதி அதிகமாகிறது. நல்லபடி வைத்தியம் செய்யப் பணவசதி இல்லை, ஆகவே நல்ல வைத்தியமே செய்யவில்லை. பட்டணத்தில் இருக்கும் ஆஸ்பத்திரிக்குச் சென்று வைத்தியம் பார்த்துக் கொள்ளும்படிப் பலர் ஆலோசனை கூறினார்கள். எல்லாவற்றிற்கும் அடிப்படைத் தேவை பணமல்லவா; அவள் சொல்லாமலேயே, அவள் மனத்தில் இருக்கும் துயரம் அவள் முகத்தில் தெரியும். அவள் சிரிப்பும் வறண்ட சிரிப்புத்தான். துயரம் கலந்த சிரிப்புத் தான்.

குலச் அவளைப் பார்த்து மிகவும் வருத்தப்பட்டான். அவள் மீது அவனுக்கு அன்பும் ஏற்பட்டது. அவன் அதை வெளியே சொல்லாமல் மனத்திற்குள்ளேயே நினைத்துக் கொள்வான். "விளைச்சல் நன்றாய் ஆகிவிட்டால், அவன் நாலு ரூபாயை முகதலையாகக் கொடுக்கலாம்; அது தவிர ரகசியமாகச் சேனிமாயிக்கும் ஏதாவது உதவி செய்யலாம்; அது அவன் கடமையும்கூட"

கபாஹியும் எப்போதாவது சேனிமாயியின் வீட்டுக்குப் போவாள். தரா போவதே இல்லை. போகச் சொன்னாலும் போவதில்லை அவள். சேனிமாயியே அவளைக் கூப்பிட்டாலும், ஒரு வறட்டுச் சிரிப்பு சிரித்துவிட்டு அப்பால் போய்விடுவாள். எப்படியும் குலச்சின் குடும்பம் சிபரியா கிராமத்தைச் சேர்ந்ததாகியிருந்தது.

குலச் நமாஸ் படிக்கக் கற்றுக் கொள்ளவே இல்லை. அவனால் கற்றுக் கொள்ள முடியவும் இல்லை. அதற்காக அவன் வருத்தமும் படவில்லை. கிராமத்தில் எத்தனை பேருக்கு நமாஸ் படிக்கத் தெரியும்? அவன் வெள்ளிக்கிழமை தொழுகைக்குக்கூடப் போவதில்லை. ஈத் பண்டிகையிலும், பக்ரீத் திருநாளிலும் மட்டும்தான் அவன் மசூதிக்குப் போவான்; ஒன்றும் தெரியாவிட்டாலும் மற்றவர்களுடன் உட்கார்ந்திருப்பான்.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும், அவனுக்கு மசூதிக்குப் போக வேண்டும் என்று கபாஹி நினைவுபடுத்துவாள். "இதற்கு முன்னால் படிக்கவில்லை நமாஸ் செய்ய. இப்போது குடியும் குடும்பமுமாய் இருக்கிறாய்; அல்லாவின் பெயரையும் நபி நாயகத்தின்

பெயரையும் சொல்லவேண்டும். இல்லாவிட்டால் ஊரார் தவறாக நினைப்பார்கள்" என்றாள். நமாஸ் செய்யத் தனக்குத் தெரியாதென்றோ, புதிதாகப படித்துக்கொள்ளவும் நேரம் இல்லையென்றோ அவன் கபாஹூயிடம் சொல்வதில்லை.

அவன் மசூதிக்குப் போகாமல் இருப்பது பற்றியும் கபாஹூ குறைகூறுவதில்லை. கிராமத்தில் பலர் போவதில்லை. வாலிப வயது, வயது முதிர்ந்தால் தானாகப் போவான்; தவிரவும் மசூதி தூரத்தில் இருந்தது. அரை மைலுக்குக் குறைவில்லை தூரம். அங்கே போய் வந்தால் அரைநாள் போய்விடும்.

குலச் எப்போதாவது சேனிமாயின் வீட்டுக்குப் போவதுண்டு. நலம் விசாரிப்பான். அவர்கள் கொடுத்தால் ஒரு வாய் டீயும் குடித்துவிட்டு வருவான். கேலாயி எப்படி இருக்கிறான்? ஏதாவது வைத்தியம் நடக்கிறதா, என்று கேட்பான். அவன் வரும்போது அவனிடம் சேனிமாயி நாலு வார்த்தை பேசுவாள். வழக்கமான வீட்டைப் பற்றிய பேச்சுத்தான். இருவருமே தூரவே இருக்க முயன்றார்கள். இருவருடைய வாழ்க்கையின் போக்கும் இன்று மாறியிருக்கிறது. தவிர்க்க முடியாத இந்த இடைவெளியை ஒப்புக்கொள்ளாதிருக்க முடியாது.

அவர்களுக்குள் ஒருவரைப்பற்றி மற்றவருக்குக் குறையும், குற்றமும் சொல்லிக் கொள்ள ஒன்றுமில்லை. இன்று அவர்களுடைய உறவு. மிகவும் சாதாரணமான உறவுதான். அவர்களுடைய பழைய தொடர்பைப்பற்றி மோலோகவுக்கோ, கேலாயிக்கோ திகருக்கோ ஒன்றும் தெரியாது. ஆடி பதினைந்து தேதி. வயல் வேலைகள் ஆரம்பமாயின. சில நிலங்களில் ஆடி பிறந்ததுமே நாற்று விடுவார்கள். நடவு வேலைகள் ஐப்பசி வரை நடக்கும். அவை ஆற்றின் பள்ளத்தாக்கு நிலங்கள்.

கபாஹூயும் தராவும் நாற்று பறிக்கப் போயிருந்தார்கள். கடுமையான வெய்யில். போது சாய்ந்தது. வாசலில் உட்கார்ந்து குலச் சாட்டை பின்னிக் கொண்டிருந்தான். சந்திரனும் இன்னுமொரு புதிய ஆசாமியும் அவனைத் தேடிக் கொண்டு வந்தார்கள்.

"என்ன குலச், சௌக்கியமா?"

"இருக்கிறேன்; வா. உட்கார்..இவன் யார்?"

சந்திரனும் வந்தவனும் மோடாக்களில் உட்கார்ந்தார்கள். "உனக்கு இவரைத் தெரியவில்லையா? வாஸ்தவம்; உனக்குத் தெரியாது இவரை. ரொம்ப நாள் கழித்து கிராமத்துக்கு வந்திருக்கிறார், இவர் நம்முடைய மனிதர்தான். பஷீரத் என்று பெயர்."

குலச் அவரை நன்கு உற்றுப் பார்த்தான். முப்பத்தி மூன்று வயதிருக்கும் அவருக்கு. பழுப்பு நிறம்தான். ஒரு சின்ன தாடி வைத்திருந்தார். ஒரு புது வகையான சட்டையும் லுங்கியும் அணிந்திருந்தார்.

"இவரைப்பற்றி என்னவோ சொன்னாயே?" என்று கேட்டான் குலச். அவரை அவனுக்குத் தெரியவில்லை. அவரை அதற்குமுன் பார்த்த ஞாபகமும் இல்லை.

வந்த மனிதரே தன்னைப்பற்றிச் சொல்லிக் கொண்டார். "என்னை உமக்குத் தெரியாது. நானும் உம்மை இன்றுதான் பார்க்கிறேன். நான் ஊந்த ஊர்க்காரனும் இல்லை. பல நாட்களுக்கு முன் இங்கு இரண்டு வருஷம் தங்கியிருந்தேன். இப்போதெல்லாம் அடிக்கடி வருகிறேன். தொழில் செய்பவன்; ஆகவே அதிகநாள் ஒரே இடத்தில் இருக்க முடியாது என்னால்."

"இவர் பிஸினஸ் பண்ணுகிறார். பெரிய நல்ல காரியம் ஒன்றை ஆரம்பித்திருக்கிறார். நம்ம அஸாம்காரர்கள் பிஸினஸ் செய்வதே இல்லை. செய்தாலும் பிராப்பிட் வருவதில்லை. இவர் வேறு மாதிரி; டிஃப்ரெண்ட். அதாவது பிக் பிஸினஸ், பிக் பிராஃபிட்..." என்றான் சந்திரன்.

குலச் அவர் எதிரில் வெற்றிலைத் தட்டை வைத்தான். "இங்கே என்ன தொழில் செய்யப்போகிறார் இவர்?" என்று கேட்டான்.

பஷீரத் மிகவும் பெருமிதத்துடன், "குறுவையோ சம்பாவோ, விவசாயம் செய்வதற்கு எத்தனையோ பொருள்கள் தேவைப் படுகின்றனவே. நல்ல காளைகள் வேண்டும்; எருமைக்கிடா வேண்டும். உழவுக்கு வேண்டிய பல சாதனங்கள், இப்படி எவ்வளவோ தேவைப்படுகின்றன. இவ்வளவும் பணம் இருந்தால் தானே கிடைக்கும்? நம்முடைய குடியானவர்களிடம் எவ்வளவு பணம் இருக்கும் இதற்கெல்லாம்.." என்று விவரம் சொன்னார்.

"யாருக்காவது தேவைப்பட்டால், நம்ப பஷீரத் முன் பணம் கொடுப்பார். நல்ல விதைக்கு ஏற்பாடு செய்கிறார். மாடு வாங்க

முன் பணம் தருகிறார். அந்தப் பணத்திற்கு வட்டி வாங்குவதில்லை. கொஞ்சம் லாபம் சம்பாதிக்கிறார். அதையும் உடனே கேட்பதில்லை. அறுவடை முடிந்தபிறகு, வீட்டுக்கு நெல் வந்த பிறகு வாங்கிக் கொள்கிறார். சுருக்கமாகச் சொல்வதானால், இத்தனைநாள் மார்வாடிக்காரர்களும் பிஹாரிக்காரர்களும் பாஹியில் பாடுபடும் மக்களின் வயிற்றில் அடித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள் அல்லவா; அதற்கு பதிலாக நம்மைச் சேர்ந்தவரான பஸீரத் உதவியும் ஒத்தாசையும் செய்வார்." என்றான் சந்திரன். மேலும் தொடர்ந்து சந்திரன், "இந்தப் பணமெல்லாம் பஸீரத்தின் சொந்தப் பணம் இல்லை. அவருடைய முதலாளியின் பணம்; ஆனால் முதலாளிக்கும் மிகவும் சிநேகம். இவர் சொல்வதில் அவருக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு. பதினேழு பதினெட்டு வருஷங்களாக இவரும் முதலாளியும் சேர்ந்து தொழில் செய்து வருகிறார்கள்" என்றான்.

"எனக்கு வேறு எதுவுமே வேண்டாம்; ஒரு எருமைக்கிடா வாங்கவேண்டும். நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள்?" என்று கேட்டான் குலச்.

"இதோ பக்கத்தில்தான் இருக்கிறேன். தன்சிரி வழியாகப் படகில் வந்தேன். டாலிம் துறையில் ஆலமரத்தடியில்தான் என் படகைக் கட்டியிருக்கிறேன். கொஞ்சநாள் இருந்துவிட்டு மேலே போவேன்" என்றார் பஸீரத்.

அப்போதுதான் கபாஹியும் தராவும் வயலிலிருந்து திரும்பி வந்தனர். வெய்யிலில் உட்கார்ந்து நாற்றைப் பறித்ததால் இருவருடைய முகங்களும் சிவந்து கிடந்தன. தலையிலிருந்து வியர்வை வழிந்து கொண்டிருந்தது. அவர்களுடைய இடுப்பிலும் உடம்பு முழுவதிலும் சேறு அப்பிக் கிடந்தது.

வாசலில் யாரோ இருப்பதைப் பார்த்துவிட்டு, இருவரும் வீட்டின் பின்புறம் போய்விட்டனர். புருஷர்களை அவர்கள் பார்க்கவில்லை, ஆனால் பஸீரத் அவர்களைப் பார்த்துவிட்டார்.

"நான் வீட்டில் கலந்து யோசித்து, அவசியமிருந்தால் சந்திரனிடம் சொல்லி அனுப்புகிறேன்" என்றான் குலச்.

"ரொம்பச் சரி" என்றார் பஸீரத். "நாங்கள் போய் வருகிறோம்" என்று சொல்லிக்கொண்டு இருவரும் கிளம்பினார்கள்.

குளிப்பதற்காகத் துணி எடுத்துக் கொள்ள உள்ளே வந்தாள் கபாஹி. சுவர் ஓட்டை வழியாகத் தலையை நீட்டி பஸீரத்தைப் பார்த்தாள். சிறிது நேரம் கவனித்துப் பார்த்துவிட்டு அப்பால் போனாள்.

தரா யாரையும் கண்டு கொள்ளாமல் குளிக்கப் போய்விட்டாள். இப்பொழுது எல்லாம் அவர்கள் குளிப்பதற்கு ஆற்றுக்குப் போகும் அவசியம் இல்லை. வீட்டுக்கு அஸ்திவாரம் போடவும் சுவர் வைக்கவும் தோண்டியிருந்த பெரிய பள்ளத்தைச் சற்றே ஆழமும் அகலமும் ஆக்கிச் சீர்ப்படுத்தி ஒரு குட்டை போல் செய்திருந்தார்கள்; அதில் மழை ஜலம் நிறையத் தேங்கியிருந்தது.

இரவு சாப்பிடும் போது கபாஹி, "சந்திரனுடன் ஒருவன் வந்திருந்தானே அவன் யார்?" என்று கேட்டாள்.

"யாரோ பஸீரத்தாம்; தொழில் செய்கிறவராம். விவசாயம் செய்ய முன் பணம், விதை, முதலியவை தருவாராம். நான் ஒரு எருமைக்கிடா வாங்க விரும்புகிறேன்."

"சும்மா கொடுப்பாரா?"

"சும்மா எவன் கொடுப்பான்? விளைந்து அறுவடையானதும் திருப்பித்தர வேண்டும்; கொஞ்சம் சேர்த்துக் கொடுக்க வேண்டியிருக்கும்.."

"அவசியமில்லை; அது மாதிரியான கடனே வேண்டாம் நமக்கு. இன்னும் யாருக்காவது முதலில் கொடுக்கட்டும்; நாம் பின்னாடி வேண்டுமானால் வாங்கிக் கொள்ளலாம்."

"அப்படியென்றால் சரி.." என்றான் குலச்.

இதற்குப் பிறகு இருவரும் எந்த நிலத்தில் எந்தப் பயிர் நன்றாக வரும், எந்த நிலத்தில் எத்தனை சால் உழவேண்டும் என்றெல்லாம் பேசிக்கொண்டிருந்தனர்.

சில நாட்களுக்குப் பிறகு மறுபடியும் பஸீரத் வந்தான். அப்போது வீட்டில் குலச் இல்லை. கபாஹி, தரா இருவருமே இருந்தனர்.

பஸீரத்து கூப்பிட்டதற்கு உள்ளிருந்து பதிலே வரவில்லை. பிறகு கபாஹி சிறிது தயக்கத்துடன் வெளியே வந்தாள்.

"குலச் வீட்டில் இல்லையா? எங்கே போயிருக்கிறார்; எப்போது திரும்பி வருவார்?" என்று பல கேள்விகள் கேட்டான்.

"எனக்குத் தெரியாது" என்று பதில் சொன்னாள் கபாஹி.

"எருமைக்கிடா வாங்கவேண்டுமென்று சொன்னார்.."

"இப்போது தேவையில்லை, ஒரு ஜோடி காளை இருக்கிறது" என்றாள் கபாஹி.

"ஒரு ஜோடி மாட்டை வைத்துக்கொண்டு, புது நிலத்தில் பயிர் ஏற்ற முடியுமா?" என்று கேட்டான் பஸீரத்.

கபாஹி பதில் சொல்லவில்லை.

தாளும் கோரையும் ஒரேயடியாய் மண்டிக் கிடக்கும் வயலை, காளை மட்டும் உழுதால் போதுமா? எருமையை விட்டு ஒரு தடவை துவைக்கச் செய்தால், பிறகு உழுவது சுலபமாய் இருக்கும்... பணத்தை உடனே கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. அறுவடைக்குப் பிறகு கொடுத்தால் போதும்; இந்த வருஷம் இல்லாவிட்டால் அடுத்த வருஷம் கொடுத்தாலும் கவலை இல்லை. யார் எங்கே ஓடிப்போகிறார்கள்".

கபாஹி உள்ளே போய்த் தட்டில் வெற்றிலை பாக்கு கொண்டு வந்து வைத்தாள்.

பஸீரத் அவளை நன்றாக ஒரு தடவை பார்த்தான். அவளும் ஒருமுறை அவனை உற்றுப் பார்த்துவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டாள்.

பஸீரத் போகும்போது, "நான் பணம் கொடுத்துவிட்டுப் போகிறேன். ஒரு கிடா வாங்கிக் கொள்ளலாம்." என்றான். கபாஹி மெல்ல. "நாள் ஆகட்டும். நான் அவரிடம் சொல்கிறேன்" என்றாள்

நோட்டு குறிப்பு ஒன்றும் இல்லை. பஸீரத் குலச்சுக்கு ரொக்கமாக அறுபது ரூபாய் கொடுத்துச் சென்றான். முப்பத்தெட்டு ரூபாய்க்கு ஒரு மேற்கத்திக் கிடா வாங்கினான் குலச். அழகான பருமனான முரட்டுக்கிடா. அதன் இரண்டு கொம்புகளும் மிகவும் பெரியவை. குலச்சுக்கு அதிர்ஷ்டம் இருந்தால், எட்டு வருஷமோ பத்து வருஷமோ அது வேலை செய்யும். அதற்கு இன்னும் அதிக ஆயுள் உண்டு. எருமைக்கிடா வந்ததில் எல்லார்க்குமே மிகவும் சந்தோஷம்.

இப்போது குலச்சுக்குக் கிடா ஏரும் இருக்கிறது. வருஷக் கடைசியில் முதலோடு சேர்த்துப் பதினைந்து ரூபாய் கொடுக்கவேண்டும். நன்றாய் விளைந்து விட்டால் இது பிரமாதமில்லை.

இந்த வருஷம் ஐப்பசிக்குப் பிறகு இன்னும் கொஞ்சம் பண்படுத்தினால் சம்பாப் பயிர் அதிகம் செய்யவேண்டியிருக்கும். துவரை, கடுகு, காலிஃப்ளவர், கிழங்கு, விவசாயம். குலச்சின் எதிரே பச்சைப் பசுமைக் கனவுகளின் ஒளி தெரிந்தது. கபாஹியுடனும் தராவுடனும்தான் குலச்சின் வீட்டில் லக்ஷ்மி வந்தாள். நல்ல வளமான பொன்விளையும் பூமி. வருஷா வருஷம் ஆற்றின் வண்டல் படிந்து மேலும் வளப்பட்டிருந்தது. எங்கே எந்த விதையைப் போட்டாலும் பசுமையாய் வளர்ந்து மண்டி விடுகிறது. கொய்யா மரத்தில் சித்திரை மாதத்திலிருந்தே பழங்கள் பழுத்துவிட்டன. தின்று தின்று அலுத்துவிட்டது. இரண்டு பாத்தி, இஞ்சி போட்டார்கள்; அது அப்படியே பல்கிப் பெருகிவிட்டது. வெற்றிலைக் கொடியும் மிளகுக் கொடியும் வளர்ந்திருக்கின்றன. தினம் இரண்டு கைப்பிடி பறித்தாலும் குறையாமல் இருக்கின்றன. நல்ல வளர்ச்சி.

குலச் ஏதோ வெகுநாளாகக் குடித்தனம் நடத்திவருவது போலத் தோன்றுகிறது. அவன் வீட்டைப் பார்த்தால் தொலைவிலிருந்து தன் வீட்டைப் பார்க்கும்போதே குலச்சுக்கு சந்தோஷம் தாங்காது. கபாஹியும் தராவும் சும்மாவே இருப்பதில்லை. வீட்டிற்குள் வேலை இல்லையென்றால் தோட்டத்தில் ஏதாவது செய்து கொண்டுதான் இருப்பார்கள். வீட்டைச் சுற்றிலும் உள்ள தோட்டத்தில், எங்கு பார்த்தாலும் ஏதாவது பயிராகியிருக்கும். மா மரம், நாவல் மரம் போன்றவற்றை நல்ல ஜாதிச் செடிகளாகத் தேடிக் கொண்டு வந்து பயிராக்கியிருக்கிறார்கள். காலை முதல் அந்திவரை கேட்கும் இயந்திர ஓசை, தொலைவிலிருந்தே குலச்சை மகிழ்விக்கும். இரவின் கடைசி சாமத்தில் கோழி கூவுவதைக் கேட்க அவனுக்கு இனிமையாகவும், நன்றாகவும் இருக்கும். உடனே அவர்கள் மூவரும் எழுந்துவிடுவார்கள். விவசாய வேலையிலிருந்து ஓய்வு கிடைத்ததும், பெண்பிள்ளைகள் இருவரும் துணி நெய்ய ஆரம்பிப்பார்கள். இருவரும் வெவ்வேறு வகைத் துணியை நெய்வார்கள். தரா தான் நெய்யும் துணிகளில் பறவையின் நகர் போல் பூ வேலை செய்வது எல்லார்க்கும் பொறாமையை உண்டாக்கும். டாலிமில் இருக்கும்போதே எல்லாரும் அவள்

சிலந்தி நெசவுக்காரி என்று பரிகாசம் செய்வார்கள்; அவள் நெசவு மெல்லியதாகவும், இழை பிசகாமல் இருக்கும்.

தறியில் நெய்யும் சத்தமும், குலச்சை மிகவும் களிப்படைந்து குதிக்க வைக்கும்.

உயிர்த் துடிப்புடன் வாழும் ஒரு குடும்பம்; அவர்களைச் சுற்றிலும் பசுமையான, சுவை நிறைந்த வாழ்க்கை.

இவ்வளவும் இருந்தும் அந்தக் குடும்பத்தில் ஒன்று மட்டும் இருக்கவில்லை. அதுதான் தராவின் சிரிப்பு; அவளுடைய குரல். இப்பொழுதும் அவள் பேசா மடந்தையாகவே இருந்தாள். உள் வேலையோ, வெளி வேலையோ எல்லா வேலைகளையும் செய்கிறாள். சிறிது கூட ஓய்வு எடுப்பதில்லை. களைப்பதில்லை. சலிப்பதில்லை. ஆனால் தலைகுனிந்த வண்ணம் நடக்கிறாள். அவள் மனத்தில் தீராத வேதனையும் விம்மலும் நிறைந்திருக்கின்றன. கபாஹியும் குலச்சும் பேசிச்சிரித்துக் குலாவுகிறார்கள். தரா வாயே திறப்பதில்லை. அவள் அங்கு இருப்பதே தெரிவதில்லை. குடும்பத்தில் அவளும் இருப்பதாக யாரும் ஒப்புக்கொள்ளவே இல்லையோ என்னவோ. மகிழ்ச்சியோடிருக்க வேண்டிய எல்லாச் சாதனங்களும் இருந்தும் அவள் மகிழ்ச்சியடையவில்லை. அவள் மனம் முன்பிருந்ததைவிட இப்போது சற்றே திறந்திருந்தது. ஆனால் அவளுடைய உயிரின் மலர்ச்சி எங்கோ ஒளிந்து கொண்டு விட்டது.

வெளியுலகத்தை விட்டு விலகித் தன் உள்ளத்தின் உலகுடன் இணைய முயற்சி செய்கிறாளோ என்னவோ.

## இருபத்தொன்று

கிடாவில் மேல் ஏறிக்கொண்டு வயல்களைப் பார்த்துவிட்டு, குலச் ஆற்றின் கரைப் பக்கம் போய்க் கொண்டிருந்தான். கார்த்திகை மாதத்தின் மணம் வீசிக்கொண்டிருந்தது. இன்னும் பனி அடியோடு நீங்கவில்லை. எருமைக்குப் புல் அரிந்துபோடத் தேவையில்லை. தன்சிரியின் கரையில் புல்லுக்கா பஞ்சம்? முழங்கால் அளவு புல் திட்டுக்களில் தழைத்துக்கிடந்தது.

சிபரியா கிராமத்தின் தென்புறம், ஆற்றின் கரையிலேயே ஒரு காடு இருக்கிறது; டாலிம் கிராமத்துக்கு மேற்கே உள்ள காட்டைப்

போல இது இவ்வளவு பெரியதும் இல்லை; பயங்கரமானதும் இல்லை. சிபரியாக் காட்டில் யானைகள் வருவதில்லை; மான்களும் புலிகளுமே வரும். மான்களால் விளைநிலங்கள் நாசமாவது உண்டு; ஆனால் குலச்சின் நிலம் காட்டுக்குச் சற்றே தூரத்தில் இருக்கிறது.

எருமையை ஒரு திடலில் விட்டுவிட்டுக் காட்டின் பக்கம் போனான் குலச். பனித்துளிகளால் நனைந்திருந்த புற்களை அவனுக்கு மிகவும் பிடிக்கும். அவனுடைய உயிரின் ஓர் பக்கத்தில் காட்டின் மேல் இருக்கும் ஒரு ஆதிகாலத்து நட்பு ஒளிந்து கொண்டிருந்தது. காட்டின் ஈரமான மூச்சுக்காற்று அவனைக் கிளர்ச்சிபெற வைத்திருந்தது. காரணமே இல்லாத ஆனந்தத்தில் அவன் வழியோ சுவடோ பார்க்காமல் போய்க்கொண்டிருந்தான். இரண்டு பக்கங்களிலும் கோரைப்புற்கள், பனியால் அவற்றின் நுனிகள் தாழ்ந்துகிடந்தன.

பனியைச் சிதற அடித்துக்கொண்டு, வெள்ளை வெய்யில் மெல்ல மெல்லப் பரவத் தொடங்கியிருந்தது. உலகம் முழுவதும் வெய்யிலில் பளீர் என்று விளங்கும் இனிமேல். மரம் செடி கொடிகள் உயிர் பெற்று நிற்கும்.

சிறிது தூரம் சென்றதும் குலச்சுக்கு ஒரு குறுகிய பாதை தென்பட்டது. ஆற்றின் கரைவழியே வந்து, கோரைகளின் நடுவில் புகுந்து சிபரியா கிராமத்துப் பக்கம் வந்திருந்தான். மிகவும் குறுகலான பாதை. மாடுகள் நடந்து போயிருப்பதால், கோரைகள் மிதிபட்டு முறிந்து கிடந்தன.

மேற்கே போய்ச் சுற்றிவிட்டு, அந்தக் குறுகலான பாதை வழியாக ஆற்றை நோக்கிச் சில அடி தூரம் போனான்; எதிர்புறம் நோக்கித் தலையை உயர்த்தியபோது, அந்தப் பக்கத்திலிருந்து யாரோ வருவது தெரிந்தது. குலச் மேலே நடந்தான். வந்தது சேனிமாயி. அவனை இப்படிப்பார்த்து திடுக்கிட்டு அவளும் நின்று விட்டாள். ஒருவரை ஒருவர் பார்த்துகொண்டனர். இருவருமே கூச்சம் அடைந்தனர். மேலே கோரைப் புற்களின் நடுவிலான குறுகிய பாதை. அக்கம் பக்கத்தில் யாருமே இல்லை.

"நீ-நீ எங்கிருந்து வருகிறாய் சேனீ?" குலச் கேட்டான். "ஸர்பா கிராமத்து நாட்டாண்மைக்காரக் கிழவன் வீட்டுக்குப் போயிருந்தேன்."

"கிராமத்துக் கிழவன் வீட்டிற்கா? எதற்கு? அதிகாலையில் போயிருக்கிறாயே ஏன்?"

"ஐந்து ரூபாய்க்கு நெல் வாங்கியிருந்தேன்; அதைப் புடைத்துச் சலித்து வைத்துவிட்டு வந்தேன்; திகர் போய் அப்புறம் எடுத்துக்கொண்டு வருவான்-"

"உங்கள் வீட்டில் நெல் இல்லையா?"

"இருபது நாட்களுக்கு முன்பே நெல்லுக்குழி காலி; மணி நெல்கூட இல்லை" சிறிது நேரம் இருவரும் பேசவில்லை. "நீ இங்கே எங்கே போய்விட்டு வருகிறாய்?" என்று சேனிமாயி குலச்சைக் கேட்டாள்.

"எங்கேயும் இல்லை; எருமையை ஓட்டிக் கொண்டு வந்தேன்"

"நான் போகிறேன் குலச்; யாராவது வருவார்கள்-"

"சேனி..நான் சொல்வதைச் சற்றுக்கேள்.."

"என்ன-சொல்-"

"எல்லாமே தலைகீழாகப் போய்விட்டது; நீ என்ன பண்ணுவாய்.." அவள் பதிலே சொல்லாமல் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்

"எனக்கு எப்போதும் உன்னைப்பற்றிய நினைவேதான் சேனி"

"ஏன் கபாஹி உன் மேல் ஆசையாய் இல்லையா?"

"ரொம்பப் பிரியமாகத்தான் இருக்கிறாள்; ஆனாலும் அடிக்கடி உன்னைப் பற்றிய ஞாபகம் வந்து கொண்டே இருக்கிறது. அதோடு உனக்குக் கேலாயியோடு வேறு கல்யாணம் ஆகியிருக்கிறது.."

அதைப் பற்றி மேலும் பேசாதே குலச்; எப்படி விதி இருந்ததோ அப்படி ஆகியிருக்கிறது; நீங்களெல்லாம் நன்றாயிருந்தால், அதுதான் என் நலமும் மங்களமும்.. என்று சொல்லிவிட்டு அவள் போய்விட்டாள். அவன் என்னவோ சொல்ல விரும்பினானே தவிர, சொல்ல முடியவில்லை. அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

சிறிது தூரம் சென்றபின் சேனிமாயி நின்று திரும்பி பார்த்து, "இதைக் கொஞ்சம் கேளேன்.." என்றாள்.

குலச் அவள் அருகில் சென்றான். "என்ன சேனி- ஏன்..?"

"என் சிற்றப்பனும் அப்பனும் சேர்ந்து, இந்தச் சாவாடு செத்தவனுக்கு என்னைக் கட்டிக்கொடுத்து, என்னை இப்படிச் சதி செய்துவிட்டார்கள்; அவனுடன் கல்யாணம் ஆனது ஒன்றுதான் மிச்சம்; அவன் என்று கண்ணை மூடுவானோ சொல்ல முடியாது; நான் கூலி இல்லாத வேலைக்காரி கிடைத்திருக்கிறேன் அவர்களுக்கு.

அவனைப் பார்த்துக்கொள்ள வேண்டும். வீட்டையும் கவனித்துக்கொள்ளவேண்டும். இப்போது கையில் கூடையும் முறமும் எடுத்துக்கொண்டு, ஊர்ஊராக நெல்லைத் தேடிக் கொண்டு அலைய வேண்டும். என்னால் இனிமேலும் இந்த வேலைகளைச் செய்ய முடியாது. சமயத்தை எதிர்பார்த்து கொண்டிருக்கிறேன். தன்சிரிக்குப் போகும் வழியைத் தெரிந்து வைத்திருக்கிறேன். ஒருநாள் இன்னவள், இன்னார் மனைவி ஆற்றில் குதித்து விட்டாள் என்று கேள்விப்படுவாய். நான் உன்னிடம் இதைச் சொல்லி வைக்கிறேன் இப்போதே.."

அவள் பேசியதைக் கேட்டு குலச் பயந்துவிட்டான். தான் தற்கொலை செய்து கொள்வதாகச் சொல்கிறாளே; இந்த நிலையில் அவனால் தான் என்ன செய்ய முடியும்? "இப்படியெல்லாம் கோபப்படுவதால் ஒரு பயனும் இல்லை; நான் பக்கத்தில்தான் இருக்கிறேன்; நீ தவறாக நினைக்கவில்லை யென்றால் அடிக்கடி நான் வந்து உன்னை விசாரித்துக் கொள்கிறேன்.." என்றான் குலச்.

அவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள். "உனக்கு ஒரு குடும்பம் இருக்கிறதே குலச்?"

"அதற்காக உன்னை வந்து பார்த்து விசாரிக்கக்கூடாதா என்ன? மற்றவர்கள் வேறுவிதமாய் நினைக்காமல் இருக்க வேண்டுமே.."

"யார் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளட்டுமே. என்னிடம் உனக்கு சிநேகமும் பாசமும் இருக்குமானால் அவ்வப்போது என் வீட்டுக்கு வரவேண்டும் நீ. இல்லையென்றால் என்னால் இதுபோலவே பல நாள் உயிர் வாழ முடியாது.."

"சரி, அப்படியே செய்கிறேன்; நீ கவலைப்படாதே; போ.." என்றான் குலச்.

சேனிமாயி மன நிம்மதியுடனும் நம்பிக்கையுடனும் வீட்டுக்குப் போனாள். குலச்சுக்கு இன்னும் தன்னிடம் அன்பு இருக்கிறது.

குலச் சிறிது நேரம் அங்கேயே நின்று அவள் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் இப்போதும் முன்போலவே இருக்கிறாள். கல்யாணம் என்று ஆனது பெயருக்குத்தான். அவளுடைய புருஷன் நோயாளி. குலச் மிகவும் வருத்தப்பட்டான்.

அவன் கோரைகள் வழியாய்த் தன் வீட்டுக்குப் போனான். அப்போது வெய்யில் நன்றாகப் பரவிட்டது. காற்றும் வீசிற்று. குலச்சுக்குச் சேனிமாயி ஞாபகம் போய்விட்டது. வானத்தைப் பார்த்தான்; ஆழமான நீல வானம், ஒரு துளி மேகமும் இல்லை. தொலைவில் வானம் வளைந்து பூமியைத் தொட்டுக் கொண்டிருந்தது. வழியோ சுவடோ இல்லை. குலச் தானாகவே ஒரு வழி ஏற்படுத்திக் கொண்டு சென்றான். அவன் நடுவில் திடுக்கிட்டு நின்றான். கோரைகளுக்கிடையில் தரா.

"தரா..." என்று கூப்பிட்டான். அவள் நின்றாள். அவள் இந்த வழியாக எங்கே போகிறாள்? எங்கிருந்து வருகிறாள். இது வழியே இல்லையே. தரா அவன் எதிரில் வந்துவிட்டாள்.

"நீ எங்கே புறப்பட்டாய்?"

"சந்திரன் வந்தான்; உங்களைப் பார்க்க வேண்டும் என்றான்."

"நான் இங்கே இருப்பது உனக்கு எப்படித் தெரியும்?"

அவள் பதில் சொல்லவில்லை. குலச் அவளுடைய தோளில் கையை வைத்துக்கொண்டு, "நிஜமாகவே சந்திரன் வந்திருக்கிறானா?" என்று கேட்டான். அவள் அதற்கு பதில் சொல்லவில்லை.

"நீ ஏன் என்னிடம் முன்போலப் பேசுவதில்லை?" என்று கொஞ்சினான் குலச் சற்றே தழுதழுத்த குரலில். "நீங்கள்..நீங்கள் ஏன் என்னை ஏமாற்றினீர்கள்?" என்றாள் தரா.

குலச்சால் பதில் சொல்ல முடியவில்லை. அவனால் தராவை ஏமாற்ற முடியுமா? ஆனால் அவளுக்கு அது ஏன், அப்படி நடந்ததென்று உணர்த்தவும் முடியாது. அது அவனுக்கே இன்றுவரை தெரியாது; ஆகவே அவள் கேள்விக்கு விடையே இல்லை.

"வீட்டில் உன் சித்தி இல்லையா?"

"இல்லை, சிபரியாவுக்குப் போயிருக்கிறாள்; யார் வீட்டிலோ ஜாதிச் சேவல் இருக்கிறதாம். பார்க்கப் போயிருக்கிறாள்."

குலச் தன் காலாலேயே கோரைகளை மிதித்துத் தரையை இடம் செய்து, "வா, இங்கே கொஞ்சம் நேரம் உட்கார். பேசுவோம்." "வேண்டாம்...யாராவது வருவார்கள்."

"இது பாதை இல்லை; யாரும் வரமாட்டார்கள். சுற்றிலும் கோரை. நாம் இருப்பதையும் பிறர் பார்க்க முடியாது."

மடக்கிய கோரைகளின் மீது இருவரும் உட்கார்ந்தார்கள்.

"வீட்டில் நீ எப்போது பார்த்தாலும் பேசாமடந்தையாய், துக்கத்துடன் இருப்பதைப் பார்க்கும்போது, எனக்கு மிகவும் கஷ்டமாயிருக்கிறது" என்றான் குலச்.

"ஆமாம்; நீங்கள் இரண்டு பேரும் சிரித்து வேடிக்கை செய்து கொண்டு குலாவுகிறீர்கள்; நான் எந்த மகிழ்ச்சியில் அப்படி இருக்க முடியும்?"

"எனக்கு அழுதுகொண்டிருப்பது பிடிக்காது. வீட்டிற்குள் இருக்கவும் எனக்குப் பிடிக்கவில்லை. நீ என்ன நினைக்கிறாயோ எனக்கு அதுவும் தெரியவில்லை.." என்று சொல்லி அவளுடைய கையைத் தன் கைமீது வைத்து, "முன்புபோல் நீ இல்லை; இளைத்திருக்கிறாயே?" என்று கேட்டான். அவள் பேசாமல் உட்கார்ந்திருந்தாள்.

"உனக்கு என்மேல் முன்பிருந்த அன்பெல்லாம் அறவே போய்விட்டதா தரா?"

"அன்பு இல்லாவிட்டால் உன் வீட்டில் காலைக்கூட எடுத்து வைத்திருக்கமாட்டேன். நீதான் என் மீதிருந்த அன்பை மறந்து விட்டாய். அதனால் நானும் மறந்துவிட்டேன் என்று அர்த்த மாகுமா?" அவளுடைய கைகளையும் பிடித்துத் தன்பக்கம் இழுத்துத் தழுவிக் கொண்டான். அவளும் அவனுடன் தழுவி ஒட்டிக்கொண்டாள்.

சிறிது நேரம் கழித்து இருவரும் எழுந்தனர். "நீ வீட்டுக்குப் போ; நான் எருமையை ஓட்டிக் கொண்டு வருகிறேன்" என்றான்.

தரா மீண்டும் ஒரு முறை அவனை மார்புடன் தழுவிக் கொண்டாள். தான் வந்த வழியே திரும்பவும் சென்றாள்.

எருமையைத் தேடி, அதன் மூக்கணாங்கயிற்றைப்பிடித்து இழுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தான் குலச். கார்த்திகை மாதத்துச் சூரியன் உச்சிக்கு வந்திருந்தான். ஆகாயத்தின் கர்ப்பத்திலிருந்து வெள்ளை வெளேர் என்ற வெய்யில் சிறு தடையும் இல்லாமல் பூமி மேல் விழுந்து கொண்டிருந்தது.

தன் வயலுக்கு ஒரு கோடியில் நின்று கொண்டு, மிகவும் ஏகாந்தமாய் காற்றில் அழகாக அசைந்தாடும் பசுமையான நெற்பயிரைப் பார்த்தான்; அவை முற்றி வருகின்றன. ஒவ்வொரு பயிரும் நன்றாகப் பிடித்து வளர்ந்திருக்கிறது. கதிர்களில் இன்னும் கருவைக்கவில்லை; பால் பிடித்திருக்கிறது இப்போதுதான். அவன் மனம் வெற்றிக் களிப்பில் ஆழ்ந்தது. ஆற்றின் கரைவரை நீண்டு கிடக்கும் நிலத்துக்கு அவன் சொந்தக்காரன். அடுத்த வருஷம் இன்னும் கொஞ்சம் நிலம் இரண்டு மா நிலமாவது திருத்திச் சாகுபடிக்குக் கொண்டுவந்துவிட்டால், கவலையே இல்லை. இந்த வருஷம் அவனுடைய காளைகள் சும்மாதான் கிடக்கும். ஒற்றை ஏர் எருமையும் காளையும் எப்படிச் சேர்ந்து வேலை செய்ய முடியும். பல விஷயங்களைப்பற்றி யோசித்து மகிழ்ந்த வண்ணமே மெதுவாக வீட்டுக்கு வந்தான். கபாஹியும் அப்போது வீட்டிற்கு வந்து விட்டிருந்தாள்.

## இருபத்திரண்டு

தன்சிரியில் இன்னுமொரு வெள்ளம் வந்தது; பெரிய வெள்ளம் இல்லை. இந்த வருஷம் குலச் மேலும் இரண்டு மா திருத்தி விட்டான். ஏற்கனவே இருந்த நிலத்திற்கும் சந்திரன் மூலமாகப் பட்டா வாங்கிவிட்டான். அவனுக்கு வாத்துக்களும் கோழிகளும் நிறைய ஆகியிருந்தன. அவன் புதிய ஊக்கத்துடனும் புதிய நம்பிக்கையுடனும் உழைத்தான். இதுதான் சமயம்.. அவனுக்கு நல்ல வாலிப வயது. இருபத்தாறு வயதுக்காளை. இப்போது உழைக்காமல் பின் எப்போது உழைப்பது.

கபாஹியும் தராவும் சும்மா இருக்கவில்லை. அடுத்தடுத்துத் துணிகள் நெய்து விற்றனர். கறிகாய்ப் பயிர்க்குழிகள் போட்டு வளர்த்துக் காய்களை விற்றும், தம்மால் எவ்வளவு முடியுமோ அத்தனை பணம், நாலைந்து ரூபாய் சம்பாதித்தனர்.

தரா முன்போலவே எதிலும் பட்டுக் கொள்ளாமலேயே இருந்தாள். முன்போலவே பேசுவதில்லை. சிரிப்பதில்லை; வேடிக்கை விநோதம் ஒன்றுமே கிடையாது. சில சமயம் கபாஹி எங்காவது வெளியே போகும் நேரங்களில், தராவும் குலச்சும் வீட்டில் இருப்பார்கள். எப்பொழுதும் அவள் பேசா மடந்தையாகவே இருப்பாள். பக்கத்தில் வந்து குலச் தன் அன்பைக் காட்ட முயன்றால் அவள் ஒதுங்கிப் போவாள். "இப்படியேதான் ஆசையைக் காட்டமுடியும்; வேறு ஒன்றும் செய்துவிடக் கூடாது" என்பாள் தரா./ அவனும் வீட்டிற்குள் விரும்பத்தகாத செயல் எதையும் செய்ததில்லை. முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு துயரப்படும் தராவிடம், கையையும் முகத்தையும் தொட்டும் தடவியும் அன்பைக் காட்டுவதைத் தவிர, வேறு என்ன செய்ய முடியும்? தன் ஆசையை அவனுக்கு வாய்விட்டு சொல்லத் தெரியவில்லை./

திகர் இப்போதெல்லாம் குலச்சின் வீட்டுக்குத் தினம் காலை நேரத்தில் வருகிறான். தரா அவனுடன் அதிகம் பேசுவதில்லை. அவசியம் நேர்ந்தால் ஓரிரண்டு வார்த்தை பேசுவாள் அவ்வளவுதான். கபாஹியுடன் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போவான் திகர். அவன் வருவது, போவது, பேசுவது முதலியவற்றிலிருந்து கபாஹிக்கு ஒரு விஷயம் நன்றாக விளங்கியிருந்தது. அதாவது திகருக்குத் தராவின் பக்கம் மனம் ஓடுகிறது என்பதுதான். அவன் இந்த வீட்டுக்கு வரும்போது, சற்றே அலங்காரங்கள் செய்து கொண்டு வருகிறான். வகிடு எடுத்துத் தலையை வாரிக்கொள்கிறான். சட்டை அணிந்து வருகிறான். சட்டைப் பையில் வர்ணக் கைக்குட்டையின் நுனி மேலே தெரியும்படி வைத்துக் கொள்கிறான்.| அவன் தன் கருத்தை இன்னும் வெளியிட்டுச் சொல்லவில்லை. கபாஹியுடன் விவசாயம் பற்றிச் சாதாரணமாகப் பேசுவான். மாடு கன்று தோட்டம் துரவுகளைப் பற்றியும் பேசுகிறான் பொதுவாக.

குலச் தன் வீட்டுக்கு வருகிறான் அவ்வப்போது. சேனிமாயிடம் பேசிக் கொண்டிருக்கிறான். கேலாயியோடும் பேசுகிறான். சேனிமாயி அடிக்கடி குலச்சின் வீட்டுக்குப் போகிறாள். தன் எண்ணத்தைத் தன் அண்ணியான சேனிமாயிடம் சொன்னால், அவள் கபாஹியுடனும் குலச்சுடனும் கலந்து பேசி, அவர்கள் கருத்தைத் தெரிந்து கொள்ள முடியுமே என்பது அவன் எண்ணம். ஆனால் அதை அவன் அண்ணியிடம் எடுத்துச் சொல்லவும்

தைரியமில்லை. அவள் ஏதாவது விபரீதமாய்ச் செய்துவிடக் கூடாதே. மேலும் சேனிமாயி கேலாயியைக் கல்யாணம் செய்து கொண்டு சுகப்படவில்லை என்பது அவனுக்குத் தெரியும். இந்த வீட்டில் அவள் வேறு வழியில்லாமல் நிர்பந்தத்தால்தான் இருக்கிறாள். அதனால் அவள் திகருக்காக ஏதாவது செய்வாள் என்று அவ்வளவாக எதிர்பார்க்க முடியாது.

திகர் எதற்கும் காத்திருக்கத் தயார். அவளைக் கட்டிக் கொள்ளத் தடையாக எதுவும் இல்லை தராவுக்கு. அவளுடன் பேசுவதற்குச் சந்தர்ப்பம் நேர்ந்தால், இதை எடுத்துச் சொல்லி அவனுடன் அவளை ஓடிப்போகச் செய்யவும் முடியும் அவனால்; இன்னும் அப்படிப்பட்ட சந்தர்ப்பம் நேரவில்லை.

போன சித்திரை மாதம் பஸீரத் வந்திருந்தான். குலச்சின் விவசாயத்தைப் பற்றியும் லாப நஷ்டங்களைப்பற்றியும் விசாரித்துவிட்டுப் போனான். பஸீரத் கேட்காமலேயே பத்து ரூபாய் பணம் கொடுத்தான் குலச். மீதிப் பணத்தை அடுத்த வருஷம் கொடுத்து விடுவதாகச் சொன்னான். கிடா வாங்க உதவி செய்வதற்காக பஸீரத்துக்கு அவன் மிகவும் நன்றி தெரிவித்தான். சிறிது நேரம் வேறு விஷயங்களைப் பற்றிப் பேசிவிட்டு பஸீரத் விடைபெற்றான். பஸீரத் தன்சிரியின் தலைப்புக்கெதிரில் தனக்கொரு வீடு கட்டியிருக்கிறான். அவனுக்குச் சொந்தமாய் ஒருவரும் இல்லை. முதலாளியுடன் சேர்ந்து ரொக்க வியாபாரம் செய்து, கொஞ்சம் சொத்து சேர்த்திருந்தான்; ஆனால் இன்னும் அவன் திருமணம் செய்துகொள்ளவில்லை. அவனுக்கு முப்பத்தைந்து வயது ஆகிவிட்டது. "நீங்களும் அவசியம் கல்யாணம் செய்து கொள்ளத்தான் வேண்டும்" என்றான் குலச். பஸீரத் பதில் சொல்லாமல் சிரித்தான்; குலச்சுக்கு அதன் பொருள் புரியவில்லை. அவன் அதைப்புரிந்து கொள்ள முயலவும் இல்லை. சில பேர் ஏனோ கல்யாணம் பண்ணிக் கொள்ளாமலேயே இருக்கிறார்கள்.

ஒரு நாள் சந்திரன் வந்து, "உன் அப்பாவின் நோய் மிகவும் அதிகமாகியிருக்கிறது. அநேகமாய் பிழைக்கமாட்டார்; மிகவும் ஸீரியஸ்; நீ போய் ஒரு தடவைபார்த்துவிட்டு வா" என்று சேதி சொல்லி அறிவுரையும் தந்தான்.

கபாஹி சிறுசிறு மூட்டைகளாக அரிசி, முறுக்கு, உளுத்தம்பருப்பு, தித்திக்கும் உருளைக் கிழங்கு முதலியவற்றை

முடிந்து. அவன் முன்னே நீட்டிக் கொண்டு, "இவருக்கு அப்பாவை விட இவருடைய அகங்காரம்தாம் பெரிதாகி இருக்கிறது; அவர் உயிருடன் இருக்கும்போது போய் பார்க்காவிட்டால், அப்புறம் மூத்த அண்ணன் சொத்தில் பங்கு தரமாட்டானே? நீங்கள் போக மாட்டீர்களா?" என்று சொன்னாள்.

முடிச்சுகளைத் தோளின் ஒருபுறம் போட்டுக்கொண்டு, வெட்கத்துடனும் கூச்சத்துடனும் குலச் டாலிமை நோக்கிப் புறப்பட்டான்.

அவன் தந்தைக்கு அப்பொழுது பேசும் தெம்பு இருக்கவில்லை; என்றாலும் தன் இளையமகன் வருவதைப் பார்த்து அவர் முகம் மலர்ந்தது.

தந்தை இறந்து போய்விட்டார். குலச்சும் அவன் அண்ணனும் ரொம்ப அழுதார்கள். அவர்களுடைய தாயாரும் அழுதாள்.

இறந்துபோனவருக்கு மூன்றாம் நாள் ஈமக்கடன் ஆற்றி முடிந்தபின், ஊர்க்காரர்கள் கூடிப் பேசினார்கள். இப்போதைக்குக் கிழவனுடைய சொத்தைப் பிரித்துக்கொள்ள வேண்டாம். அது பொதுவாகவே இருக்கட்டும். குலச்சுக்கு பாஹியில் கொஞ்சம் நிலம் ஏற்பட்டிருக்கிறது. அதனால் இப்போதைக்கு அவன் பாகம் கேட்க வேண்டாம். கிழவன் கிடந்தபோது பெரியவன் வைத்தியத்திற்காக நிறையவே செலவு செய்திருக்கிறான். பின்னால் பிள்ளைகள் இருவரும் பாகம் பிரித்துக் கொள்ளட்டும். குலச்சும் இதற்கு அடக்கமாக சம்மதித்தான். தன் தகப்பனாருக்கு அவர் உயிருடன் இருக்கும்போது, தொண்டு பணிகள் செய்ய முடியாமல் போனதுபற்றி வருத்தம்; ஆகவே அவருக்காகச் சடங்குகள் செய்ய பதினைந்து ரூபாய் கொடுத்தான். டாலிம்காரர்களுக்கு குலச் முற்றிலும் புதியவனாக மாறியிருந்தான். இன்றைக்கு அவனால் இவ்வளவு ரூபாய் கொடுக்க முடிகிறதே. அவன் முகத்தைப் பார்த்தாலே தெரிகிறது. குலச் மிகவும் மலர்ச்சியும் பெருமிதமும் பெற்றிருந்தான்.

கருமாதி எல்லாம் முடிந்த பிறகு கிராமத்துப் பெரியவர்கள் கூடி குலச்சின் தந்தை சேர்த்து வைத்திருந்த பணத்தைக் கணக்கெடுத்தனர். ரொக்கம் நூற்று நாற்பது ரூபாய் தேறிற்று. அவர் இத்தனை ரூபாய் சேர்த்து வைத்திருந்தது பலருக்குப் பெரிய ஆச்சரியமாயிருந்தது. பலருடைய ஆலோசனைப்படி அதில் நூறு

ரூபாய் கிழவிக்கு. குலச்சின் தாயாருக்குக் கொடுக்கப்பட்டது. அவளைக் கடைசி காலத்தில் வைத்துக் காப்பாற்றுபவன் இந்தப் பணத்தை அடைவான். கிழவி தனக்கென்று இப்போது நகையா செய்து கொள்ளப்போகிறாள். பாக்கியில் குலச்சுக்கு இருபது ரூபாய் கொடுக்கப்பட்டது. பெரியவனுக்கு இருபது ரூபாய், பதின்மூன்று ரூபாய் பெரிய மருமகளுக்கு. அவள் கிழவருக்கு மிகவும் பணி செய்திருக்கிறாள்.|| அப்பொழுது குலச்சின் தாயார் சொன்னாள். "ஊரார்கள் முன்னிலையில் நானும் ஒன்று சொல்லிக் கொள்கிறேன். என் எஜமானர் போய்விட்டார்; நான் இன்னும் எத்தனை நாள் இருக்கப் போகிறேன்! என் மூத்த மருமகளை நானே பார்த்துக் கேட்டு என் மகனுக்குக் கல்யாணம் செய்து கொண்டேன்; இவளுக்கு நான் ஒன்றுமே செய்யவில்லை. சின்னவன் மனைவியை இன்னும் நான் கண்ணால் கூடப் பார்க்கவில்லை. இனிமேல் நான் நகை போட்டுக் கொள்ளப்போவதில்லை. என்னுடைய அட்டிகையும் மணிமாலையும் கல் பதித்த இரண்டு மோதிரமும் இருக்கின்றன. மணிமாலை என் எஜமான் வாங்கிக் கொடுத்தது; அதை என் உயிருள்ளவரையில் நான் கழற்றப் போவதில்லை. மோதிரங்களில் ஒன்றைப் பெரிய மருமகளுக்கும் மற்றதைச் சின்னப்பிள்ளைக்கும் தருகிறேன். இந்த அட்டிகையை என் சின்ன மருமகளுக்குக் கொடுக்கிறேன். அவள் கல்யாணத் திற்குக்கூட நான் ஒன்றும் செய்யவில்லை."

அட்டிகை மோதிரம்; இருபது ரூபாய் பணம்; கருமாதிக் கடலை; தேங்காய் ஆகியவற்றுடன் குலச் வீட்டுக்கு வந்தான். இதற்குள் கபாஹிக்கு சேதி தெரியும். கிழவனுக்காக அவள் அழ வேண்டிய தேவையில்லை. இருந்தாலும் இரண்டொரு வார்த்தைச் சொல்லி ஆறுதல் கூறுவதற்காக ஏதோ அநுதாபத்துடன் பேசினாள். குலச்சுக்கு உண்மையிலேயே துக்கம்தான்; ஆனாலும் பெண் பிள்ளைகள் போல் அழுவதும் பிடிக்கவில்லை. கட்டியிருந்த எருமையை அவிழ்த்துக் கொண்டு ஆற்றின் பக்கம் போனான்; அங்கே சின்னக் குழந்தையைப் போல் அழுதுவிட்டான். அப்பா இல்லாமல் இருப்பதென்றால் என்னவென்பது அன்றுதான் புரிந்தது.|| அவன் வீட்டுக்கு வந்ததும் அவனுடைய முகத்தைப் பார்த்தே அவன் அழுதுவிட்டு வந்திருப்பதைத் தரா தெரிந்து கொண்டாள்.

இரவு எல்லாரும் தூங்கிவிட்டார்கள். இப்போதெல்லாம் அவர்கள் மூவருமே தனித்தனிப் படுக்கையில் படுத்துக்

கொள்கிறார்கள். எப்போதாவது விருந்தாளி வந்தால்தான் குலச் வந்து கபாஹியின் படுக்கையில் படுத்துக் கொள்வான். தராவுக்கு அறையும் தனி; படுக்கையும் தனி. இரவு அதிகம் ஆகவில்லை; இருந்தாலும் பகல் பூராவும் உழைத்த பிறகு, இரவில் படுக்கையில் படுத்ததுமே கபாஹி தூங்கிவிடுகிறாள். வழக்கம்போல இன்றும் இவள் நன்றாய் அயர்ந்து தூங்கிவிட்டாள்.

தரா மிகவும் ஜாக்கிரதையாகத் தன் படுக்கையிலிருந்து எழுந்து வந்தாள். அரிக்கன் அணைந்து போயிருந்தது. இருட்டிலேயே வந்து குலச்சின் படுக்கை அருகில் நின்று மெல்லத் தன் கையால், தூங்கும் குலச்சின் உடம்பைத் தொட்டாள். குலச்சுக்குத் தூக்கம் வரவில்லை. விழித்துக் கொண்டுதான் இருந்தான். அவனும் அவள் கைமேல் தன் கையை வைத்தான். அது கபாஹியின் கை இல்லை; தராவினுடைய கை தான் என்று அவன் தெரிந்து கொண்டான்.

"தரா.." என்றான்.

"சத்தம் போடாதே."

"எங்கே வந்தாய்? தூக்கம் வரவில்லையா?" குலச்சின் அந்த ரகசியக் குரலில் அழுகையின் ஈரம் இருந்தது.

அவன் தலையைக் கோதிவிட்டாள், மௌனமான முகத்தையும் கண்ணையும் தடவிக்கொண்டு, அன்பு கசியும் குரலில், "ஏன் அழுகிறாய்? இன்று பூராவுமே நீ அழுதிருக்கிறாய் அல்லவா? ரொம்பவும் துக்கமாய் இருக்கிறதா?"

ஒன்றுமறியாத அநாதைக் குழந்தையைப் போல் குலச் அவளுடைய மடியில் தலையைச் சாய்த்துக் கொண்டான். தரா அவன் தலையைக் கோதிக் கொண்டும், முதுகிலும் மார்பிலும் தடவிக் கொடுத்தும் ஆறுதல் தந்தாள். இவள் தரா இல்லை; என் அன்புத் தாயாரே இவள் என்று நினைத்தான். இன்னும் அதிகமாய் அழுகை வந்தது. இதே நிலையில் சிறிது நேரம் சென்றது.

அவன் முகத்திற்கருகில் தன் முகத்தைக் கொண்டு வந்து, மிகவும் மெல்லிய குரலில், "நீ துக்கப்படுவதைப் பார்த்தால் எனக்கு மிகவும் கஷ்டமாயிருக்கிறது; இனிமேல் இப்படி அழக்கூடாது.." என்றாள் தரா.

குலச் துணையற்றவன் போல் தன் மேல் குனிந்து உட்கார்ந்திருந்த தராவின் கழுத்தைக் கட்டிக் கொண்டான்.

அவனுக்கு எத்தகைய துணையும் இல்லைபோலும்; அவன் தனக்கு நிம்மதி தரும் புகலிடத்தைத் தேடுகிறான் போலும்.

"நான் தான் இருக்கிறேனே. நீ ஏன் கவலைப்பட்டு வருந்த வேண்டும்?" என்றாள் தரா.

அவளைப் பக்கத்தில் இழுத்துக் கொண்டு அவள் கன்னத்துடன் தன் கன்னத்தைப் புதைத்துக் கொண்டான். நெருக்கத்தின் உயர்ந்த நம்பிக்கையுடனும் சிநேகத்துடனும் அவனுடைய துக்கத்தை மறக்கச் செய்தாள் தரா.

அதே நேரத்தில் அடுத்த அறையில் கபாஹி ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தாள். கட்டிலிலிருந்து கீழே இறங்கி நின்று அவனுடைய கன்னத்தில் மிகுந்த அன்போடு தன் கன்னத்தை தேய்த்து. "இனிமேலும் நீ துக்கப்பட்டால் நான் அழுதுவிடுவேன்" என்றாள் தரா.

தரா தன் படுக்கைக்குத் திரும்பினாள்.

குலச் ஒரு சிறிய குழந்தை; அறியாப் பாலகன்; இப்படி அவனைத் தேற்றாவிட்டால் அவன் அழுதுகொண்டே இருப்பான், என்று நினைத்துக்கொண்டாள் தரா.

மறுநாள் அட்டிகையைக் கபாஹியிடம் கொடுத்து, "என் தாயார் இதை உனக்குக் கொடுத்தனுப்பியிருக்கிறாள்" என்றான் குலச். உடனே அதை வாங்கி அணிந்துகொண்ட கபாஹிக்கு மகிழ்ச்சி பொங்கிற்று.

"இந்தாம்மா, தரா, நீ இங்கே வா.." என்று அழைத்தான் குலச்.

தரா தலை குனிந்துகொண்டே வந்து அவனருகில் நின்றாள்.

"இந்தா, இந்த மோதிரம் உனக்கு எந்த விரலுக்குச் சேர்கிறது பார்; இதை என் அம்மா எனக்குக் கொடுத்தாள்; நான் இதை என்ன பண்ணப் போகிறேன்.."

தரா மோதிரத்தை வாங்கி அணிந்து கொண்டாள்.

"உன் சித்திக்குக் காட்டு.." என்றான் குலச்.

குலச்சுக்கு மிகவும் சந்தோஷம். குடும்பத்தின் வாரிசுகள் என்ற வகையில் இருவருக்கும் இரண்டு நகைகள் கிடைத்திருக்கின்றன. "சில நாட்களில் அம்மாவை அழைத்து வரப்போகிறேன்" என்றான்.

கபாஹி இதைச் சாதாரணமாகவே கேட்டுக் கொண்டாள். தரா பேசாமல் போய்விட்டாள்.

## இருபத்து மூன்று

கபாஹியுடன் கலந்து ஆலோசித்துப் பேச சந்தர்ப்பமே இல்லாமல் ஒரு நாள் குலச் கன்றுடன் ஒரு கறவை எருமையை முப்பத்து மூன்று ரூபாய் விலைகொடுத்து வாங்கி வந்தான். தன்னைக் கேட்காமல் இவ்வளவு பெரிய தொகையைச் செலவு செய்தது பற்றிக் கபாஹி கொஞ்சம் ஆத்திரப்பட்டாள். "ஒரு எருமை மாடு வாங்கக்கூட உன்னைக் கேட்டுக் கொண்டுதான் நான் செய்யவேண்டுமா? கன்றும் மாடும் ஐம்பத்தி மூன்று ரூபாய் கொடுத்தாலும் கிடைக்காது. அவனுக்கு ஏதோ முடை; மாட்டுச் சொந்தக்காரன் இத்தனை குறைந்த விலையில் கொடுத்து விட்டான். நமக்கு முப்பது ரூபாய்க்கு மேல் லாபம் இருக்கிறது இதில்" என்றான் குலச்.

கபாஹியும் விஷயத்தைப் புரிந்து கொண்டாள். "பசு எருமை எல்லாவற்றையும் என் தலையில் கட்டிவிட்டு, நீ தன்சிரியின் கரையில் ஜல ஸ்தம்ப யோக சாதனையில் ஈடுபட்டு விடாமல் இருந்தால் அதுவே போதும். நான் எது எதைத்தான் கவனிப்பேன்."

"வீட்டு வேலையை நான் சமாளித்துக் கொள்கிறேன்" என்றாள் தரா சாதாரணமாக.

"ஆமாம்; நீ வீட்டிற்குள் சுகமாக இரு; நான் மாடுகளைக் கட்டிக் கொண்டு காட்டில் சுற்றுகிறேன். இங்கே இவர் மோலோகாவின் வீட்டிற்குப் போய் நாள் பூராவும் சிலும்பியில் கஞ்சா இழுத்துக் கொண்டிருக்கட்டும்.." என்றாள் கபாஹி.

"இதுவும் கன்றுக்குட்டி தானா?" என்று கேட்டு விட்டு எருமையை ஓட்டிக் கொண்டு போய்விட்டான்.

சம்பா மகசூலில் குலச்சுக்கு குறிப்பிடத்தக்க லாபம் வந்தது. உருளைக்கிழங்கு, கடுகு, உளுந்து விளைச்சலும் லாபம் கொடுத்தது. எருமைக் கிடா வாங்க பஸீரத்திடம் வாங்கியிருந்த கடனை, ஒரு பைசா பாக்கியில்லாமல், துறையிலேயே அவனைப் பார்த்துக் கொடுத்து விட்டு வந்தான் குலச். அவன் மனச்சுமை இறங்கிற்று.

கடன் சுமை இருந்தால் அவன் மனம் நிம்மதியாய் இருப்பதில்லை. பஸீரத் செய்த உதவிக்குப் பெரிதும் நன்றி கூறினான்.

"நீங்கள் பெரிய உபகாரம் செய்தீர்கள். கிடா நன்றாக இருக்கிறது. அது செத்துப் போகாமல் இருந்தால் இன்னும் எத்தனையோ வருஷங்களுக்கு உழைக்கும். நல்ல விதை நெல் இருந்தால் வேண்டும்; கிடைக்குமா?" என்று கேட்டான் குலச்.

ஒரு நாள் பஸீரத்தே நேரில் வந்து குலச்சின் வீட்டுக் கூடத்தில் பல மரக்கால் விதை நெல்லைக் கொண்டு வந்து போட்டுவிட்டுப் போனான். அன்று குலச்சின் உத்திரவுப்படி வீட்டிற்குள் அழைத்து பஸீரத்துக்குச் சிற்றுண்டி பரிமாறினாள் கபாஹி. பேச்சு வார்த்தை ஒன்றும் நடக்கவில்லை. பஸீரத்தும் தலை குனிந்த வண்ணமே சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டு வெளியே வந்துவிட்டான். "சில நாட்களில் நான் தன்சிரி ஆற்றுத் தலைப்புக்குப் போய் விடுவேன். பிறகு ஐப்பசி கார்த்திகை மாதம் தான் திரும்பி வருவேன். மழை காலத்தில் எனக்கு அதிகமாய் வேலை இல்லை இங்கே." என்றான். அதே போல் ஒரு நாள் அவன் படகில் போய்விட்டான். போகும்போது கபாஹியிடம் சொல்லிக் கொண்டு போனான்.

குலச்சுக்கு முன்னைவிட இப்போது வேலைகள் அதிகமாகி விட்டன. எருமையைக் கறந்து பால் விற்கும் வேலை வேறு புதிதாய் வந்து சேர்ந்தது. அதை நேபாலியின் மந்தையில் விட்டுவிடலாம் என்று கபாஹி யோசனை சொன்னாள். குலச் ஒப்புக் கொள்ளவில்லை; எருமை மிகவும் சாது. அதன் கிடாக்கன்று மிகவும் அழகாயிருந்தது; அது உயிரோடிருந்தால் இரண்டு மூன்று வருஷங்களில் ஏரில் கட்டலாம். தவிரவும், நேபாலியிடம் விட்டால் மாட்டை ஒட்டக் கறந்து கறந்து கன்றை வற்ற வைத்துவிடுவான்; பாலுக்கு முழுப்பணம் தரமாட்டான் நமக்கு.

தராவும் சில நாள் எருமையை மேய்ந்து வருவாள். அவளுக்கு அதனிடம் அன்புதான். எங்காவது போகும்போது கபாஹி நகையுடன் போகிறாள்; ஆனால் தரா அந்த மோதிரத்தை போட்டுக்கொள்வதே இல்லை. கொடுக்க வேண்டியதை அவன் கொடுத்தான். அணிவதோ அணியாமல் இருப்பதோ அவரவர்கள் பொறுப்பு. குலச்சும் அது பற்றி ஒன்றும் சொல்லவில்லை. ஒரு நாள் தரா மோதிரத்தைப் போட்டுக் கொண்டிருந்தாள்; குலச் அதைக் கவனிக்காமலேயே ஒதுங்கிப்போக விரும்பினான். தரா அவனைக்

கூப்பிட்டு, "கொஞ்சம் இரு." என்றாள். குலச் மெதுவான குரலில், "சித்தி வீட்டில் இல்லையா?" என்று கேட்டான்.

தரா உள்ளேயிருந்து அவள் மடித்து வைத்திருந்த சட்டைத் துணியை கொண்டு வந்து அவன் கையில் கொடுத்து, "இது புதுத்துணி; இன்றுதான் நெய்து முடிந்தது. இதில் ஈத் பண்டிகைக்கு ஒரு சட்டை தைத்துக் கொள்ள வேண்டும்." என்றாள்.

குலச்சின் முகம் மலர்ந்தது. "ரொம்பச் சரி; நானே ஈத் பண்டிகைக்கு ஒரு நல்ல சட்டை தைத்துக் கொள்ள வேண்டுமென்று நினைத்தேன்" என்று சொல்லிக்கொண்டே துணியின் மடிப்புகளைப் பிரித்துப் பார்த்தான். மிகவும் மெல்லிய துணி. பழுப்பு நிறமான பட்டு மாதிரி துணி.

"ஈத் பண்டிகைக்கு உனக்கு என்ன துணி இருக்கிறது? தரா?"

"எனக்கா? இருக்கிறது. ஒன்றும் வேண்டாம்."

கபாஹுக்கும் தராவுக்கும் சீட்டித் துணியில் இரண்டு ரவிக்கைகள் எடுத்துக் கொடுக்க வேண்டும் என்று குலச் நினைத்தான்; ஆனால் இந்த ஊரில் நல்லகடை இல்லை. இரண்டு கஜம் துணி வாங்குவதற்காக அவன் டவுனுக்குப் போகவும் விரும்பவில்லை. இதற்கு முன் அவன் அங்கு போனதில்லை. அவனுக்கு அதெல்லாம் தெரியவும் தெரியாது. எவனாவது அவனை ஏமாற்றிவிடுவான். இருந்தாலும் அவன் ஒரு தடவை டவுனுக்குப் போக வேண்டும். குறைந்த பட்சம் ஒரு இருபது ரூபாய்க்காவது ஏதாவது நிறைய வாங்கி வரவேண்டும்.

தராவை அவன் ஆவலுடன் ஆசையுடன் பார்த்தான். அவள் தலை குனிந்து கொண்டாள். "இதை நீயே வைத்திரு. நாளைக்கு நானே தையற்காரனிடம் கொடுக்கிறேன்."

மிகவும் லேசான மனத்துடன் அவன் வீட்டிலிருந்து வெளியே புறப்பட்டான். தராவுக்கு அவனிடம் எத்தனை அன்பு. பாசம்; இன்றுவரை அவனுக்கு யாருமே ஈத் பண்டிகைக்காக ஒரு துண்டுத் துணி கூடக் கொடுத்ததில்லை. தராவுக்கு அவனிடம் ரொம்பப் பிரியம்.

அவள் சற்றே குழப்பம் அடைந்திருக்கிறாள். இல்லாவிட்டால்... வெய்யில் சற்று கடுமையாய்த்தான் இருந்தது. வயலில் ஓர்

இடத்திற்குத் தண்ணீர் பாய்ச்சிய பிறகு ஒரு கூடை நிறைய மீன் பிடித்துக் கொண்டு வந்தான் குலச். தரா மீன்களைக் கூடையில் வைத்துக்கொண்டிருந்தாள்.

எங்கிருந்தோ சந்திரனும் வேறு நான்கு பையன்களும் வீட்டு வாசலுக்கு வந்தனர். "மீன் பிடித்து வந்தாயா?" என்று கேட்டான் சந்திரன்.

"தரா, அவர்களை உட்காரச் சொல்; சந்திரா, நீங்கள் எல்லாரும் உட்காருங்கள்; நான் போய் குளித்துவிட்டு இதோ வந்து விடுகிறேன்" என்றான் குலச். தரா மீன்களை கூடையில் வைத்துக்கொண்டிருந்தாள்.

"என்ன தரா? எப்படி இருக்கிறாய்? முன்னைக்கு இப்போது பருத்து விட்டாய்..." என்று தராவைப் பார்த்துக் கொண்டே சொன்னான் சந்திரன்.

தரா தலையைக் குனிந்து கொண்டாள்; எப்போது என்ன பேசலாம் என்று சந்திரன் யோசிப்பதே இல்லை. "வாஸ்தவமாகவே இப்போதுதான் வீடும் வாசலும் நன்றாக இருக்கின்றன. பூச்செடிகளும் வைத்திருக்கிறீர்கள்.. வீடும் பூஞ்சோலையும் அழகாக இருக்கின்றன.. கார்டன் அவசியம் வேண்டும்.." என்றான் சந்திரன். வீட்டுவாசலில் எந்த இடத்தில் பூச் செடிவைக்க வேண்டுமென்று குலச் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தானோ அதே இடத்தில் தரா இரண்டு சாமந்திச் செடிகளை வைத்து வளர்த்திருந்தாள். அவை பூக்கத் தொடங்கியிருந்தன. பந்து பந்தாய் பெரிய பெரிய இதழ்களைக் கொண்ட வெள்ளை வெளேர் என்ற பூக்கள். அவற்றிற்கு பக்கத்திலேயே ஒரு சூரியகாந்திச் செடியும் இருந்தது. அது மிகவும் பெரிதாய் வளர்ந்திருந்தது.

தரா வெற்றிலைத் தட்டைக் கொண்டு வந்து சந்திரன் எதிரே வைத்தாள். இதற்குள் குலச் குட்டையில் குளித்துவிட்டு வந்து விட்டிருந்தான்.

"எங்கே குளித்தாய்?" சந்திரன் கேள்வி இது.

"ஒரு குட்டை வெட்டியிருக்கிறேனே..."

"ரொம்பச் சரி; தன் வீட்டுக் குளம் குட்டைக்கு ஈடே கிடையாது. ரிவருடைய தண்ணீர்.." அசுத்தம் என்பதற்கு ஆங்கில வார்த்தை கிடைக்காமல் சந்திரன் தடைப்பட்டான்.

குலச்சும் ஒரு மோடாவைக் கொண்டு வந்து போட்டுக் கொண்டு உட்கார்ந்தான்.

"ஒரு காரியத்திற்காக வந்தேன்-" என்றான் சந்திரன்.

"வெற்றிலை போட்டுக்கொள் முதலில்..."

பிறகு சந்திரன் தான் வந்த காரணத்தை விவரித்தான். "இந்த சிபரியா கிராமத்தில் ஒரு பள்ளிக் கூடம் இல்லை. இங்கே ஜனங்களும் நிறையப் பேர் இருக்கிறார்கள். முதலில் ஒவ்வொரு வராய் வந்து இப்போது பல குடும்பங்கள் ஏற்பட்டு கிராமமாகவே ஆகியிருக்கிறது. இப்போது இதை பாஹி என்று சொல்ல முடியாது; கிராமத்தில் இருக்கும் இத்தனை ஆண் பெண் குழந்தை களுக்கும் இன்றுவரையில் பள்ளிக்கூடம் ஒன்றும் ஏற்படுத்த வில்லை. அரசாங்கம் நம்மை மனிதர்களாகவே நினைக்கவில்லை. ஆகவே கிராமத்து ஜனங்கள் சேர்ந்து தாங்களாக ஒரு பள்ளிக்கூடம் திறக்க வேண்டும். இல்லாவிட்டால் நம்முடைய ஆண் பெண் குழந்தைகள் கல்வியறிவு இல்லாதவர்களாகவே ஆகி விடுவார்கள். சிபரியா கிராமத்தில், தன்சிரியின் கரையில், மூங்கில், மரம், கோரை, பிரம்பு முதலியவற்றிற்குப் பஞ்சம் இல்லை. கிராமத்து ஜனங்கள் பள்ளிக்கூடக் கட்டிடத்தைக் கட்டிச் சில குழந்தைகளையும் சேர்த்து ஒரு மாஸ்டரையும் ஏற்பாடு செய்துவிட்டால், போர்ட் இதை ஏற்றுக் கொள்ளத் தடை ஏதும் இருக்காது. இல்லாவிட்டால், ஐ ஷால் ஸீ- நானே போய் டி.ஐ.யை அழைத்துவருகிறேன். நம்முடைய கிராமம் என்றென்றைக்கும் இப்படியே இல்லிட்டரேட்டாகவே இருக்க வேண்டுமா? பட்டணத்துக் குழந்தைகளுக்கு அடிக்கொரு பள்ளிக்கூடம் இருக்கிறது. நாம் எஜூகேடெட் இல்லாத காரணத்தால்தான் நம்மை எல்லாரும் நெக்லெக்ட் பண்ணுகிறார்கள்."

குலச் எல்லாவற்றையும் கேட்டான்; ஏதோ யோசிக்கிறவனைப் போலக் காட்டிய பிறகு, "நீங்கள் எல்லாம் சொல்வது ரொம்பச் சரி; இதில் நான் என்ன செய்ய முடியும்?" என்றான்.

"நீயா? நீ ரொம்பக் காரியம் செய்ய வேண்டும். ஒரு பொதுக் கூட்டம் கூட்டப் போகிறோம். அந்தக்கூட்டத்தில் எல்லா விவரங்களையும் ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லப் போகிறேன். நீ இந்தக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கவேண்டும்.."

"அடேடே... வேண்டாம்; எனக்குக் கூட்டத்திற்கு வரவே பயமாயிருக்கும். படிக்காத ஆசாமியைக் கூட்டத்திற்குத் தலைவன் ஆக்கிவிட்டு அவனை வேடிக்கை பார்க்க விரும்புகிறாய் நீ... அந்த மாதிரி வேடிக்கையை என்னிடம் வைத்துக் கொள்ளாதே." என்றான் குலச்.

"இது வேடிக்கையே இல்லை. நம்மூரில் நீ எப்படியோ, அப்படித்தான் மற்றவர்களும். இப்போது உன்னிடம் ஏதோ கொஞ்சம் பணம் காசு சேர்ந்திருக்கிறது; நீ தலைவனாக இருந்து நாலு வார்த்தை சொன்னால் மதித்து மரியாதை செய்வார்கள்." என்றான் சந்திரன். ஒருபுறம் பெருமை; மற்றொரு புறம் வெட்கம். குலச்சுக்கு முகமெல்லாம் சிவந்துவிட்டது. "எனக்கு ஒன்றுமே தெரியாதே."

"இன்னொருவனுக்கு மட்டும் என்ன தெரியும்? உன்னால் செய்யமுடியும். நானும் உன்னுடன் இருப்பேன் அல்லவா? ஐ ஆம் வித் யூ. நீ சபைக்குத் தலைவன் ஆகத்தான் வேண்டும். ஸ்கூலுக்கும் உன்னைத்தான் தலைவன் ஆக்கப் போகிறேன்."

"ஸ்கூலுக்குத் தலைவனா.... இன்னும் என்ன...?"

"இருக்கிறது... இருக்கிறது-பின்னால் தெரிந்து கொள்வாய்; ஸ்கூல் கட்டுவதற்கும் அமைப்பதற்கும் பணம் வேண்டும் அவசியமாய். ரொம்பச் செலவு ஆகும். நீ என்ன கொடுக்க முடியுமோ அதைக் கொடு." என்றான் சந்திரன். இந்த சமயத்தில் சந்திரனுடன் வந்திருந்த நான்கு பேரும் சேர்ந்து ஒரே குரலில், தலைவர் இருபத்தைந்து ரூபாய் சந்தா தரவேண்டும்" என்று கத்தினார்கள்.

"இருபத்தைந்து ரூபாயா? எங்கே கிடைக்கும் அத்தனை பணம் தம்பிகளே? நல்ல காரியம் என்று வந்திருக்கிக்கிறீர்கள்; நான் ஒரு ரூபாய் தருகிறேன்." என்றான் குலச்.

"ஒரு ரூபாயா? கூடாது; கூடாது; தாங்களே ஒரு ரூபாய் கொடுத்தால் மற்றவர்கள் எவ்வளவு கொடுப்பார்கள்?" கடைசியில் ஸ்கூலுக்காக குலச்சிடம் ஐந்து ரூபாய் சந்தா வாங்கிக் கொண்டு சந்திரனும் கூட வந்தவர்களும் அங்கிருந்து போனார்கள். குலச்சும் நல்ல சந்தோஷத்துடனேயே கொடுத்தான். அவர்கள் போன பிறகு, கபாஹுயிடமும் தராவிடமும் "ஐந்து ரூபாய் ஒரு பெரிய தொகை இல்லை. நல்ல காரியத்திற்கென்று எப்போது

வந்தார்களோ அதற்கு நாம் கொடுக்காமல் வேறு யார் கொடுப்பார்கள்? ஆனால் சந்திரன் சபைத் தலைவனோ என்னவோ ஆகவேண்டுமென்று சொன்னான். அவன் வேடிக்கைக்குச் சொன்னானோ, அல்லது நிஜமாகவே சொன்னானோ தெரியவில்லை." என்று விவரம் சொன்னான். "இதில் வேடிக்கை என்ன இருக்கிறது? சொல்லியிருக்கிறான். தலைவர் ஆக வேண்டியதுதான்."

"ஆமாம், அதுதான் சரி."

சபைத் தலைவர் ஆவதை நினைத்துப் பார்த்தபோது குலச்சுக்கு உள்ளுக்குள்ளே பயம் வந்துவிட்டது. என்ன செய்ய வேண்டியிருக்கும், என்ன சொல்ல வேண்டியிருக்கும்? ஆனால் தான் பயப்படுவதாக அவன் தராவிடமும் கபாஹியிடமும் சொல்லவில்லை. அவர்கள் என்ன நினைப்பார்களோ. பாக்கியத்தில் எப்படி, என்ன எழுதியிருக்கிறதோ:

மாலையில் வீட்டிலிருந்து கிளம்பியபொழுது குலச்சின் மனத்தில் ஒரு புத்துணர்ச்சி நிறைந்திருந்தது. அவன் பணம் சம்பாதித்தது பயனுள்ளதாகி விட்டது. இன்று பள்ளிக்கூடத்திற்காகச் சந்தா கொடுத்திருக்கிறான். இருபத்தைந்து ரூபாய் கேட்டார்கள். கொடுத்திருந்தால் இன்னும் நன்றாய் இருந்திருக்கும் என்று நினைத்தான். இன்னும் சமயம் இருக்கிறது பின்னாடி. பள்ளிக்கூடம் வைத்தபிறகு அவசியம் நேரும்பொழுது கொடுப்பேன்.

இன்றைக்குக் கொடுத்த ஐந்து ரூபாயும் குறைவான தொகை இல்லை. அவன் தன் மனத்தில் இருப்பதை யாரிடமாவது திறந்து சொல்ல விரும்பினான். பணம் வேறு எதற்காக இருக்கிறது?

## இருபத்திநான்கு

கேலாயியின் உடல்நிலை நாளுக்கு நாள் மோசமாகத் தொடங்கி இருந்தது. தகுந்த வைத்தியமும் செய்யவில்லை. வாலிபன்; ஆரோக்யமாயிருக்கவும், உயிர் வாழவும் அவனுக்கு அதிகமான ஆசை இருக்கிறது. ஆனால் கொடிய வியாதியும் கடுமையான வறுமையும் சேர்ந்து ஒருவனை அழிப்பதற்குச் சதி செய்யும்போது வறுமையே வெற்றி அடைவதில் ஆச்சரியம் இல்லையே.

அவன் பெரும்பாலும் படுக்கையிலேயே கிடக்கிறான். இஞ்சிச் சாறும், துளசியிலையும், தேனும் சேர்த்து மருந்து சாப்பிடுகிறான்.

வைத்தியனை வைகிறான். ஆரோக்கியம் ஏற்படவில்லை. வியாதி எப்படியோ அமுங்கிக் கிடக்கிறது. மோலோகாவும் திகரும் அவன் உடம்பு தேறும் என்று நம்பிக்கையை இழந்து விட்டனர். அவனைப் பற்றிக் கவலைப்பட அவர்களுக்கு நேரமும் இல்லை. இரவும் பகலும் வயிற்றுக் கவலையில் வாட வேண்டியிருக்கிறது.

சேனிமாயி கேலாயியைப் பார்த்துக்கொள்ளும் தன் பொறுப்பை உணர்ந்திருந்தாள்; ஆனால் அவளுக்கும் அலுத்து விட்டது. ஒரு தெம்புள்ள பருவப்பெண் ஒரு தீராத வியாதிக் காரனுக்குத் தொண்டு செய்வதில் இன்பம் காணமுடியுமா? அவளுக்கும் அவன் உடம்பு தேறிப் பிழைக்கமாட்டான் என்ற உறுதியான எண்ணம் ஏற்பட்டு விட்டிருந்தது. அவனுக்கு இளமைப்பருவம் முதல் இருக்கும் வியாதி இது; இவர்கள் செய்யும் வைத்தியத்தால் எதுவும் நடக்கப் போவதில்லை. ஸபீயத்தின் மேலும், தன் அப்பாவின் மீதும், மோலோகாவின் மீதும் திகரின் மீதும் தான் அவளுக்குக் கோபம். கேலாயி மீது அவளுக்குச் சிறிதும் கோபம் இல்லை. அவனிடம் அவளுக்குக் கருணையும், பாசமும்தான் ஏற்பட்டிருக்கின்றன. அவன் என்னதான் செய்வான் பாவம்; எல்லாரும் சேர்ந்து கல்யாணம் செய்து வைத்தார்கள். அவன் செய்து கொண்டான். கிராமத்தில் குருடன், நொண்டி, ஊமை யாருமே கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்க மாட்டார்கள். கேலாயி ஒரு நோயாளிதானே. அவமதிக்கப்பட்டு விட்ட அவளுடைய பருவம் சில சமயம் புரட்சி செய்யத் துடித்தெழுகிறது. எந்தவிதமான தொடர்பும் இல்லாமலேயே ஒரு வியாதிக்காரனுடன் வாழ்வதை யாரும் ஒப்புக் கொள்ளவில்லை. என்றைக்காவது ஒருநாள் கேலாயியை உதறிவிட்டு வேறு யாருடனாவது ஓடிவிட்டால் என்ன என்று அவள் நினைப்பதுண்டு. ஒளிவு மறைவாய் ஓடுவது கூட வேண்டாம். எல்லாருக்கும் தெரியும்படி எல்லாருக்கும் எதிரில் ஒருவனுடன் போய்விட வேண்டும். யாராவது கேட்டால், விளக்கமாகவே, தனக்கும் கேலாயிக்கும் எந்தவிதமான உடல் உறவும் இல்லை என்பதைச் சொல்லி விடவேண்டும். அவர்கள் மேலும் ஏதாவது பேசினால், உங்களுக்கு அவன்மேல் அக்கரை இருக்குமானால் உங்கள் பெண்ணை அவனுக்குக் கட்டிக்கொடுங்களேன்; நான் இனி இவனுடன் இருக்கமாட்டேன் என்றும் சொல்ல நினைத்தாள் சேனிமாயி. ஆனால் வேறு துணையின்றி கலங்கித்துயருற்று, வற்றி உலர்ந்த கண்களால் அவளைப் பார்த்து ஏங்கும் கேலாயியிடம்

அவளுக்கு அவ்வப்போது பரிவும் தோன்றுகிறது; அவன் ஒரு பேசத் தெரியாத பச்சைக் குழந்தை. சேனிமாயியின் மடியில் அடைக்கலம் புகுந்து உயிர் வாழ விரும்புகிறான். அவள் அவனைப் புறக்கணித்துவிட்டால் அவன் கதறிக் கதறி அழுதே உயிரை விடுவான். சேனிமாயி அவன் கைகால்களைத் துடைத்துவிடுவாள். கொஞ்சம் கடுகெண்ணையைச் சூடு செய்து அவன் மார்பில் தேய்த்துவிடுவாள். கிழங்கை நன்றாகச் சமைத்துப் போடுவாள். அவளுடைய அன்புதான் கேலாயிக்குத் தெம்பளித்தது. அவனுடைய உதடுகளில் ஊமை நன்றியுரைகள் தவழும். அவன் மிகுந்த துக்கத்துடன் அவள் கையைப்பிடித்துக் கொண்டு, "எனக்காக இவ்வளவு கஷ்டப்படுகிறாயே சேனி? நீ படும் கஷ்டத்திற்காகவாவது எனக்கு உடம்பு குணமாகக் கூடாதா" என்பான். அவளுக்கே மனம் உருகிவிடும். தனக்கு மிகவும் துக்கம்தான்; வியாதியாவது குணமாகக் கூடாதோ. காசு பணம் இருந்தாலாவது எங்காவது ஆஸ்பத்திரிக்கு அழைத்துப்போய் நல்ல வைத்தியம் செய்யலாம். இந்த ஊர் மோசமான குக்கிராமமாக இருக்கிறதே. இங்கே புலியும் யானையும் மனிதனும் நோயும் ஒன்று சேர்ந்து இருக்கின்றனவே. ஒரு வியாதி வந்தால் பிழைக்கவே வழியில்லையே. கேலாயியை இப்படிக் கை கழுவ வேண்டியிருக்கிறதே என்றெல்லாம் நினைத்துப் பார்ப்பாள். அவனைத் தூங்க வைக்கப் பாடுபடும் போதெல்லாம் அவளுக்கு என்னென்னவோ எண்ணங்கள் வரும்/ இவன் இறந்துபோன பிறகு வேறு எங்காவது போய்விடலாம் என்பது தனி விஷயம்; நான் இவனுடன் இருக்கும் வரை இவன் என் புருஷன். இவனுக்கு நான் ஒரு நாளும் நம்பிக்கைத் துரோகம் செய்யமாட்டேன். சம்பந்தம் ஒரு வழியாக அறுந்துவிட்டால் அது வேறு தனி சமாசாரம்./ /ஆனால் அவனை விட்டுச் சென்று வயல் வேலை செய்யும் போது, இந்த எண்ணம் பயனற்றது என்று தோன்றும் அவளுக்கு. அவனுக்கும் தனக்கும் என்ன சம்பந்தம். இப்படியே தனியாகக் கிழவியாவதில் என்ன சுகம் இருக்கிறது, என்றும் தோன்றும்./ அப்போது அவள் தன்னை மிகவும் திடமாகத் தேற்றிக் கொள்வாள்; தன் புருஷன் என்று ஒருவன் இருக்கும் வரை பிற ஆண்களின் மீது பார்வையைச் செலுத்துவது கூடச் சரியில்லை. அவன் வியாதிக்காரன் தான்; அதனால் என்ன? அவள் கெட்டபெயருக்குப் பயப்படவும் இல்லை. கல்யாணம் என்று எப்போது ஆகிவிட்டதோ, அதை அவள் மதிக்காமல்

இருக்கக்கூடாது. அவள் அவ்வளவு கேடு கெட்ட பெண் இல்லை; அப்படி அவளால் ஆகவும் முடியாது.

அவசியம் வரும்போது அவள் குலச்சின் வீட்டிற்குப் போகிறாள். தேவைப்பட்ட இரண்டொரு சாமான்களை வாங்கி வருகிறாள். கபாஹியும் தராவும் வீட்டில் இருப்பதை அவளுக்குக் கொடுக்காமல் இருப்பதில்லை. அவளும் ஒவ்வொரு சமயம் இயந்திரத்தில் நெல் குத்திக் கொடுக்கிறாள். நாலைந்து கண்டு நூல்கள் சுற்றிக் கொடுக்கிறாள். வீட்டு வாசலில் காயப் போட்டிருக்கும் நெல்லை மறுபடியும் துளாவி விடுகிறாள். மீன் அதிகமாயிருந்தால் அரிந்து நறுக்கித் தேய்த்துக் கொடுக்கிறாள். இதையெல்லாம் யாரும் சொல்லாமல் தானே செய்கிறாள்.

குலச்சுடனும் பேசிக் கொண்டிருப்பாள். அவன் எப்போதுமே அதிகம் பேசாதவன்; சேனியுடனும் ஏதோ இரண்டு வார்த்தை நலம் விசாரிப்பதோடு சரி. ஆனால் தராவிடம் சொல்லி அவளுக்குத் தேவைப்பட்டதைக் கொடுக்க சொல்வான். அரிசி, மீன், கறிகாய், இரண்டணாவோ நாலணாவோ காசு எல்லாம் தரச் சொல்வான். அவளும் தயங்காமல் வாங்கிக்கொள்வாள். ஏழைகள் ராங்கியைக் காட்டலாமா.

நேரம் கிடைக்கும்போது குலச்சும் அவள் வீட்டுக்குப் போவதுண்டு. கேலாயி உடம்பைப்பற்றியும் அவளுடைய கவலைகளைப்பற்றியும் விசாரிப்பான். ஒரு தடவை வெற்றிலை போட்டுக் கொண்டு திரும்பி விடுவான்.

சேனியும் அவனுக்கு மிகவும் மரியாதை காட்டுவாள். குலச் இப்போது ஊரில் ஒரு பெரிய புள்ளி. களஞ்சியத்தில் நெல் இருக்கிறது. மாட்டுக் கொட்டிலில் நிறையக் கால்நடைகள்; தோட்டத்திலேயே வெற்றிலைக் கொடியும் பாக்கு மரமும் இருக்கின்றன. அவன் நினைத்தால் பத்தோ இருபதோ தன் மடியிலிருந்தே அவிழ்த்துக் கொடுக்க முடியும். அப்படிப்பட்ட குலச், மோலோகாவின் வீட்டிற்கு வருவதே ஒரு கௌரவம். மோலோகாவுக்கு இது பிரியமாக இருந்தது.

சில சமயம் குலச் கபாஹிக்கும் தராவுக்கும் தெரியாமலேயே கொஞ்சம் தேயிலையும் சீனியும் கொண்டு வருவான்; சேனியிடம் அன்புடன் கொடுத்து, "இந்தாம்மா கொஞ்சம் டீ தயார் செய்; ஏகமாயிருக்கிறது" என்பான். சில சமயம் வீட்டுக்குத் தெரியாமலேயே நேபாலியின் மந்தையிலிருந்து எருமை நெய்

வாங்கி மூங்கிற் குழாயில் ஊற்றிக் கொண்டு வருவான் சேனிமாயிக்கு. கேலாயி சாப்பிடுவான் கொஞ்சம். சில சமயம் நாலணா, எட்டணா காசும் கொடுப்பான். அல்லாவின் கருணையால் சணலில் கொஞ்சம் லாபம் வந்தது. "இந்தா காசை வாங்கிக்கொள். ஆண்டவனை வேண்டிக்கொள்" என்று சொல்வான். குலச்சிடம் சேனிமாயி மிகவும் பிரியமாய் இருந்தாள்.

ஒரு நாள் இரவு குலச்சை வாசலில் ஒரு புறமாக அழைத்துச் சென்று "உங்கள் வீட்டுக்கு சந்திரனோ என்னவோ பெயர்.. ஒருவர் வருகிறாரே அவரால் இதற்கு ஏதாவது ஏற்பாடு செய்ய முடியாதா?" என்று கேட்டாள்.

"எதற்கு ஏற்பாடு?"

"இவருக்கு வைத்தியம் செய்யத்தான். இங்கேயே இருந்தால் எப்படி வியாதி குணமாகும்? இங்கே மருந்தும் கிடைக்கவில்லை; கையிலும் பணம்காசு இல்லை. எப்படி வைத்தியம் பார்ப்பேன்? கோலாகாட் மாதிரி ஏதாவது ஒரு நகரத்திற்குப்போய், அரசாங்க ஆஸ்பத்திரியில் சேர்த்தாலாவது குணமாகும்."

குலச் பதில் சொல்லவில்லை. இதெல்லாம் அவனுக்குத் தெரியாது. சந்திரனுக்குத் தெரியும். அடிக்கடி நகரத்திற்குப் போய் வருகிறான் அவன்.

"சந்திரன் வந்தால் கேட்டுப் பாருங்களேன்".

"கேலாயியை ஆஸ்பத்திரியில் சேர்த்தால் அவனை அங்கே யார் பார்த்துக் கொள்வது?" "அங்கே இருக்கும் டாக்டர்கள் கவனித்துக் கொள்ளமாட்டார்களா? செலவு கூட இல்லை என்று சொல்கிறார்கள். அவசியமானல் என் கையில் காதில் இருப்பதை விற்று ஏதாவது தோது செய்கிறேன். நீங்களெல்லாம் சேர்ந்து இரண்டோ நாலோ தாருங்கள்..."

கொஞ்சம் பேசாமலிருந்து விட்டு, "ஆமாம், சந்திரன் அடிக்கடி நம்முடைய கிராமத்திலேயே ஒரு ஆஸ்பத்திரி வைக்க வேண்டு மென்று சொல்வதுண்டு; அவன் பிதற்றுகிறான் என்றுதான் நினைத்தேன்; இப்போதுதான் புரிகிறது. நம் ஊரில் ஒரு ஆஸ்பத்திரி இருந்தால் நாமெல்லாம் இப்படி அவஸ்தைப்பட வேண்டியதில்லை."

குலச் தன் மனத்திற்குள் ஒரு தீர்மானம் செய்துகொண்டான். பள்ளிக்கூடம் வைப்பது போலவே சந்திரன் இங்கே ஆஸ்பத்திரி

திறக்க ஏற்பாடு செய்தால் நான் பத்து குழி நிலம் கொடுப்பேன். நாற்பது ரூபாய் பணமும் கொடுப்பேன். நம் கிராமத்தில் ஒரு பள்ளிக்கூடம், ஒரு ஆஸ்பத்திரி இரண்டும் ரொம்ப அவசிய மானவை.

குலச் சேனிக்குத் தைரியம் சொன்னான். "நீ கவலைப்படாதே; சந்திரன் வந்ததும் இதில் என்ன செய்யமுடியுமோ அதைச் செய்வோம். பணம் காசு என்ன வேண்டுமோ அதை நான் தருகிறேன். கவலைப்படாதே. அன்றைக்கு நீ என்னவோ சொன்னாய்; எனக்கு அப்போது வேறு ஏதோ யோசனை..." சேனி சொன்னாள்: "சில சமயம் எனக்கு ரொம்ப ஆத்திரம் வந்து விடுகிறது; வியாதிக்காரனுக்குப் பணிவிடை செய்யத்தான் நான் உலகத்தில் பிறந்தேனோ? அதையும் தவிர புருஷன் வீட்டுக்குப் பகல் சாப்பாட்டுக்கும் இரவுச் சாப்பாட்டிற்கும் பிறர் வீட்டிலிருந்து கேட்டு வாங்கிக் கொண்டு வந்து போட வேண்டியிருக்கிறது; நான் சாவதைத் தவிர வேறு என்ன செய்ய. ஏதோ நீ பக்கத்தில் இருக்கும் தைரியத்தில் ஓட்டுகிறேன் நாட்களை. இதுவும் இல்லாவிட்டால் நான் எந்த வேளையில் என்ன செய்து கொள்வேனோ எனக்கே தெரியாது."

குலச் அவளுக்கு எந்த வகையிலும் ஆறுதல் அளிக்க விரும்பினான். தன் புருஷன் வியாதிக்காரனாயிருந்தாலும் அவனிடம் ஒரு பெண்ணுக்கு அன்பு இருப்பது இயல்புதானே. சந்திரனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அவன் அடிக்கடி வருவதில்லை. ரொம்பநாள் கழித்துத் திடீரென்று வருவான். எங்கே சுற்றுகிறானோ தெரியாது. இப்போதெல்லாம் அவன் முன்னைவிட மிகவும் நேர்த்தியாக உடைகள் அணிகிறான். போன தடவை வந்தபோது சீட்டித் துணியில் அரைக்கைச் சட்டை போட்டுக் கொண்டிருந்தான். மணிக்கட்டில் ஓர் அழகான கடியாரம் இருந்தது. சின்ன மீசையும் வைத்துக்கொண்டிருந்தான். கெட்டி நீல நிறத்தில் ஒரு கால்சட்டை போட்டுக் கொண்டிருந்தான். முன் போலவே கால் சட்டையை மடக்கிவிட்டுக் கொண்டிருந்தான். முழங்கால் வரை காட்டு நிலத்தின் சேறும் சகதியும் பட்டிருந்தன. அவன் முகமும் ஒட்டி உலர்ந்திருந்தது. சாப்பிடக்கூட நேரமோ இடமோ இல்லையோ என்று தோன்றியது. இருபத்து நான்கு மணி நேரமும் சுற்றித் திரிகிறான்.

கேலாயியின் வியாதி குணமாகும்; பணம் செலவு செய்ய வேண்டும். அவன் வியாதி குணமானால் சேனிக்கு இன்பம் கிடைக்கும். அவனுடைய குடும்பம் நன்மையடையும். ஆனால் அரசாங்கச் செலவில் வைத்தியம் கிடைத்தால் நல்லது. சேனிமாயியிடம் பணம் இல்லை. பின்னாடி என்ன ஆனாலும் சரி; அவனை ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டும். இதுபற்றிக் கபாஹியுடன் கலந்து பேசலாமா என்று அவன் நினைத்தான். ஆனால் அது கூடாதென்று தீர்மானித்தான் பிறகு. கபாஹி என்ன நினைப்பாளோ. பெண்களின் மனதைப்புரிந்து கொள்ளவே முடியாது. ஆனால் கபாஹி தீயமனம் உடையவள் இல்லை. சேனிமாயியின் புருஷன் வியாதி தீர்ந்தால் இவள் அதைத் தவறாக நினைக்கக் காரணம் எதுவுமில்லை. இருந்தாலும் எல்லா வற்றையும் பெண்களிடம் சொல்வது நல்லதல்ல.

## இருபத்தைந்து

ஆனி மாதப் பிறப்புக்குச் சில தினங்களுக்கு முன் குலச் டாலிமுக்குப் போனான்; அவனுக்கு இப்போதெல்லாம் அங்கே போக நேரமே கிடைப்பதில்லை. அவசியமும் இருப்பதில்லை. அவன் நாளடைவில் சிபரியா கிராமவாசியாகவே ஆகிவிட்டிருந் தான். அவனுடைய அண்ணனும் தாயாரும் சௌகரியமாக இருந்தார்கள். ஊரில் மற்றவர்களும் நன்றாய் இருந்தார்கள். தன் சொந்த ஊருக்கு வேற்றாள் மாதிரிப் போவதும் அவனுக்குப் பிடித்திருந்தது. ஊர்க்காரர்கள் அவனிடம் அன்பாய்ப் பேசு கிறார்கள். "கபாஹி எப்படி இருக்கிறாள்? துவரை என்ன கண்டு முதல்? கடுகு நன்றாய் விளைந்ததா?" என்றெல்லாம் விசாரிக்கிறார்கள்.

தான் நல்ல வசதியுடன் இருப்பதைப் பிறருக்குச் சொல்ல அவனுக்கு மிகவும் பிடித்தது. அவன் டாலிமை விட்டு வந்து மூன்று வருஷங்கள் ஆகப் போகின்றன. அவன் நிலையில் போதுமான மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் டாலிம் பழையபடியே தான் இருந்தது. சில மரங்கள் வளர்ந்து பெரியவை ஆகியிருக்கின்றன. அவ்வளவுதான். நாலைந்து குழந்தைகள் வாலிபர்களாயிருக்கின்றனர். சில பெண் குழந்தைகள் யுவதிகளாக மாறியிருக்கிறார்கள். தன் தாயாருடனும் அண்ணனுடனும் அவன் ஒரு சமாசாரத்தைப் பற்றிக் கலந்து பேசினான். டாலிம்

கிராமத்தில் அவனுக்குக் கிடைத்திருக்கும் பிதுரார்ஜிதமான நிலத்தை என்ன செய்வது? அதை விற்க வேண்டுமென்று அவன் விரும்பவில்லை; ஆனால் நல்ல விலை வந்தால் விற்கவும் தயார்தான். வேண்டுமானால் அண்ணனே அதை வாங்கிக் கொள்ளட்டும். இது குடும்ப சமாசாரம்; இப்போது அண்ணன் தான் குலச்சின் பங்கையும் சேர்த்துச் சாகுபடி செய்கிறான். பாதி மகசூல் கொடுப்பதாகப் பேச்சு; ஆனால் இன்னும் ஒரு வருஷம் கூட ஒன்றும் கொடுக்கவில்லை. அம்மா இருக்கிறாள் அவனிடம்; அவனும் சம்சாரி-குழந்தை குட்டிக்காரன். தனக்கும் அல்லா ஏதோ கொடுக்கிறார்; அண்ணன் கொடுக்காவிட்டாலும் பரவாயில்லை. ஏதோ குலச்சின் குடும்பமும் ஓடுகிறது. ஆனாலும் தன் பிதுரார்ஜிதமான சொத்தை அவன் விடத் தயாரில்லை. ஐந்து குழியோ பத்து குழியோ, தன் தகப்பன் வியர்வை சிந்தி மண்ணில் கலந்திருக்கும் அந்த நிலத்தின்மேல் அவனுக்கொரு தனியான சொந்தம் இருக்கிறது. அப்பாதான் இல்லை, அவர் நிலம் இருக்கிறது. நான் ஏன் அதைவிட வேண்டும்?

அதை அவன் விற்க முடிவு செய்வதற்கும் இரண்டு காரணங்கள்; சிபரியா கிராமத்தில் நல்ல நிலம் விலைக்கு வருகிறது; கொஞ்சம் கூடத்தான் விலை சொல்கிறான், நிலக்காரன். கொடுக்கலாம்; நல்ல நிலம். வெள்ளத்தால் பயமில்லை. புலி கரடி பயமும் கிடையாது. மேலும் கிராமத்தின் அந்தப் பகுதி நாளுக்கு நாள் நல்ல நிலையை அடைந்து வருகிறது. இப்போது நிலத்தை வாங்கிப் போட்டால், பின்னாடி நல்ல லாபம் கிடைக்கும் என்பது ஒன்று. இரண்டாவது, சிபரியாவில் இத்தனை அதிக விலை கொடுத்து அந்த நிலத்தை வாங்கிக் கொள்ளும் ஆசாமி அவனைத் தவிர வேறு யாருமில்லை. அந்த நிலம் கிட்டத்தட்ட ஏழு ஏக்கர் இருக்கும்; அவன் கையில் இப்போது இருப்பது சுமார் ஐந்நூறு ரூபாய். நிலக்காரன் கேட்பது எண்ணூறு ரூபாய். ஆகவே டாலிம் நிலத்திற்குப்பதில் சிபரியா நிலம் வாங்கப் போகிறான். இது நல்லதுதானே, இதையும் தவிர, இன்றைக்கு சிபரியா கிராமத்தில் பணக்காரன் என்று எடுத்தால் குலச்சின் பெயர் தான் முன்னால் வருகிறது; இந்த நிலையில் எண்ணூறு ரூபாய் கொடுத்து அந்த நிலத்தை வாங்காமல் விடுவது வெட்கப்பட வேண்டிய விஷயமாகிவிடும். குலச்சுக்கு பஸீரத்தின் ஞாபகம் வந்தது; ஆனால் அவன் அதை விரும்பவில்லை. பஸீரத் நல்ல மனிதர்தான்; இருந்தாலும் அவனிடம் கடன் வாங்கத் தயாராயில்லை குலச். முன்பு

எருமைக்கிடா வாங்கின விஷயமே வேறு; அப்போது பஸீரத் மிகவும் வற்புறுத்திப் பணம் கொடுத்தான்; தவிர அப்போதிருந்த சங்கதியே தனி.

குலச்சின் தாயார் தடை சொன்னாள். "வேறு வழியில் பணம் தோது செய்து அந்த நிலத்தையும் வாங்கு; ஆனால் டாலிம் நிலம் இருக்கட்டும், பரம்பரையாய் இருக்கும் பூர்வீகச் சொத்தை விற்றால் மகாலட்சுமி போய்விடுவாள்" என்றாள் அவள்.

"விற்பதெனில் வேறு யாருக்கும் விற்காதே; நானே கடன் உடன் வாங்கி நிலத்தை வாங்கிக் கொள்கிறேன். இப்போது கையில் கொஞ்சம் பணம் தருகிறேன். ஆனால் கொஞ்சம் விளைந்திருக்கிறது. வெல்லமும் காய்ச்சி வைத்திருக்கிறேன். இவற்றை விற்றுக் கொஞ்சம் தருகிறேன். பின்னாடி நீயே வேண்டுமானாலும் என்னிடமிருந்து வாங்கிக் கொள்ளலாம்" என்றான் அண்ணன்.

"வைகாசி முடிந்துவிட்டது. இருநூறு ரூபாய் முன்பணமாகக் கொடுத்து வைக்கிறேன். பாக்கிப் பணத்தை ஐப்பசி கார்த்திகையில் வாங்கிக் கொள்ள அவன் சம்மதித்தாலும் சம்மதிப்பான். உனக்கு இந்த நிலம் வேண்டும் என்று நீ நினைத்தால் ஆவணி புரட்டாசியில் நீ பணம் கொடுக்க வேண்டியிருக்கும் எனக்கு" என்றான் குலச்.

அம்மா சொன்ன ஆலோசனைப்படி, குலச் நஞ்சை நிலத்தில் ஒரு பகுதியை விற்பது என்றும், வேறு நஞ்சைகளையோ புஞ்சைகளையோ விற்பதில்லை என்று முடிவாயிற்று.

"ஆவணி மாதக் கடைசியில் பஸீரத் வருவான்; அவன் சணலைக் கொள்முதல் செய்து கொண்டு தரும் பணத்தை உனக்கு கொடுத்துவிடுகிறேன்" என்றான் அண்ணன்.

குலச் இதற்கு ஒத்துக் கொண்டான். அவனுடைய தாயாருக்குக் குலச்சின் வீட்டைப் பார்த்து வரவேண்டுமென்று ஆசை. ஆனால் குலச் அந்தப் பேச்சையே எடுக்கவில்லை. முன்பொரு தடவை அவனே கூப்பிட்டபோது அவள் போகவில்லை; இப்போது அவள் தானாகப்போனால் தான் உண்டு. அவன் சொல்லாததால் அவளும் அதைப்பற்றிப் பேசவில்லை. அவனே எப்பொழுது கூப்பிட வில்லையோ தானாகப் போய் ஆக வேண்டியதொன்றுமில்லை.

குலச் ஸபீயத்தின் வீட்டுக்குப்போனான். பேசிக்கொண்டிருந்த போது அந்தக் கிழவன் சேனிமாயியைப்பற்றியும் விசாரித்தான்.

குலச் அதற்குப் பதில் சொல்லும் வகையில், அவளை அந்தக் குடும்பத்தில் கொடுத்துத்தான் ஆக வேண்டுமென்று இருந்ததா? கஷ்டம், எவனோ ஆஸ்த்மா வியாதிக்காரன்; ராப்பட்டினிக் குடும்பம். ஒரு வேளை சாப்பிட்டால் மறுவேளைக்குச் சோறு இல்லை" என்று சற்று ஆத்திரத்துடன் சொன்னான். ஸபீயத் அந்த விவாதத்தை முடித்துவிட்டு, "ஒரு குடும்பத்திற்குக் கெட்ட பெயர் வந்துவிட்டால் இந்த இடமில்லாமல் வேறே ராஜகுமாரன் கிடைப்பானா என்ன? அது போகட்டும்; உனக்கு ஏதாவது குழந்தை குட்டிகள் உண்டாயிற்றா?" என்று கேட்டான்.

குலச் தலையைக் குனிந்து கொண்டான்; ஒன்றும் பிறக்கவில்லை என்பதைப் புரிந்து கொண்ட கிழவன்; "ஒரு வயதான பெண் பிள்ளையைக் கொண்டுபோய் வீட்டில் வைத்துக் கொண்டிருக் கிறாய்; குழந்தை குட்டிகள் எப்படிப் பிறக்கும்? ஆனால் அதற்காக கவலைப்படாதே. அதிர்ஷ்டமிருந்தால் எப்போதும் பிறக்கலாம்; இல்லாவிட்டால் மற்றொருத்தியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டியதுதான்; இன்று உன்னிடம் நாலு காசு சேர்ந்திருக்கிறது. உனக்குப் பெண் கொடுக்க எத்தனையோ பேர் வருவார்கள்." என்று சிறிது நிறுத்திப் பிறகு, "ஆனால் தராவும் உன்னுடன் தானே இருக்கிறாள்? அவளை யாருக்கும் கட்டிக் கொடுக்கும் பேச்சுக்கூட அடிபடவில்லையே?" என்றும் கேட்டான்.

குலச் எப்படியோ சமாளித்துக் கொண்டு, "இல்லை; இன்னும் யாருக்கும் அவளுடன் கல்யாணம் என்ற பேச்சுப் பேசவில்லை." என்று பதில் சொன்னான்.

"நம்முடைய ஊமைப் பயலுக்கு அவளைக் கட்டிக் கொள்ளலாம் என்ற ஆசை இருக்கு; ஆனால் அந்தப் பட்டிச் சிறுக்கி இரவோடிரவாய் ஓடிவந்து உங்களுடன் சேர்ந்து கொண்டாள். அவளுக்கு ஒரு ராஜகுமாரன் எங்கிருந்து வரப் போகிறான், என்று அதையும் தான் பார்க்கிறேன்.. நீ அவளை ரொம்ப ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டுமடா; என்ன இருந்தாலும் பெண் பிள்ளை. என்றாவது ஒரு நாள் உன் காசு பணங்களைச் சுருட்டிக் கொண்டு எவனுடனாவது ஓடிப்போய்விடுவாள்" என்று ஸபீயத்.

தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்தான் குலச். தராவை யாருக்காவது கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும் என்று அவன் யோசித்தே பார்த்ததில்லை. கிழவன் இப்படிப் பேசும் போது அவனுக்கு மார்பில் பல முட்கள் குத்துவது போல்

இருந்தது. அவன் வாய் உலர்ந்து விட்டது. பதிலே சொல்லத் தோன்றவில்லை.

குலச் அப்படி உட்கார்ந்திருந்ததைப் பார்த்த ஸபீயத், தன் குரலைச் சற்றே தாழ்த்தி மென்மையாக, "அவளுடைய கல்யாணத்தைப்பற்றி இதுவரை யோசனையொன்றும் இல்லையென்றால் நம் ஊமைக்கே கட்டிக் கொடு; தராவின் தாயாருக்கும் இது சம்மதம்; தராதான் மசியவில்லை; இப்போது நீதான் அந்தப் பெண்ணுக்கு எஜமான் மாதிரி; நீ சொன்னபடி நடக்கத்தானே வேண்டும். நீ கல்யாணம் செய்து கொடுப்பதாய்ச் சொன்னால் அவளால் மறுக்க முடியுமா?" என்றான்.

அதற்கு மேலும் குலச்சால் பொறுக்க முடியவில்லை; வேகமாகப் புறப்பட்டான். "நான் போய் வருகிறேன் சித்தப்பா; நேரம் ரொம்ப ஆகிவிட்டது. பகலுக்குள் ஆற்றைத் தாண்டி விட்டால் தான் நல்லது; வைகாசி மழையில் ஆற்றில் பெரிய வெள்ளம் பெருகிறது."

"நல்லது; போய் வா. நான் சொன்னதை ஞாபகம் வைத்துக் கொள். நாம் என்ன புதிதாகவோ சம்பந்தம் செய்து கொள்ளப்போகிறோம்; ஏற்கனவே நமக்குள் நெருக்கம் உண்டு. தராவை எங்கள் வீட்டு மருமகளாகச் செய்துவிட்டால் உனக்கு இந்த வீடும் கிடைக்கும்."என்றான் கிழவன்.

குலச்சுக்குக் கோபம் வந்துவிட்டது; பேசாமல் வெளியேறினான். மேலும் அங்கே நிற்காமல் வீட்டுக்குக் கிளம்பினான். சந்திரனை ஒரு தடவை பார்த்துவிட்டுப் போக விருப்பம்தான்; இருந்தாலும் அந்த ஊரில் அதற்குப்பிறகும் இருக்க மனமின்றிக் கிளம்பி விட்டான்.

"அப்பன் பாட்டன் நிலத்தை விற்கக்கூடாது; லக்ஷ்மி போய் விடும்"

"உனக்கு குழந்தை குட்டிகள் பிறந்தால் பிறக்கும்; இல்லையானால் மற்றொரு கல்யாணம் செய்து கொள்ளத்தான் வேண்டும்"

"பருவப் பெண், வீட்டிற்கு வந்த பருவப் பெண்ணைக் கொடுக்கவா வேண்டும்"

"இன்னுமொரு பெண்.மறுபடி கல்யாணம்.."

"தராவுக்கு ஊமையுடன் கல்யாணம்"

"அவள் தாயாருக்கு இது சம்மதம்தான்"

"கபாஹி தராவை ஊமைப் பயலுக்குக் கொடுக்கச் சம்மதித்தாள்."

"எண்ணூறு ரூபாய்க்கு ஏழு ஏக்கர் நஞ்சை நிலம்...நல்ல பூமி.."

"ஏழு ஏக்கர்..."

"உனக்கு எத்தனை குழந்தைகள்?"

"குழந்தை குட்டிகள்.."

"இல்லாவிட்டால் இரண்டாம் கல்யாணம் பண்ணிக் கொள்..."

"நம்ம ஊமைப்பயலுக்கு தராவைக் கட்டிக் கொடு..."

குலச்சுக்குத் தலை சுற்றுவதுபோல் இருந்தது; ஒன்றும் புரியவில்லை, ஒரே குழப்பம். வழி முழுவதும் இதையே நினைத்துக் கொண்டு நடந்தான்.

தன்சிரியில் ஏராளமான வெள்ளம்; வைகாசி மாதம் மழை வெள்ளம் வந்து எத்தனையோ வருஷங்கள் ஆகி விட்டன. ஆவணி புரட்டாசியில் ஆறு எப்படி ஆகுமோ...சொல்ல முடியாது; இப்போதும் ஒரு சாதாரணமான பெரும் வெள்ளம் வந்தால் அதிகக் கெடுதல் நேராது. நட்டிருக்கும் வயலில் கொஞ்சமாவது அழுகாமல் தப்பித்து விடும்; ஆனால் நடுவயலில் பாய்ந்து விட்டால் அப்படியே வந்துவிட்டால் மாற்ற யாரால் முடியும். தன்சிரியைத் தடுக்கவா முடியும்?

"நம் ஊமைக்குத் தராவை நீ கட்டிக் கொடு. இப்போது நீ சொல்வது நடக்கும்; நீதான் எஜமானன்.."

"பிறக்கும்.. பிறக்கும், இல்லாவிட்டால் இரண்டாம் கல்யாணம்.. வேறு ஒரு பெண்ணை..."

இனிமேல் டாலிமுக்குப் போவதில்லையென்று தீர்மானம் செய்து கொண்டான். ஒரே நாளில் அவனுக்கு ஒன்றுமே பிடிக்காமல் போய்விட்டது. அவன் மனத்தில் ஓர் அமைதி யின்மையும் தீய கவலையும் நிறைந்துவிட்டது. இன்று இவன் கற்பனைக்கே எட்டாத விஷயங்களை கேட்டிருந்தான்.

இல்லை; டாலிம் கிராமத்துக்கும் அவனுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அங்கே அவன் அநுபவித்ததெல்லாம்

துக்கம்தான்; மறுபடியும் அங்கு போனால் துக்கம்தான் ஏற்படும். டாலிம் கிராமத்துக்குப் போனதால் அவன் தன் மனத்திற்குத் தேவையில்லாத அமைதியின்மையைத் தேடிக் கொண்டான். அவன் அங்கு தனக்குள்ள நிலத்தையெல்லாம் விற்றுத் தொலைக்கவேண்டும். அந்த ஊருடன் அவனுக்கிருந்த எல்லா உறவுகளும் முறிந்துவிட்டன; அவன் ஸிபரியா கிராமத்துக்காரனாகவே இருக்கவேண்டும். தன்சிரியாற்றின் மேலண்டைக் கரையில் அவனுக்கு நலமே கிட்டாது; கீழண்டைக் கரைதான் அவனுக்கு அடைக்கலம் தந்திருக்கிறது; அவனைத் தனி மனிதனாக ஆக்கியிருக்கிறது. அவன் கையில் நாலு காசு சேர வைத்திருக்கிறது.

"நீ தான் ஸ்கூல் கமிட்டிக்குத் தலைவனாய் இருக்க வேண்டும்."

"ஸ்கூலுக்கு ஐம்பது ரூபாய் சந்தா தர வேண்டும்..."

"சந்தா கொடுக்கத்தான் வேண்டும்.."

குலச் சந்தா கொடுக்கிறான்; ஸ்கூல் ஏற்படுத்துகிறான். சிபரியாவில் டாலிமில் அவனுக்கு என்ன இருக்கிறது? வீட்டுக்கு வந்தபிறகு அவன் உள்ளத்தில் கனிந்திருந்த துயரமென் மூட்டம் அகலவில்லை.

"என்ன சேதி? எல்லாரும் க்ஷேமம்தானே?" என்று கேட்டாள் கபாஹி.

"ஆம்."

"அம்மா சௌக்கியம்தானே?"

"ஆம்."

"ஸபீயத் கிழவன் வீட்டில்...?"

"நீ ஒருத்தி செத்துப் போகவில்லை. சும்மா இரேன்.."

## இருபத்தாறு

அன்றிரவு குலச்சுக்குத் தூக்கமே வரவில்லை. ஒரே புழுக்கம்; அன்று பகல் முழுவதும் வெய்யிலில் சுற்றும்படி ஆகிவிட்டிருந்தது. யார் யார் வீட்டிலோ டீயும் குடிக்க வேண்டியிருந்தது. ஆன மட்டும் தூங்க முயன்றான். ஆயினும் வெவ்வேறு கவலைகளினால் நன்றாகத் தூங்க முடியவில்லை.

கோழி கூவின உடனே எழுந்து விட்டான். கிழக்கே வானத்தில் அப்போதுதான் சற்றே மங்கலான வெளிச்சம் தெரிந்தது. வீட்டிற் குள் அந்த மங்கலான வெளிச்சம் பரவியிருந்தது. இன்னும் சுக்கிரன் கூட மறைய ஆரம்பிக்கவில்லை. அதன் ஒளி சிறிது சிவப்பாக மாறியிருந்தது. மேற்கு வானம் அப்பொழுதும் ஒரே புகை நிறமான இருளில் மூழ்கிக் கிடந்தது.

சிறிதும் சந்தடி செய்யாமல் அவன் கதவைத் திறந்து கொண்டு வாசலுக்கு வந்தான். ஆற்றின் கரையிலிருந்து குளிர்ந்த காற்று வீசிற்று. காற்றில் ஈரம் இருந்தது. அது உடம்பைக் குளிர வைத்தது. வீட்டு வாசலில் சிறிது ஈரமாயிருந்தது. இரவில் பனி விழுந்திருந்தது. வாசலில் கால் வைத்ததும் குலச்சுக்கு ஒரு நிம்மதியும் இன்பமும் கிடைத்தது. சாகுபடிக் காலங்களில் அவன் இந்த வேளையில்தான் எழுந்திருப்பான். உழவு செய்ய, அந்த நாட்களில் நிற்க நேரம் கிடைக்காது, எதையும் பார்க்கவும் நேரம் கிடையாது. மிக விரைவாக ஏரை எடுத்துக்கொண்டு மாடுக ளுடன் வயலுக்கு ஓடுவான். இப்பொழுது அந்த அவசரம் இல்லை. வானையும் பூமியையும் பார்க்க அவனுக்கு ஓய்வும் நேரமும் இருக்கிறது.

இந்த நேரத்தில் இன்னும் யாருமே எழுந்திருக்கவில்லை. கூவிய கோழிகூடக் கூவிவிட்டு உடனே உறங்கியும் போய்விட்டது போலும். சூரிய ஒளி இன்னும் வரவில்லை. நட்சத்திரங்களும் ஒளி தரவில்லை. பசப்பான நீலவானத்தில் வய ஒளிதான் எங்கும் பரவியிருந்தது. வெள்ளை-நீலம்-பசப்பு நிறம் பழுப்பு வெள்ளை நிழல்கள் தான் எங்கு பார்த்தாலும், இது வானத்தில் சுய நிறம்; தரையில் சுயவர்ணம். மாசற்ற மகிழ்ச்சியுடனும் வியப்புடனும் குலச் நான்கு புறமும் சுற்றிப் பார்த்தான். பூமி உருவம் சிறுத்து அவன் பக்கம் வருகிறது. அவன் மனம் முற்றும் தெளிந்துவிட்டது. தான் அடையும் ஆனந்தத்தை வேறு யாரிடமாவது விரிவாக ஒன்றுவிடாமல் சொல்ல வேண்டும் போல் இருந்தது, அவனுக்கு, சுற்றிப் பார்த்தான்; ஒருவருமே இல்லை.

வாசலில் ஓர் பக்கம் எருமைகள் கட்டிக் கிடந்தன; அவை தூங்கிக் கொண்டிருந்தன. பக்கத்தில் போய் தூங்கும் ஓர் எருமை மாட்டை உசுப்பித் தடவிக் கொண்டிருந்தான். அது ஒரு முறை கண் திறந்து எதிரில் நின்ற குலச்சைப் பார்த்துவிட்டு மறுபடியும் கண்ணை மூடிக் கொண்டது. பசுமாட்டுக் கொட்டிலுக்குப்

போனான். எல்லா மாடுகளும் தங்கள் முதுகின் மேல் தலை வைத்துக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்தன; அவன் சிவப்புக் கன்றின் உடம்பைத் தட்டிக் கொடுத்துவிட்டு அப்பால் சென்றான்.

மறுபடியும் சுற்றியும் பார்த்தான். கிழக்கு வானம் மெல்ல மெல்ல வெளுத்துக் கொண்டிருந்தது. சந்திரனுடைய வெளிச்சமும் மறையத் தொடங்கியிருந்தது. காற்று எங்கிருந்தோ வெளிச்சத்தை நான்குபுறமும் எடுத்து விசிறுவது போல் இருந்தது.

குலச்சின் எதிரில் சூரியகாந்திப் பூவின் செடி நின்றிருந்தது. அதனருகில் சென்றான். சிறிது நேரம் அதன் முகைப் பருவத்து மஞ்சள் பந்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். போன வருஷம் தான் தரா அந்தச் செடியை வைத்தாள்; இப்பொழுது அது அவளுடைய தலையைத் தொடும் உயரம் வளர்ந்திருந்தது. அவன் யதேச்சையாகப் பார்த்துக் கொண்டிருந்தபோதே அந்த முகை சடக்கென்று இதழ் விரித்தது; பந்து போல் இருந்தது ஒரு பெரிய பூவாக மலர்ந்தது. அவன் இதுவரை ஒரு அரும்பு மலர்வதைப் பார்த்ததில்லை. மலர்ந்த பூவைத்தான் பார்த்திருக்கிறான். "அடே, இப்படித்தான் பூ மலருமா?" என்று வாய்விட்டுச் சொல்லி வியந்தான். தன் கண்ணெதிரே மலர்ந்த பூவைக் கண்டதும் அவன் உள்ளத்தில் ஒரு புதிய உணர்வு விழித்தெழுந்தது. தராவைக் கூப்பிட்டு இந்த பூவைக் காட்டினால் அவளுக்கு மிகவும் சந்தோஷமாயிருக்கும்... என்று நினைத்தான். மீண்டும் ஒரு கணம் பூவைப் பார்த்துவிட்டுத் திண்ணைக்கு வந்தான். மறுபடியும் ஆகாசத்தைப் பார்த்தான். கீழ்வானத்தின் இதயத்திலிருந்து வெள்ளை மேகங்களில் ஹிரண்யகர்ப்பனுடைய சிவப்புக் கோடுகள் பதிந்திருந்தன. தூய, அமைதியான வெளிச்சம் பூமி மீது பரவிவிட்டிருந்தது.

வானம் எவ்வளவு அழகாயிருந்தது! பூமிதான் எத்தனை எழில் மயம். தராவை எழுப்புகிறேனே...

உணர்ச்சி பொங்க அவன் உள்ளே வந்து தராவின் அறைக்குள் போனான். நடு அறையில் கபாஹி இன்னும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள். அவளுடைய படுக்கையின் பக்கமாகத்தான் அவன் தராவின் அறைக்குப் போனான். கபாஹிக்குத் தன் நினைவே இல்லை. குறட்டை விட்டுக் கொண்டிருந்தாள். காலை நேரத்து இனிமையான தூக்கம்.

தராவின் படுக்கையை நெருங்கியதும் குலச் சட்டென்று சிறிது நின்றான். உயரமில்லாத சுவர் இடுக்கு வழியாகவும் ஜன்னல்

வழியாகவும் இளங்காலையின் பொன்னொளி வீட்டிற்குள் வந்து கொண்டிருந்தது. தராவின் படுக்கை மேலும், அவள் உடம்பின் மீதும் வெளிச்சம் புகுந்து மெல்ல உட்கார்ந்திருந்தது.

குலச் மௌனமாகத் தராவைப் பார்த்தான்; அவள் தூங்கிக் கொண்டிருக்கிறாள். மல்லாந்து படுத்துக் கொண்டிருக்கிறாள். புழுக்கம் தாங்காமல் அவள் தன் உடையைத் திறந்து கொண்டிருக்க வேண்டும். பால் போல் வெண்மையான அவளுடைய உடம்பு வெளியே தெரிந்தது. யானைத் தந்தம்போல் வெள்ளை வெளேரென்று. நிறைந்து திமிர்ந்த அவளுடைய இரண்டு மார்களும் அவள் மூச்சுவிடும்போது கூடவே உயர்ந்தும் தாழ்ந்தும் போய் வந்து கொண்டிருக்கின்றன. திரண்டுருண்ட அவளுடைய இரண்டு புஜங்களும் படுக்கையில் தளர்ந்து வளைந்து கிடக்கின்றன. ஒரு கை கட்டிலிலிருந்து தொங்குகிறது. இடுப்புக் கச்சை மேலே போய் கிடந்ததால் அவளுடைய இரண்டு வெள்ளை முழங்கால்களும் திறந்திருக்கின்றன.

குலச் வியப்பில் ஆழ்ந்து செயலிழந்தான். அவனுடைய மார்பு நடுங்கிற்று. அப்பா, முழு நிறைவான வடிவம்; இப்படி மதர்த்து நிற்கும் யௌவனம். உடம்பின் இத்தகைய வாளிப்பான மலர்ச்சியை அவன் இதுவரை தன் வாழ்வில் எங்கும் கண்டதில்லை. வெண்ணெய்க்கட்டி போன்ற அவளுடைய உடம்பின் ஒவ்வொரு அணுவிலும் ஆயிரம் கனவுகளின் மோகம் வழிகிறது; ஆயிரம் வேட்கைகளின் அழைப்பு தவழ்கிறது.

வெளியில் பூமியின் மேல் வெளிச்சம் முழுவதுமாய்ப் பெருகித் தராவின் கண்களின் மேலும் மெல்ல வந்து படிந்தது. அவளுடைய இனிய உதடுகளின் இனிய புன்னகையில் ஒரு கீற்றுத் தெரிந்தது. இரண்டு தாமரை மொட்டுக்கள்தான் வானத்தை நோக்கி வழிபடும் அந்த வேளையில் ஆயிரம் இரவுகளின் நெறிகளையும் பிரக்ஞைகளையும் இழக்கும் மீறும் ஆசை உண்டாகிறது.

குலச் சிறிது தராவின் அருகில் முன்னேறினான்; மறுபடியும் அவளுடைய உடம்பை, முழு உடம்பையும் பார்த்தான்; அதன் பிறகு கட்டிலிலிருந்து தொங்கும் கையை மெல்லத் தூக்கி அவள் மார்பின் மீது வைக்க ஆசைப்பட்டான். தரா விழித்துக் கொண்டு விட்டாள்.

அவள் தன் கண்களை மிகவும் எழிலாக மெதுவாகத் திறந்தாள். குலச்சுக்குப் பயமாகத்தான் இருந்தது. சற்று திடுக்கிட்டான்;

ஆனால் கபாஹியின் குறட்டை விடும் தூக்கம் அவனுக்குச் சிறிது தைரியமளித்தது.

தரா, தன் பாவாடையை மேலிருந்து முழங்காலுக்கு இழுத்து விட்டுக் கொண்டு மிகவும் இயல்பாகவே கட்டில் மேலேயே உட்கார்ந்தாள். அவளுடைய கண்களிலிருந்து ஒரு வெட்கம் குழைந்த வெற்றி வழிந்தது. தனது தாராளமான பார்வையால் குலச்சை அமைதியாகப் பார்த்துக்கொண்டே தலையணையின் அடியிலிருந்து தன் ரவிக்கையை எடுத்துப் போட்டுக் கொண்டாள்.

குலச் பேசத் தெரியாமல் நின்றிருந்தான். மலைத்துப்போய், தரா, தன் கண் ஜாடையாலேயே, "சித்தி விழித்துக் கொண்டிருக்கிறாளா?" என்று கேட்டாள். குலச், "இல்லை"யென்று தலையசைத்தான். போர்வையை எடுத்து உடம்பின் மீது போர்த்துக் கொண்டு, கட்டிலை விட்டு இறங்கி, கண் ஜாடைகாட்டி குலச்சை வெளியே போகச் சொன்னாள்.

அவனும் மெல்ல வெளியே போனான்; அவனைத் தொடர்ந்து தராவும் வந்தாள் வாசலுக்கு. இருவரும் கபாஹியைப் பார்த்தார்கள்; அவள் அப்போதும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள். தராவும் அவனுக்கு வலதுபுறத்தில் வந்து நின்றாள். கீழ்வானத்தில் அப்போது காலையின் நிறம் நன்றாக வெளிப்பட்டது. அவன் வானத்தைப் பார்த்தான். பூமி அப்போதுதான் நல்ல வெளிச்சத்தில் நன்றாகத் தெரிந்தது. தரா தலை நிமிர்ந்து குலச்சின் முகத்தைப் பார்த்து, "என்ன சமாசாரம்?" என்று கேட்டாள். அவன் ஒன்றுமே சொல்லாமல் சூரிய காந்திப்பூவின் பக்கம் தன் விரலால் சுட்டிக் காட்டினான். மலர்ந்த பூவைப் பார்த்து அவளுடைய முகமும் மலர்ந்தது. வானத்தின் வெளிச்சம் வந்து அந்தப் பூவைத் தொட்டுக் கொண்டிருந்தது. "என்னிடம் எதற்கு வந்தீர்கள்" என்று கிசுகிசுத்தாள் தரா.

அவனும் அதே ரகசியக் குரலில், "நான் பார்த்துக் கொண்டிருக்கும்போதே இந்தப் பூ மலர்ந்து விரிந்தது; உன்னைக் கூப்பிட்டுக் காட்டவே உன்னிடம் வந்தேன்." என்றான். தரா ஒய்யாரமாய்ச் சிரித்து, "நான் வேறு ஏதோ செய்தி என்று நினைத்தேன்..." என்றாள். அவள் முகம் நாணத்தாலும் சந்தோஷத்தாலும் சிவந்திருந்தது. உடனே குலச் அவள் கையைப் பிடித்து உலுக்கி, "இவ்வளவு பெரியவளாகிவிட்டாய்; படுத்துத் தூங்கக்கூடத் தெரியவில்லையே" என்றான்.

"இங்கே யார் இருக்கிறார்கள்? நீங்கள் மட்டும்தானே வீட்டில்..?"
"சரி, உன் சித்தி எழுந்திருப்பாள், போ."

தரா சற்றே உரத்த குரலில், "இத்தனை நாழி ஏன் தூங்க வேண்டும் எல்லாரும்" என்றாள். இலேசாய் மிதக்கும் மனத்துடனும் ஆசை நிறைந்த சந்தோஷத்துடனும் குலச் கபாஹியின் அறைக்குப் போனான்.

வெளிச்சம் பரவிவிட்டது. நன்றாய் விடிந்துவிட்டது. அப்போதும் கபாஹியின் தூக்கம் கலைந்தபாடில்லை. புழுக்கத்தால் அவள் இரவு பூராவும் தூங்காமல் இருந்திருக்கிறாளோ என்னவோ. அவன் கபாஹியின் அருகில் சென்றான். புரண்டு படுத்துத் தூங்கினாள் அவள். அவளுடைய உதடு கோணியிருந்தது. அவள் உடம்பை விட்டுத் துணி நழுவிக் கிடந்தது. அவள் நிறமும் தராவைப் போலவே சிவந்த வெளுப்புத்தான்; ஆனால் கபாஹியின் மேனியில் தராவின் மென்மையும் நிறைவும் இல்லை. உடம்பிலும் தலையிலும் சில கோடுகள் விழுந்திருந்தன. அவள் முகத்தில் வயதின் தாக்குதல் வெளிப்படையாகவே தெரிந்தது. அவளுடைய தனங்களும் பருத்தும் நிறைந்தவையாகவும் இருந்தாலும் அவை நீண்டு தொங்கிவிட்டன. அவை பருவத்தின் அழகை முழுமையாகத் தேக்கி இருக்கவில்லை.

தோளைப்பிடித்து அவளை எழுப்பினான் குலச். "அடியே எவ்வளவுதான் தூங்குவாய்? எழுந்திரு. பகல் நேரம் ஆகிவிட்டது." அவளும் வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்திருந்தாள். சாதாரணமாக அவள் இத்தனை நேரம் தூங்கமாட்டாள்.

"தரா, கோழிக் கண்டைத் திறந்து விட்டாளா?" கண்ணைத் திறந்து கட்டிலில் உட்கார்ந்திருந்தபடியே கத்தினாள் கபாஹி. ஆனால் அப்போது தரா பாத்திரங்களை எடுத்துக்கொண்டு குட்டைக் கரைக்குப் போய்விட்டிருந்தாள். அவளுக்குச் சித்தியின் குரல் கேட்கவில்லை. கேட்டாலும் கேட்டது போல் காட்டிக் கொள்ளவில்லை.

விடியற்காலையில் சொகுசான சமயம்; குலச்சின் மனத்தில் சந்தோஷம் பொங்கி வழிந்தது. முதல் நாள் டாலிம் கிராமத்திலிருந்து அவன் சுமந்து வந்த துயரும் வேதனையும் இப்போது மறைந்து விட்டிருந்தன. இனம் விளங்காத ஒரு நம்பிக்கையும் விருப்பமும், நன்கு புரிந்த ஒரு மகிழ்ச்சியும் அவனை

மலர்ச்சி அடையச் செய்திருந்தன. அவன் மாட்டுக் கொட்டிலைத் திறந்துவிட்டான். மாடுகளும் கன்றுகளும் வெளியே வந்தன. கறவை மாட்டை ஒரு முளையில் கட்டிவிட்டு மற்றவற்றை வெளியே போகவிட்டான். வாலை உயர்த்தித் துள்ளி கொண்டு கன்றுகள் ஆற்றின் கரைப்பக்கம் ஓடின. கபாஹுியின் மகிழ்ச்சியின் நிறம் சற்றே கலைந்தது. அவளுக்கு குலச்சின் மனமகிழ்ச்சி அசாதாரணமாகப்பட்டது. ஆனால் அவன் மகிழ்ச்சியுடன் இருப்பது அவளுக்கும் சந்தோஷத்தையே கொடுத்தது. விடியற்கருக்கல்முதல் இரவு ஆந்தை கத்தும் வரையில் வேலை செய்யத்தானே தெரியும் இந்த மனுஷனுக்கு; சிரிக்கவும் பேசவும் தெரியாதே. அப்படிப்பட்ட மனுஷன் இன்று இவ்வளவு குதூகலமாய் இருக்கிறார்.

கபாஹுி தராவிடம் வெளிப்படையான எந்த வித மாறுதலையும் காணவில்லை; இவளும் குலச்சைப் போலவேதான் இருப்பாள். தலையைக் குனிந்து கொண்டு வேலை செய்யத்தானே தெரியும் இவளுக்கு. முகத்தில் ஒரு சிரிப்பு இருக்காதே. இப்படியும் ஒரு பருவம் வந்த பெண் இருப்பாளோ.

கபாஹுி தராவின் மனநிலையை அறிய முயற்சி செய்யாமல் இல்லை. அவளுக்கும் கல்யாண வயது வந்துவிட்டிருந்தது. பதினேழு வயது ஆகிவிட்டதே. இருந்தாப்போலிருந்தது வேறு யாருமில்லை; அவள் யாருடன் பேசிச் சிரித்துத் தன் எண்ணங்களையும், ஆசைகளையும் பகிர்ந்து கொள்ள முடியும். எங்கேயாவது போகவும் இங்கே நமக்கு நெருங்கிய பந்துக்கள், குடும்பம் எதுவும் இல்லை. எல்லாருமே புதுப் பழக்கம். மேலும் ஒரு வாலிபப் பெண் எல்லார் வீட்டுக்கும் போவதும் வருவதும் நல்லதுமில்லை. உலகம் பலபடிப் பேசும், குலச்சும் அவள் கல்யாணத்தைப் பற்றி ஒன்றும் யோசிக்கவில்லை. அவள் இந்த வீட்டில் இப்படியிருந்தே கிழவி ஆகிவிடுவாளோ? ஆமாம்; அவளைப்பற்றி யோசித்து ஏதாவது ஏற்பாடு பண்ணாமல் இருக்கையில் அவள் முகத்தில் எப்படிச் சிரிப்பு வரும்? இப்படி இருப்பது நல்லதில்லை. இன்றைக்கு அவன் மிகவும் சந்தோஷமாயிருக்கிறான். இன்னொரு நாள் இப்படி இருப்பானோ மாட்டானோ? இதைப் பேசக்கூட பயமாய் இருக்கிறது. இவனுக்கு அவ்வளவாக புத்தியில்லை என்று நினைக்க முடியாது. புத்தி இல்லாமலா இன்று இவன் இப்படி ஒரு மேலான நிலைக்கு வந்திருக்கிறான்; அவனும் ஏதாவது யோசித்து

வைத்திருப்பான் இது விஷயமாய். ஒரு நல்ல குடும்பத்தில இவளைக் கொடுத்துவிட்டால் அப்புறம் கவலை இல்லை, என்றெல்லாம் கபாஹி திட்டம் போட்டாள்; ஆனால் அன்று முழுவதுமே அதைப்பற்றிப் பேச சந்தர்ப்பம் வாய்க்கவில்லை; தரா நாள் முழுவதும் வீட்டிலேயே இருந்தாள்; அவளை வைத்துக் கொண்டு இதைப் பேச முடியாது. பகலுக்குப்பின் குலச் கபாஹியுடன் வேறு ஏதேதோ பேசினான்.

வைகாசி விழா நாட்களில் கூட இதைப் பற்றிப் பேசவே முடிய வில்லை. அப்போது குலச் பல காரியங்களில் ஈடுபட்டிருந்தான் விருப்பமிருந்தும் கூட அன்று அவன் டாலிம் போகவில்லை. சிபரியா கிராமத்திலேயே சுற்றிக் கொண்டிருந்தான். பல வீடுகளுக்குப் போனான். ஆற்றின் கரையிலும் வயலிலும் தனியாக உலாவினான்.

வானத்தின் கர்ப்பத்தில் ஒரே தண்ணீர் மயம், நீருண்ட கார்மேகங்கள் டோலக்கின் முழக்கையும் ஷனாய் வாத்தியத்தின் இசையையும் கேட்டு பூமிக்கு இறங்கி வந்திருக்கின்றன. காற்றில் தாழம்பூ மணம் கலந்து வீசுகிறது. தன்சிரியின் நீர்ப்பெருக்கின் தாளத்துடன் நடனமே நடக்கிறது. இலவ மரங்களின் பழங்கள் வெடித்து அவற்றிலிருந்து சிதறிய பஞ்சு நான்குபுறமும் பரவியிருந்தது. பறக்கும் மேகங்களுடன் பறக்கும் பஞ்சுக்குப் போட்டா போட்டி போல் இருக்கிறது.

காய்ந்து கிடந்த திலட்களின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு தண்ணீரின் அடியிலிருந்து புல் நுனிகள் தலை தூக்கியிருக்கின்றன. காற்றின் வயிற்றில் உயிர்த்துடிப்புள்ள காட்டின் உயிருள்ள மணம் கலந்திருக்கிறது. ஆகாயத்திலும் காற்றிலும் ஆயிரம் வாழ்வின் ஆயிரம் உயிர்த்துடிப்புக்கள் நிறைந்துள்ளன. குலச்சின் உயரப்பறக்கும் மனத்தை அவனுடைய வீட்டின் நான்கு சுவர்களுக்குள் கட்டிப்போட முடியாது. மனத்திற்கு இறக்கை முளைத்திருக்கிறது; இறக்கையில் வண்ணம் கூடியிருக்கிறது. வண்ணத்துடன் நறுமணமும் கலந்திருக்கிறது. அந்த நறுமணத்தில் உயிருள்ள காட்டின் உயிர் ஊடாடி இயங்குகிறது. குலச்சுக்கு இங்கும் அங்கும் சுற்றிக் கொண்டேதான் இருக்கமுடியும். கட்டிலிருந்து விடுபட்ட உயிர் பறவை கூட்டைவிட்டு நீங்க விரும்புகிறது. துறையில் கட்டிக்கிடக்கும் படகு கடலுக்குச் சென்றுவிட விரும்புகிறது. வைகாசி மாதத்துப் பூமி பழைய கதைகளை மறக்க அறைகூவல் விடுகிறது; எல்லாமே புதியன.

குலச்சின் மனத்திற்குள் ஒரு புதிய ஆள் விழித்து எழுந்திருக்கிறான். காய்ந்த கோரையின் கொழுந்துகளும் பசுமை நிறம் பெறுகின்றன. செடி கொடிகள், புல்பூண்டு எங்கும் வண்ணச்செறிவு மனத்தின் போக்கு முழுவதிலுமே வண்ணக்கலவை.

குலச்சுக்கு ஏழெட்டு டோலக் முழங்க, கபாஹி கைத் தாளம்போட, தராவும் கிராமத்துப் பெண்கள் பலரும் இவனுடன் நாட்டியம் ஆட, குதித்து நடனம் ஆடவேண்டும் போல் இருந்தது. ஆடுகின்ற பெண்களின் முழங்கால் ஆடுசதைகளிலிருந்து வியர்வை பெருக வேண்டும், அவன் கொட்டும் பம்பை வாத்தியத்தின் ஓசையால் வயல்களின் இதயம் நடுங்கவேண்டும், என்று தோன்றிற்று.

குலச் வைகாசி விழா நாட்டியத்திற்குப் போகவில்லை; ஆனால் அவன் மனத்தில் எல்லையில்லாத வைகாசிக் கூத்துக்கள் நடக்கின்றன. அவன் மனம் குதித்து நடனம் ஆடுகிறது.

கலகலவென்றுஓடும் தன்சிரியிடம் அவன் பேசுகிறான். "அம்மா, கொஞ்சம் நிற்க மாட்டாயா? தினந்தோறும் விடாமல் ஓடுகிறாயே, உனக்கு என்ன கிடைக்கிறது? வைகாசி வந்திருக்கிறது; விழா வந்திருக்கிறது. கொஞ்சம் நின்று நடனம் ஆடிவிட்டுத்தான் போனால் என்ன? உனக்கு ஆடத் தெரியாது. பெருக்கெடுத்து ஓடத்தான் தெரியும்; வா...போ......உன்னை ஒரு நாள் கூட ஆடவைக்க முடியவில்லை. எனக்கு வருத்தம்தான். உன் கரையில் நாங்கள் நடனம் ஆடுவோம் ஒரு நாள்; சந்தர்ப்பம் நேர்ந்தால் கொஞ்சம் நின்று பார்த்துவிட்டுப் போ.."அவன் மனம் இன்னும் என்னவெல்லாமோ சொல்கிறது. அது அவனுக்கே தெரியாது. ஒருக்கால் தன்சிரி அவன் மனம் கூறுவனவற்றைப் புரிந்து கொள்கிறாள் போலும். அவள் புரிந்து கொள்ளாவிட்டாலும் அவனுக்கு லட்சியம் இல்லை. கூத்தாட விரும்பினால் ஆட வேண்டும். பாட விரும்பினால் பாடவேண்டும். விழா நடனம் ஆட விரும்பினால் ஆட வேண்டும். இது மனத்திற்கு அவசியம் புயற்காற்று வருவது, தனிசிரி ஓடுவது, இலவம் பஞ்சு பறப்பது, வெள்ளத்தால் கரை உடைவது, எங்கு பார்த்தாலும் அழிவைப் படைப்பது-இதுதான் உயிர் வாழ்க்கை இது தான் விழா. குலச்சின் மனக்கோயிலில் இந்த விழாவின் வண்ணம்தான் ஏறிப் படிந்திருக்கிறது. அவனுக்கு வேறு ஒன்றும் தெரியாது.

# இருபத்தேழு

ஆடி மாதத்தில் இன்னும் சில நாட்கள் மீதமிருந்தன. பள்ளத்து நிலங்களில் நடுவதற்காக விதை தெளித்தான் குலச். ஆற்றின் கரையில் இருக்கும் நிலத்தில் ஐப்பசி மாதத்தில் நடலாம். சாகுபடி ஆரம்பமாகும்போது அவற்றில் தண்ணீர் தேங்கிக் கிடக்கும். அவற்றிற்கு நடுவதற்காகவே கடைசியில்தான் விதை தெளிக்க வேண்டும்.

குலச்சின் நிலத்தில், எங்கிருந்தோ வந்த சந்திரன் அவனைப் பார்த்தான். "இன்னுமா விதை விடவில்லை; ரொம்பத் தாமதம் ஆகிவிட்டதே; ஏன்?"

"இந்த நாற்றுக்கள் எல்லாம் கடைசியில் நடுவதற்காக. நீ எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டான் குலச்.

"இங்கே எல்லாம் எப்படி இருக்கிறது குலச்!"

"எல்லாம் நல்லதுதான்; எங்கிருந்து வருகிறாய் நீ?"

"டாலிமிலிருந்து உனக்கு ஒரு சேதியும் கிடைக்கவில்லையா?"

"இல்லையே—ஒரு சேதியும் வரவில்லையே. நான் அங்கே போய் எத்தனையோ நாட்கள் ஆகின்றன. என்ன சேதி?"

சந்திரன் இரண்டு பீடிகளை எடுத்துக்கொண்டு, ஒன்றை, குலச்சுக்குக் கொடுத்தான். சந்திரன் பற்ற வைத்த பீடியிலே தானும் பற்ற வைத்துக் கொண்டு புகை இழுத்தான் குலச்.

"அங்கே எபிடெமிக் ஏற்பட்டிருக்கிறது."

"என்ன ஏற்பட்டது?" குலச்சுக்கு புரியவில்லை.

மெல்லப் புகையை விட்டுக்கொண்டு, "அங்கே காலரா, பழைய டாலிம் கிராமத்தில் இரண்டு பேர் செத்தும் போய்விட்டார்கள்" என்றான் சந்திரன். அவன் குரலில் சிறிதும் கலக்கம் இருக்கவில்லை.

"காலராவா? எங்களுக்கு தெரியவே இல்லையே; இப்பொழுது நிலைமை எப்படி இருக்கிறது?"

"அது இன்னும் சில பேரை பலி கொள்ளாமல் போகுமா? நாம் சொன்னால் கேட்பதில்லை. வொய்நாட் டை? ஏன் சாகமாட்டான்? குளம் குட்டைகளின் அசுத்தமான ஜலத்தைக்

குடிக்கிறார்கள். ஆற்று நீரைக் கொண்டுபோக முடியாது இவர்களால். அவர்கள் என்ன மனிதர்கள்? ஒரே அழுக்கு எங்கு பார்த்தாலும். ஜலத்தைச் சூடு பண்ணிக் குடியென்று சொன்னால், சிரித்துக் கொண்டே நான் சொன்னதைக் காற்றில் பறக்க விடுகிறார்கள். ஆடி மாதத்தில் வெந்நீர்தான் நாங்கள் குடிப்போம். தை மாதம் குளிர்ந்த ஜலம் குடிப்போம். பச்சைத் தண்ணீரைக் குடித்துச் சாகுங்களேன். எனக்குச் சேதி தெரிந்ததும் அங்கு போனேன். இதைச் சொன்னேன். நானே நேரில் கோலாகாட்டவுனுக்குப் போய் எஸ்.டி.யூவிடம் சொல்லி அரசாங்க டாக்டரை அழைத்து வந்தேன். இஞ்செக்ஷென் போட்டுக் கொள்ள மாட்டார்களாம். அது போட்டுக் கொள்ளாதவன் சாகாமல், வேறு யார் சாவார்கள். லெட் தெம் டை"

"அப்படியென்றால் டாக்டர் வந்திருக்கிறார் அங்கே?"

"எங்கே வருவார்? எவனாவது 'டாலிமுக்கு வருவானா? நான் போய் அழைத்து வந்தேன். இப்போது நான்கு நாட்களாக அங்கே இருக்கிறார். இஞ்செக்ஷென் போடுகிறார். புதிதாக யாரும் நோய் வாய்ப்படவில்லை. இதனிடையில் நாஹர் இறந்து போய் விட்டான்"

"யார் செத்துப் போய்விட்டான்?"

"நாஹர். கபாஹியை முதலில் கல்யாணம் செய்துகொண்ட அதே நாஹர்தான். நல்ல வாலிபமான ஆள். யங் மேன். என்ன பண்ணுவது."

நாஹர் இறந்து போனதால், குலச்சுக்குச் சந்தோஷம் ஏற்பட வேண்டுமா அல்லது துக்கம் ஏற்படவேண்டுமா? இதுபற்றி அவனுக்கே நிச்சயமாய் ஒன்றும் புரியவில்லை. அவனுக்கு ஓரளவு இது நல்லதாகவே பட்டது. இனிமேல் நாஹர் இல்லை. திடீரென்று குலச், "ஸபீயத், கிழவன் வீட்டில் ஒன்றும் நடக்கவில்லையே?" என்றான்.

"அங்கே ஒன்றும் நடக்கவில்லை. நேருமோ என்று அறிகுறியைப் பார்த்து உடனே இஞ்செக்ஷென் போட்டோம். இன்னும் சிலரும் இஞ்செக்ஷன் செய்து கொண்டார்கள். பிரிவன்ஷன் இஸ் பெட்டர் தேன் க்யூர்."

குலச்சுக்கு இந்த விஷயம் பிரியமாகபடவில்லை. காலராவில், ஸபீயத், சேனியின் அப்பன் முதலிய எல்லாரும் செத்திருக்க வேண்டும். சாக வேண்டியவர்கள் சாவதில்லை.

"இந்த ஊரைப்பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ளத்தான் நான் வந்தேன். ஜனங்கள் இங்கிருந்து அங்கே போவார்கள்; அங்கிருந்தும் இங்கே வருவார்கள். எப்படியோ இங்கும் பரவ வழி இருக்கிறது. காலரா தொற்று நோய். அது ஸ்ப்ரெட் ஆகும்."

"இதுவரை நான் இதுபற்றிக் கேள்விப்பட்டதில்லை. இந்த வியாதி எங்கள் ஊரில் வந்ததும் இல்லை"

இருவரும் வீட்டுக்குப் போனார்கள். ஆடி மாதத்தில் கூடச் சந்திரன் பின்னால் கயிறு கோத்து ஸாண்டல் போட்டுக் கொண்டிருந்தான். கால்சட்டையை முழங்கால் வரை தூக்கி விட்டுக் கொண்டிருந்தான். கண்களுக்குக் கருப்புக் கண்ணாடி அணிந்திருந்தான். அவன் முகத்தில் நீண்ட தாடி உண்டாகி யிருந்தது. ரொம்ப நாட்களாக க்ஷவரம் பண்ணிக் கொள்ளவில்லை. நேரமே கிடைக்கவில்லையோ என்னவோ.

ஒரு விஷயம் வழியில் நினைவு வந்தது குலச்சுக்கு. "டாக்டரை எங்கள் ஊருக்கும் ஒரு தடவை அழைத்துவர முடியுமா?" என்று கேட்டான்.

"டாக்டரை அழைத்துவர வேண்டுமா? ஏன், எதற்கு?"

"சேனிமாயிக்காக..உனக்கு நினைவில்லையா? அந்த..."

"மோலோகா மருமகள் தானே? அவள் அந்த நாளில் உனக்கு."

"ஆமாம் தம்பி, அவளுடைய புருஷனுக்கு வியாதி. மிகவும் பழைய வியாதி. நீண்ட நாள் வியாதி. டாக்டர் வந்து ஒரு முறை பார்த்தால்."

"இவர் எபிடெமிக் டாக்டர்தான்; அவனுக்கு என்ன வியாதி?"

"ஏதோ இருமலும் காய்ச்சலும், இழுப்பு, ஆஸ்த்மா என்பார்களே அதுதான்."

"டாக்டர் இப்போது பார்த்தாலும் சிகிச்சை செய்ய முடியாது. காலராவுக்காகத்தான் அவர் வந்திருக்கிறார்."

"வைத்தியம் தேவையென்றால் பின்னால் செய்யட்டும். அவனை கோலாகாட் அரசாங்க ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனாலாவது பிழைக்க மாட்டானோ என்று எங்கள் சபலம். இந்த டாக்டர் ஒரு தடவை இங்கே பார்த்துவிட்டு, கோலாகாட்டுக்கு அழைத்து வருவதற்கான ஏற்பாடு செய்யலாமோ என்று எண்ணுகிறேன்."

இருவரும் குலச்சின் வீட்டு வாசலுக்கு வந்து சேர்ந்தார்கள்.

"தரா, ஏ" தரா!" என்று கூப்பிட்டான் சந்திரன். அவளும் உள்ளிருந்து வந்தாள். "அடே அண்ணன்- நீங்களா?" என்றாள்.

"உன் அண்ணன் வராமல் ராஜகுமாரன் வருவானோ உனக்கு? ஒரு டம்ளர் டீ கொடு சுருக்க. என் தொண்டை உலர்ந்து ஒட்டி விட்டது."

சினமும் சிணுங்கலுமாக அவனை முறைத்துப் பார்த்துவிட்டு, தரா விரைவாகச் சமையல் அறைக்குப் போனாள். குலச்சுக்கும் வெய்யிலில் தாகம் எடுத்திருந்தது.

"கொஞ்சம் உட்காரும் சந்திரா; நான் போய் கைகால்களைச் சேறு போக்கிக் கழுவிக்கொண்டு வருகிறேன். தரா, முடிந்தால் கொஞ்சம் ஏதாவது சிற்றுண்டியும் தயார் செய்." என்றான் குலச்.

ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு, கண்ணாடியையும் கழற்றிவிட்டு, "உன் சித்தி இல்லையா?" என்று கேட்டான் சந்திரன்.

"ஏன், என் கையால் நீங்கள் டீ குடிக்க மாட்டீர்களா!" என்றாள் தரா உள்ளிருந்தே.

"ஊம், அப்படியா, பதில் கொடுக்கக் கற்றுக் கொண்டிருக்கிறாயே; உன்னிடம் இந்த குணம் இருப்பதால்தான் இத்தனை நாளாகக் கல்யாணம் ஆகாமல் வீட்டில் அடைப்பட்டுக் கிடக்கிறாய்."

"ரொம்பச் சரி; இருந்து விட்டுப் போகிறேன் அப்படியே. நீங்கள் கல்யாணம் செய்து கொண்டு குழந்தை குட்டிகள் பெற்று, அப்பா ஆகி விட்டீர்களோ? எங்களிடம் இப்படிப் பேச உங்களுக்கு வெட்கமாக இல்லையா?"

"சரி, இன்னும் இரண்டு வருஷம் கழித்துப் பார், பட்டணத்திலிருந்து ஒரு ராஜகுமாரியைக் கொண்டு வந்து வீட்டில் வைத்துக் கொள்கிறேன். நீயே பார்க்கலாம்."

"அதனால்தான் கிராமமே பிடிக்கவில்லையோ. எனக்கு அது முன்னாடியே தெரியும்"

குலச் கனைத்துக் கொள்ளும் சத்தத்தையும் கேட்டுத் தரா வாயை மூடிக் கொண்டாள். சிறிது நேரத்தில் தரா இருவருக்கும் சிற்றுண்டியும் டீயும் வைத்துவிட்டுப் போனாள். தராவைப் பார்த்துவிட்டுச் சந்திரன் மிகவும் கம்பீரமாக இருப்பதற்கு

முயன்றான். "தராவுக்குக் கல்யாணம் ஆக ஏதாவது ஏற்பாடு செய்திருக்கிறாயா இல்லையா? இவள் பெரியவள் ஆகிவிட்டாள்"

சந்திரனுடைய கேள்வியைக் கேட்டதும், குலச் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஆகாரம் அவன் தொண்டையில் சிக்கிக் கொண்டது; ஒரு வறண்ட பார்வையால் சந்திரனைப் பார்த்தான்.

"கண்ட இடத்தில் கட்டிக் கொடுத்துவிடக் கூடாது; நம் சமூகத்தில் பெண்கள் பிறந்த உடனே கல்யாணம் செய்து கொடுப்பதைப்பற்றியே பேசுகிறார்கள்? அவளை ஒரு வார்த்தை கேட்டு, அவளுடைய அபிப்ராயத்தைத் தெரிந்து கொள்ளும் உணர்ச்சியே இருப்பதில்லை, யாருக்கும். கட்டிக் கொடுப்பதானால் நல்ல குடும்பமாகப் பார்த்து நல்ல பையனுக்குக் கொடுக்க வேண்டும். இவளுக்கு நல்ல பையனே கிடைப்பான்." என்றான் சந்திரன்.

குலச் அரைகுறையாகத்தான் சிற்றுண்டி சாப்பிட்டான்; டீயையும் மிகவும் விரைவாகக் குடித்துத் தீர்த்தான். எப்படியோ சமாளித்துக் கொண்டு, "அப்படியே பார்க்கிறேன்...ஆகட்டும். ஒரு பீடி கொடு.. ஏ தரா, நெருப்பு கொண்டு வா." என்றான்.

சுவரின் அந்தப் பக்கத்தில் தரா மிகுந்த ஆவலுடன் நின்றிருந்தாள். அவள் மனம் அடித்துக்கொண்டது. குலச்சின் பதிலுக்காக, தூக்கு தண்டனைக்காகக் காத்துக் கொண்டிருக்கும் ஒரு குற்றவாளியைப் போல, அவள் மூச்சை அடக்கிக் கொண்டு நின்று இருந்தாள். குலச் ஒன்றுமே சொல்லாமலிருந்தது அவள் பயத்தைப் போக்கவில்லை என்றாலும், ஓரளவு ஆறுதல் பெற வைத்தது. கீழ் நோக்கிய கண்களுடன் வந்து அவள் ஒரு எரியும் தணலை குலச்சின் கையில் கொடுத்துவிட்டுச் சென்றாள்.

"தரா, நீ பயப்படாதே; ஐ ஆம் யுவர் பிரதர்; உன் கல்யாணம் ஏனோதானோ என்று நடக்க விட மாட்டேன். நல்ல பையனாகத் தகுந்த வரனாகப் பார்த்துக் கொடுப்பேன் உன்னை." என்றான் சந்திரன்.

"போ அண்ணா" என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள் தரா.

சந்திரன் மிகவும் கம்பீரமாய் குலச்சுக்கு விளக்கம் கொடுத்தான். முன் காலத்தில் நமது ஹிந்துப் பெண்களுக்குச் சுயம்வரம் நடந்தது. பெண் பார்த்தும் பேசியும் பையனைத் தேர்ந்தெடுத்தாள்; தானே

அவன் கழுத்தில் மாலை அணிவித்தாள். இந்த நாளில் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் ஆணுக்கும் பெண்ணுக்கும் மனப்பொருத்தம் இருந்தால்தான் கல்யாணம் செய்வார்களாம். நம்முடைய கிராமங்களில்தான் இப்படிப் பையனையும் பெண்ணையும் பலாத்காரம் பண்ணிக் கல்யாணம் செய்து வைக்கிறார்கள். இன்றைக்கும் அந்த வழக்கம் மாறவில்லை. இது தவறு; தராவுக்கும் ஒரு நாள் கல்யாணம் செய்ய வேண்டும்; ஆனால் அவளுடைய சம்மதத்தைப் பெற்ற பிறகுதான் நடக்க வேண்டும். ஊரில் சில பெண்கள் பையன்களுடன் ஓடிப் போகிறார்கள். இதுவும் ஒருவகையில் தவறே இல்லையென்றுதான் தோன்றுகிறது. மனம் ஒன்று பட்டுச் செய்து கொள்வதுதான். உண்மையான திருமணம்.

குலச் தலைகுனிந்து கொண்டு இதைக் கேட்டாளே தவிரப் புரிந்து கொள்ளவில்லை.

"தராவுக்குக் கல்யாணம் ஆகத்தான் வேண்டும் அவளுக்கு நல்ல குடும்பத்துக்குப் பையனாய்த் தேட வேண்டும்" என்று சந்திரன் சொன்னதால், குலச்சுக்குக் கவலை ஏற்பட்டது. அவள் கல்யாணத்தைப் பற்றிப் பேசுவதே மிகவும் கஷ்டமாயிருக்கிறதே; அந்த எண்ணமே ஏன் இவ்வளவு கொடியதாய் இருக்கிறது. தராவை அவன் எப்படி வெகுதூரம் விலக அனுப்ப முடியும்? அவளைத் தனியாக எப்படிப் பிரிப்பது."

சரி, தராவே அதை விரும்பவில்லை என்றால். காதல் தீ எவ்வளவு விரைவில் எரிகிறதோ, அத்தனை விரைவில் அணைவதில்லை. அணைந்து தணிய வேண்டிய சமயத்தில்தான் கொழுந்துவிட்டு எரிகிறது.

சந்திரன் கிளம்பத் தயார் ஆனான். "நான் மறுபடியும் டாலிமுக்குப் போவேன். நீ கவலைப்படாதே; முடிந்தால் டாக்டரை அழைத்து வருகிறேன். நாம் சேனிமாயியின் புருஷன் வீட்டுக்கே போவோம். டாக்டர் அட்வைஸ் பண்ணினால், அவனை டவுனுக்கு அழைத்துப் போக ஏற்பாடு செய்கிறேன். நான் இருக்கிறேன். நீ ஏன் கவலைப்படுகிறாய்?" என்றான்.

சந்திரன் புறப்படலானான். தரா உள்ளேயிருந்து வெளியே வந்து. "அண்ணா கிளம்பியே விட்டாயா?" என்று கேட்டாள்.

"கிளம்பாமல் உங்களுடன் உட்கார்ந்து வேடிக்கை பண்ணிக் கொண்டிருந்தால் என் காரியம் என்ன ஆகும்? டாலிமுக்கு மறுபடி

போக வேண்டியிருக்கும். நல்லது, தரா நான் போய் வருகிறேன்-" என்றான் சந்திரன்.

"ஏன் நம் ஊரிலேயே ஒரு ஆஸ்பத்திரி வைக்கக்கூடாது; உன்னால் முடியாதா?" என்று கேட்டான் குலச்.

"முடியாதென்று யார் சொன்னது? ஹரூ ஸேஸ்ரீ கிராமத்து ஜனங்கள் விரும்பினால் நடக்காததே இல்லை; இந்த எண்ணம் எனக்கு நீண்ட காலமாகவே உண்டு; ஆனால் என்னிடம் பணம் இல்லையே; வெறும் வாய்ப் பேச்சு மட்டும் தானே இருக்கிறது? நீ இதில் ஆரம்ப முயற்சிக்குக் கை கொடுத்தால் நானும் இதில் முழு மூச்சுடன் ஈடுபடுவேன்; இது ரொம்ப அவசியம்; ஒரு ஆஸ்பத்திரிக்கு அவசியம் வந்து விட்டது..."

"ஆகா...நான் தயார்..." என்றான் குலச். மீண்டும் இதைப்பற்றி ஆலோசிப்போம் என்று சொல்லிவிட்டு சந்திரன் போய்விட்டான்.

குலச் தராவைப் பார்த்தான், தலையைத் தூக்கி, அவளும் அவனைப் பார்த்தாள். குலச் தலை குனிந்து கொண்டான். அவனுக்கு ஒருவிதமான பயம் தோன்றிற்று. ஏதோ கண்ணுக்குத் தெரியாத சதியொன்று தன்னிடமிருந்து தராவைப் பிரித்துத் தனியே கொண்டு போக விரும்புகிறது.

## இருபத்தெட்டு

நடவு காலம், வேறு எதையும் பற்றி நினைப்பதற்கே நேரம் இல்லை. சில தினங்களுக்குள் நடவு போட்டு முடிக்க வேண்டும். ஒரு நாள் தாமதித்தால் அது பெரிய நஷ்டமாய்விடும்.

கபாஹியும் தராவும் நாற்று நடுவதில் மிகவும் கெட்டிக்காரர்கள். அவர்கள் கையில் அத்தனை வேகமும் சுறுசுறுப்பும் உண்டு. ஒரு வேளையில் ஒரு ஏக்கர் நட்டுவிடுவார்கள் இருவரும் சேர்ந்து. தரா ஒரே மூச்சில் இருபது கட்டு நாற்று பறித்துவிடுவாள்; அவளுக்குக் களைப்பே இருப்பதில்லை. கால நிலை நன்றாயிருந்தது. ஆடி மாதம் பூராவும் மழை பெய்து கொண்டிருந்தது. ஆவணி மாதம் முழுவதும் வெய்யில் கொளுத்தியது. மண் கெட்டிப் பட்டிருக்கிறது; ஆகவே பயிர் செய்ய வசதியாய் இருக்கும். பெரிய வெள்ளம் வருவதற்கு முன்பு வெய்யில் எரிக்கும் நாட்களில் நட்டுவிட்டால் நன்றாகப் பயிர் பிடித்துவிடும். பிறது பயப்பட வேண்டியிராது.

காகமும் கோழியும் விழித்துக் கொள்வதற்கு முன்பாகவே எழுந்து குலச் வயலுக்குப் போகிறான்; கபாஹியும் தராவும் அவனுடனேயே எழுந்து விடுகிறார்கள். மாடுகளைக் கறந்து உணவு தயார் செய்கிறார்கள். நெல்லைக் குத்துகிறார்கள்; பிறகு குலச்சுக்குக் காலைச் சாப்பாட்டை எடுத்துக் கொண்டு இருவரும் போகிறார்கள். ஏர் உழுத பள்ளத்திலோ அல்லது மண் வெட்டிய பள்ளத்திலோ, கையாலேயோ அல்லது மூங்கில் கூடையாலோ மீன் பிடிக்கிறார்கள். பிறகு நடவு இருந்தால் நடுகிறார்கள்; இல்லா விட்டால் களை எடுக்கிறார்கள். சில நாள் கபாஹி வீட்டிலேயே தங்கிவிடுகிறாள். அன்று வயலில் அதிக வேலை இருக்காது; இருக்கும் வேலையைத் தராவே தனியாகச் செய்துவிடுகிறாள். அவள் பகலில் வீட்டில் சமைக்கிறாள். நேரம் கிடைத்தபோது தறியில் உட்கார்ந்து நெய்கிறாள்.

வெய்யிலில் முகம் சிவக்கச் சிவக்கவேலை செய்யும் தராவைப் பார்த்து மகிழ்ந்து கொண்டே குலச் ஏர் ஓட்டுகிறான். மண்ணை அதற்கான ஆயுதத்தால் தூளாக்குகிறான். தராவுடன் ஏதாவது பேசுகிறான். வெய்யில் அதிகமாகும்போது இருவரும் மாமரத்தில் அடியிலோ அரசமரத்தினடியிலோ உட்காருகிறார்கள். குலச் பீடி குடிக்கிறான். தரா சேறுபட்ட போர்வையால் முகத்தைத் துடைத்துக் கொள்கிறாள். ஒரு டம்ளர் தண்ணீர் குடிக்கிறாள். பிறகு வயலில் இறங்கிவிடுகிறாள். சில நாள் கபாஹி வயலிலும் தரா வீட்டிலும் இருக்கிறார்கள்.

அன்று கடுமையான வெய்யில். உழுது போட்ட வயலில் கிடந்த தண்ணீரும் சேறும் கூடக் கொதித்து விட்டிருந்தன. எருமையும் காளையும் உழவில் போக மறுத்தன. வெப்பம் மிகவும் கொடுமையாய் இருந்தது. கபாஹியும் குலச்சும் கரையேறி வந்தார்கள். இந்த வெய்யிலில் வயலில் நிற்க முடியாது. இருவரும் வந்து மரத்தடியில் உட்கார்ந்தார்கள். குலச்சின் முதுகு வெய்யில் காய்ந்து சிவந்திருந்தது. அவன் தன் முதுகைக் கபாஹியிடம் காட்டிச் சொடுக்கு எடுக்கச் சொன்னான். அவன் அருகில் வந்து கபாஹி அப்படியே செய்தாள். அந்தப் பக்கம் மூங்கில் கொத்திலிருந்து காற்று அடித்தது. அவர்களுக்குக் கொஞ்சம் களைப்பு நீங்கிற்று. பாதி நிலம் பாக்கியிருந்தது நடவு போட, இன்னும் சில நிலங்களில் இரண்டாவது சாலே உழவில்லை இன்னும். குலச்சுக்கு அதே கவலை. இன்னும் நான்கு

பெண்பிள்ளைகளை நடவுக்கு அமர்த்திக் கொண்டால்தான். ஆவணி மாதத்திற்குள்ளாவது வேலைகளை முடிக்கலாம்; இதைத்தவிரப் புதிய நிலம் அப்படியே கிடக்கிறது. நடவு நட்டுக் களையெடுத்துவிட்டால் எல்லா வேலையும் ஆகிவிட்டதாக நினைக்க முடியுமா? ஒரு ஜோடிக் காளை சும்மா கிடக்கிறது. ஒரு மாதத்தில் பாதி நாள் உழுவதற்கு வேறு ஆண் வேண்டியிருக்கும்; ஒருவனாய் எவ்வளவு வேலைதான் செய்யமுடியும். வேறு ஒருவன் உழுதால் குலச்சுக்குத் திருப்தியே ஏற்படுவதில்லை. சில பேர் உழுதால் மண்ணே புரள்வதில்லை; எப்படியும் ஒரு ஆளாவது வைத்துக் கொள்ளாவிட்டால் வேலை முடியாது.

குலச்சின் எண்ணத்தைத் தெரிந்து கொள்ள விரும்பிக் கபாஹி, "உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன்.." என்றாள்.

"என்ன விஷயம்?"

"மோலோகாவின் மகன் திகர் இங்கே அடிக்கடி வருகிறான்; போகிறான். அவர்கள் வீட்டில் வயல் வேலையும் தோட்ட வேலையும் ஏதோ பேருக்குத்தான் இருக்கிறது. அவனையே நாம் வைத்துக் கொண்டால் என்ன தப்பு?"

குலச் வயலையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். பதிலே சொல்லவில்லை.

"மற்றொரு சமாசாரம்—" என்றாள் கபாஹி.

அதற்கும் பதில் சொல்லாமல் அவன் அவள் சொல்வதை கவனிக்கத் தயாரானான். "நீங்களே தனியாக இத்தனை வேலைகளையும், வயல், தோட்டம் வீடு வாசல் எல்லாவற்றையும் கவனிக்க வேண்டியிருக்கிறதே. நாம் திகரை வீட்டு மாப்பிள்ளை ஆக்கிக் கொண்டு விடுவோமே. பையனும் கெட்ட பையன் இல்லையே...என்று பார்க்கிறேன்.."

"என்ன?" என்று இரைந்து கத்தினான் குலச்; அவன் கத்தியதில் கபாஹி பயந்துபோனாளே தவிரப் பேச்சை நிறுத்தவில்லை. "நாம் தராவைச் சின்னக் குழந்தையாக நினைத்துக் கொண்டிருக்கலாமே தவிர அவள் சிறியவள் இல்லை, இன்று இல்லாவிட்டால் நாளை எவனுக்காவது அவளைக் கொடுத்துத்தானே ஆகவேண்டும். திகரைப் பிடிக்கவில்லையானால் வேறு ஒரு பையனைப் பாருங்கள். உங்களுக்கு இதைப் பற்றிக் கவலையே இல்லையே.."

குலச் சட்டென்று எழுந்துவிட்டான். "பேசாமல், இரு. வேண்டுமானால் உனக்கு ஒரு வீட்டு மாப்பிள்ளையைத் தேடிக் கொள்; எனக்குத் தெரியாது அது. முன்னொருதரம் ஸபியத் கிழவன் மகனுக்கு அவளைக் கொடுக்க, நிக்கா செய்ய விரும்பினாய் அல்லவா நீ? இந்தத் தரம் உனக்கு மோலோகாவின் மகன் கிடைத்தான். நீங்கள் இரண்டு பேருமே போய்விடுங்கள்; எங்கே இஷ்டமோ அங்கே போங்கள்; யாருடன் போகவேண்டுமோ அவனுடன் போங்கள்; முடிந்தால் நான் ஒருவனே எல்லா வேலைகளையும் செய்து கொள்கிறேன். செய்யாவிட்டாலும் பேசாமல் இருக்கிறேன். இன்னொருவனுக்குப் பின் நான் வேலை செய்யப்போவதில்லை. பந்தகமும் வேண்டாம். பதிலாக வீட்டு மாப்பிள்ளையும் வேண்டாம். வீட்டு மாப்பிள்ளை உழுத நிலத்தில், விளைந்ததை நான் தின்ன வேண்டிய அவசியமில்லை." என்று கர்ஜனை செய்துவிட்டு திடுதிடுவென்று வயலில் இறங்கிவிட்டான். நிழலில் படுத்துக்கிடந்த எருமைக் கடாவின் முதுகில் பலமாகச் சாட்டையால் ஒரு அடி கொடுத்தான். அது பயந்து கொண்டு தும்பையும் கலப்பையையும் இழுத்துக்கொண்டு ஓட ஆரம்பித்தது.

அவனுடன் கூடவே தானும் வயலில் இறங்கிய கபாஹி அவன் அருகில் போனாள். "நான் அப்படி என்ன சொல்லிவிட்டேன், இத்தனை கோபம் வரும்படியாக? வீட்டு மாப்பிள்ளையென்று சொன்ன உடனேயே அவன் அப்படி ஆகிவிட்டானா என்ன? கடாவை ஏன் அடிக்க வேண்டும். என்னை அடியுங்கள் சவுக்கால். நான் ஏதோ சொன்னேன். அதற்காக இத்தனை கோபமா?" என்று பயந்து கொண்டே சொன்னாள்.

இருவரும் வயலிலிருந்து பேசிக் கொள்ளாமல் வீட்டுக்குப் புறப்பட்டனர். அவன் முகம் துயரம் தோய்ந்திருப்பதைக் கண்டாள் கபாஹி. கூடவே கோபமும் முகத்தில் தெரிந்தது. அவன்தான் எதையுமே பேசுவதில்லையே. வழியில் கபாஹி மெதுவாய். "கண்ணைத் திறந்து கூட என்னைப் பார்க்க உங்களுக்கு இஷ்டமில்லை என்று தெரிகிறது; அப்படி நான் என்ன செய்தேன் என்றும் புரியவில்லை.." என்றாள். பதில் இல்லை. வீட்டுக்கு வந்தாகிவிட்டது. தராவும் எப்போதும் வாயைத் திறப்பதில்லை. வீட்டில் யாருமே உயிருடன் இல்லையோ என்று தோன்றிற்று. தரா சாப்பாடு பறிமாறினாள். இருவரும் பேசாமல் சாப்பிட்டனர். குலச் குளிக்கக்கூடப் போகவில்லை. ஒரு செம்பு தண்ணீரில் கை கால் கழுவிக் கொண்டான்.

தரா அவர்கள் இருவரையும் பார்த்தாள். நிலைமையைப் புரிந்து கொள்ள அவளால் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை; ஆனால் இருவருக்குள்ளும் ஏதோ நடந்திருக்கிறது பிரமாதமாய் என்று மட்டும் புரிந்து கொண்டாள்.

சாப்பிட்ட உடனே குலச் எருமைக் கடாவைக் குளிப்பாட்டிக் கொண்டு வந்து கட்டினான்; அப்படியே வந்து கட்டிலில் படுத்துவிட்டான். கபாஹியும் வீட்டு வாசலில் பாயை விரித்துப் படுத்துக் கொண்டாள். தரா ஒருவரையும் ஒன்றும் கேட்டுக் கொள்ளவில்லை. சிறிது நேரத்திற்கெல்லாம் கபாஹி எழுந்து, ஒரு வெற்றிலை போட்டுக் கொண்டு, யாரிடமும் எதுவும் சொல்லாமல் வயல் பக்கம் போய்விட்டாள். வீட்டிலிருந்து வயல் அரை மைல் தூரம் இருக்கிறது. கொளுத்தும் வெய்யிலில் கபாஹி வயலுக்குப் போவதைத் தரா பார்த்தாள். கபாஹி மூங்கில் கொத்தில் மறைந்து விட்டாள். கடுமையான வெய்யில், எங்கும் நிசப்தம். நீலவானத்திலிருந்து வெள்ளை வெய்யில் உருகி பூமியில் வழிந்து கொண்டிருந்தது. மரங்களில் இலைகள் மெல்லத் தயங்கி அசைந்தன. தரா வாசலில் வந்து சுற்றும் முற்றும் பார்த்தாள் யாரும் இல்லை. எங்கும் அசைவற்ற சூன்யம் நிறைந்திருந்தது. ஒரே வெய்யில். கண்ணுக்கெட்டிய தூரத்தில் ஆவணி மாதத்துப் பச்சை நிலங்கள். தரா உள்ளே வந்தாள். சற்று நின்றாள். பிறகு நேரே குலச்சின் கட்டிலுக்கு அருகில் சென்று, அவனுடைய திறந்த முதுகில் கையை வைத்தாள். ஆடாமல் அசையாமல் எப்போதும் போல் தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு குப்புறப்படுத்திருந்தான் அவன். தரா கட்டிலில் உட்கார்ந்து குனிந்து அவன் முகத்தருகில் தன் முகத்தை வைத்துக் கொண்டு, "இன்று என்ன நடந்தது? ஏதாவது புது சமாசாரமா? என்னவோ நடக்கிறது..." என்றாள். அவன் அப்படியே கிடந்தான். தரா அவன் தலையைப் பிடித்துத் தூக்கித் தன் முகத்தில் வைத்துக் கொண்டாள். அவனுடைய கண்கள் பாதி மூடியிருந்தன. "உங்கள் உடம்பு ஏன் இப்படிச் சுடுகிறது? உடம்பு சரியில்லையா?"

கண்களை முழுவதும் திறந்து அவளைப் பார்த்தான். தரா தன் தலையை இழுத்துக் கொண்டு, "ஏதோ நடந்திருக்கிறது; என்னிடம் கூடச் சொல்லமாட்டீர்கள். சரி..

தரா போக ஆரம்பித்தாள். புரண்டு மல்லாந்து படுத்துக் கொண்டு, ஒன்றும் சொல்லாமல், ஆழ்ந்த யோசனையுடன் அவளைப் பார்த்தான் குலச்.

"என் முகத்தில் என்ன பார்க்கிறீர்கள்?" என்று கேட்ட தராவின் கைகளைப் பற்றித் தன் கை மீது வைத்துக் கொண்டு, "நீ- நீ என்னை விட்டுப் போக முடியுமா தரா?"

"நீங்கள் சொல்வது புரியவில்லையே. நான் உங்களைவிட்டு எங்கே போவேன்? நான் போவதற்கு வேறு யார்தான் இருக்கிறார்கள்?"

"உன்னை அழைத்துக் கொண்டு போகிறவன் யாராவது வந்தால்..?"

இதைக் கேட்டதும் துயரம் சூழ்ந்து தரா தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். பிறகு குலச், "உன் சித்தி.. உன்னை- உனக்காக ஒரு விட்டு மாப்பிள்ளை ஆக்கிக் கொள்ள ஒரு பையனைக் கொண்டு வர விரும்புகிறாள்-"

தராவுக்கு வேதனை தாங்க முடியவில்லை. கண் கலங்க அவனைப் பார்த்துக் கொண்டிருந்த பின், தன் இரண்டு கைகளாலும் அவன் கழுத்தைப் பற்றிக் கொண்டு, அவன் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு கேவிக் கேவி அழத் தொடங்கினாள். குலச் அவள் முதுகில் தடவிக் கொடுத்து, "எனக்கும் வேறு யாரும் இல்லை. நீ போக விரும்பினால் உன்னைக் கல்யாணம் செய்து கொடுக்கிறேன். நல்ல இடமாகவே பார்த்துக் கொடுக்கிறேன்-" என்றான்.

தன் உள்ளங்கையால் அவன் வாயைப் பொத்தினாள் தரா. அவனுடைய முகவாய்க்குக் கீழே முகத்தைப் புதைத்துக் கொண்டு அவனுடைய மார்பிலே சாய்ந்தபடி கேவிக் கேவி அழுதாள். அவள் தலைமுடியைக் கோதிய வண்ணம், "நீ ஏன் அழுகிறாய்? கிளம்பு, வயலுக்குப் போவோம். உன் சித்தியே எல்லா வேலைகளையும் செய்ய விடக்கூடாது. நட வேண்டிய நிலம் நிறையக் கிடக்கிறது-" என்றான் குலச்.

தரா அவன் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளாமலேயே அவனைப் பற்றிக் கொண்டு, அவன் மார்பில் சுருண்டு கிடக்கும் சிறு பெண் குழந்தையைப் போல் கிடந்தாள்.

தரா அழுதிருந்தாள். அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் கொட்டிக் கொண்டிருந்தது. குலச்சுக்குத் தன் மார்பில், புதிதாய்த் திருத்தப்பட்ட நிலத்தின் வண்டல் படிந்த மணம் வீசுவதுபோல் இருந்தது. வெள்ளை வெளேரென்ற பகல் ஒளி அழுது கொண்டிருந்தது அவன் மார்பில்.

# இருபத்தொன்பது

அந்தச் சேதியை சந்திரன்தான் ஒரு நாள் கொண்டு வந்தான். கோலாகட்டிலிருந்து. கேலாயிக்காக அங்கே அரசினர் ஆஸ்பத்திரியில் ஓர் இடம் ஏற்பாடு பண்ணப்பட்டிருக்கிறது. சந்திரன் வற்புறுத்தியதாலும், டாலிமுக்கு வந்திருந்த டாக்டர் கேலாயியைப் பரிசோதனை செய்து அது அவசியம் என்று கூறியதாலும் இந்த வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

புரட்டாசி மாதம் பத்து தேதி வாக்கில், ஒரு நோயாளி வீட்டுக்குப் போவான். அன்றைக்கே கேலாயியையே அங்கு கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டும். இல்லாவிட்டால் வேறொரு நோயாளிக்கு அந்த இடம் போய் விடும்.

சந்திரனும் குலச்சும் போய், மோலோகாவிடமும் சேனிமாயி யிடமும் இதைச் சொன்னார்கள். சேனிமாயிக்கு மிகவும் சந்தோஷம்தான்; ஆனால் கவலையும் சேர்ந்து வந்தது. கேலாயியை இங்கிருந்து கோலாகாட்டுக்கு எப்படி அழைத்துப் போவது? அதற்கான செலவை எப்படிச் செய்வாள். அவள் கையில் தம்பிடிகூட இல்லையே.

தன் நிலத்தில் நடவு ஆன பிறகு, திகர் இன்னொருவர் வயலில் வேலை செய்வதற்காக டாலிம் போயிருந்தான். ஒரு மாசத்துக்கு ஒப்பந்தம். அவன் திரும்பும் சமயம்தான். இதில் மோலோகா சொல்வதற்கு ஒன்றும் இல்லை.

"சர்க்கார் ஆஸ்பத்திரிதான் என்றாலும், கையில் கொஞ்ச மாவது ரூபாய் இருக்க வேண்டும். டாக்டர், நர்ஸ் இவர்களுக் கெல்லாம் ஏதாவது ருசி காட்டாவிட்டால் நல்ல சிகிச்சை கிடைக்காது. குறைந்த பட்சம் போக்குவரத்துச் செலவு உட்பட, ஐம்பது அறுபதாவது செலவாகும். அதாவது கிட்டத்தட்ட அறுபது ரூபாய். நோயாளி கையிலும் நாலைந்து ரூபாயாவது இருக்க வேண்டும். மருந்து வாங்க வேண்டியிருக்கலாம்.. நோ மனி, நோ லைட்–" என்றான் சந்திரன்.

சேனிமாயி மிகவும் தாழ்மையுடன், "என் கையில் தம்பிடிக்காசு கூட இல்லை. அறுபது ரூபாய் செலவு செய்ய வக்கிருந்தால் நான் இப்படி இருந்திருக்கமாட்டேன்." என்றாள்.

குலச் சிறிது யோசித்துவிட்டு, "செலவுக்கு எப்படியோ ஏற்பாடு செய்யலாம். அதற்காக நீ இத்தனை துயரப்பட வேண்டாம். இவரை கோலோகாட் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதுதான் பெரிய பிரச்னை." என்றான்.

"அதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன். இவரை டாலிம் படகுத் துறை வரையில் மாட்டு வண்டியில் அழைத்துப் போய், அங்கிருந்து பெரிய துறை வரை படகில் அழைத்துப் போகலாம். அங்கிருந்து பஸ்ஸில் போகலாம்..சரி, ஆனால் இவரை இங்கிருந்து பெரிய ரஸ்தா வரை வண்டியில் கொண்டு போவதுதான் கஷ்டமாயிருக்கும். இவர் உடம்பில் எலும்பும் தோலும்தானே மிச்சமிருக்கிறது" என்றான் சந்திரன்.

புரட்டாசி மாதம் எட்டாம் தேதி, எப்படியும் புறப்பட்டுப் போவதென்று முடிவு செய்தார்கள். பஸீரத்தின் பெரிய படகு பெரிய துறையில் வரும். அவனிடம் சொல்லிக் கேலாயியைப் பெரிய துறை வரை அழைத்துப் போய் விடலாம். பஸீரத் நல்லவன்; சொன்னால் கேட்பான். தவிர அவனுக்கும் குலச்சுக்கும் பழக்கம் உண்டு. ஏன், சிநேகம் என்று கூடச் சொல்லலாம். புரட்டாசி முதல் வாரத்தில் பஸீரத் டாலிமுக்கு வரவேண்டியவன்.

"இடையில் என்னால் வர முடியாது; நேபாலிப் பேட்டையில் கால்நடைகளுக்குக் கோமாரி வந்திருக்கிறது. அதனால் பல பேர் சாகுபடியே செய்ய முடியவில்லை. நான் அங்கு போய் அதற்கு வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டியிருக்கும்." என்றான் சந்திரன். "நம் ஊரில் ஒரு கால்நடை ஆஸ்பத்திரி மிகவும் அவசியம். இல்லாவிட்டால் மனிதர்களோ மாடுகளோ எதுவுமே மிஞ்சாது." என்றும் சொன்னான் சந்திரன். விடைபெற்றுக் கொண்டான். எல்லா ஏற்பாடுகளும் செய்து கொண்டு அவன் சரியான சமயத்தில் வருவதாகச் சொன்னான். போவது உறுதியானால் குலச்சும் சேனிமாயியும் சேர்ந்து, எல்லாவற்றையும் செய்து வைக்க வேண்டும் என்றும் சொல்லிப்போனான்.

சந்திரன் சென்ற பிறகு, சேனியும் குலச்சும் சேர்ந்து யோசித்தார்கள். முதல் தேவை செலவுக்கான ரூபாய்கள். பணம் இருந்துவிட்டால் சந்திரன் மற்ற எல்லாவற்றையும் பார்த்துக் கொள்வாள். ஆயினும் ஐம்பது அறுபது ரூபாய்க்குமேல் வேண்டுமே.

சந்திரன் முன்னிலையில் ஏதோ சொல்லிவிட்டானே தவிர, இப்போது குலச்சும் பணத்திற்கு வழி இல்லாமல் குழம்பினான்.

அறுபது ரூபாயென்று சொல்கிறோமே தவிர, அது நூறு ரூபாய் வரை போய்விடும். அவனால் இவ்வளவு குறுகிய காலத்திற்குள் சேனியிடம் அத்தனை பெரிய தொகையை எப்படிக் கொண்டு வந்து கொடுக்க முடியும் ?

நிலம் வாங்குவதற்காகத் தனியாக ஒதுக்கி வைத்திருக்கும் பணம்தான் அவனிடம் இருந்தது. இருந்தாலும் அவன் சேனிமாயிக்கு நம்பிக்கையூட்டினான். "நீ எதற்கும் கவலைப் படாதே; எல்லாம் நடக்கும்" என்றான்.

"அவருக்கு உடுக்கக்கூடத் துணி யொன்றும் இல்லை; வீட்டில் எப்படியோ இருக்க முடிகிறது. அது டவுன் அல்லவா? ஒரு ஜோடியாவது மாற்றி உடுக்கத் துணி இல்லாமல் எப்படிப் போவது? ஆகவே கொஞ்சம் துணிக்கும் ஏற்பாடு செய்ய வேண்டுமே." என்றாள் சேனி.

குலச் அவள் முகத்தைப் பார்த்தான். தன் புருஷன் கோலாகாட்டுக்குப் போனால் கட்டாயம் தேறிவிடுவான். ஒரு சுகமான குடும்ப வாழ்வு கிடைக்கும் தனக்கும். இல்லாவிட்டால் சாகக் காத்திருக்கும் இந்த மனிதனை உயிரூட்ட அவள் இவ்வளவு செய்வது ஏன்? குலச் சொன்னான். "நானே பணம் தருகிறேன். துணிகளுக்கும் ஏற்பாடு செய்கிறேன். இவரை அழைத்துக் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டுமே. அதற்கு யார் போவார்கள்?"

"பணம் கிடைத்தால் நானே அழைத்துக்கொண்டு போகிறேன்" என்றாள் சேனி.

"எனக்கு நேரமே இல்லை; வருவதானால் என்னுடன் வா இப்போதே; பணம் தருகிறேன்." என்றான் குலச்.

குலச்சின் வீட்டில் பேசிக்கொண்டிருந்து விட்டு, டீ குடித்து விட்டுத் திரும்பும்போது சாயங்காலம் ஆகிவிட்டது. குலச்சே அவளைக் கொஞ்ச தூரம் கொண்டுபோய் விட வேண்டியிருந்தது. வழியில், "உங்கள் வீட்டிலும் எங்கள் வீட்டைப் போலவே சூன்யமாய் வெறிச்சோடிக்கிடக்கிறதே; வீட்டில் குழந்தை குட்டிகள் இல்லாவிட்டால் இப்படித்தான் சூன்யமாய்த் தோன்றும்." என்றாள் சேனிமாயி.

"ஆமாம்.." என்றான் குலச்.

"தரா இருக்கிறாள். அதனால் சற்று கலகலப்பாகயிருக்கிறது; அவளுக்கும் கல்யாணம் ஆகி அவளும் போய்விட்டால் வீட்டிற்குள் போகவே என்னவோபோல் இருக்கும்"

குலச்சுக்குத் திக்கென்றது; இவளும் தராவின் கல்யாணத்தைப் பற்றியே பேசுகிறாளே. பேசாமல் அவன் முன்னே போய்க் கொண்டிருந்தான். சேனி பின் தொடர்ந்தாள்.

"உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல ஆவல். இருந்தும் அதைச் சொல்வதற்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. இப்போது-"

"சொல்லேன்-"

"தராவை யாருக்காவது கொடுப்பதாய்ப் பேச்சு இருக்கிறதா? இல்லையென்றால் எங்கள் திகருக்கே கொடுக்கலாமே.."

குலச் திடீரென்று திரும்பினான். நடந்து வந்து கொண்டிருந்த சேனிமாயியையும் தயங்கித் தடுமாறி நின்றாள்.

"திகர் மேல் அத்தனை அன்பிருந்தால் நீயே அவனுடன் ஓடிப்போயேன்; அந்தப் பாதி செத்துப் போன புருஷனுடைய காலையும் கையையும் ஏன் பிடித்துக் கொண்டிருக்கிறாய் நீ" என்று கடுமையான குரலில் கேட்டான் குலச்.

"என்ன சொன்னாய்-?" என்று அதே கடுமையான குரலில் சேனிமாயீ அதட்டிக் கேட்டாள். "நீ-நீயா இப்படிப் பேசினாய்? போ..நீ என்னை வீட்டில் கொண்டுவிட வேண்டியதில்லை; நான் தனியாகவே போவேன். இந்தா. உன் பணத்தை நீயே எடுத்துக் கொண்டு போ; இது எனக்கு வேண்டாம். சாகட்டும் அவர். பிச்சையெடுத்து அவரைக் காப்பாற்ற வேண்டிய அவசியமில்லை." என்று சொல்லிவிட்டுப் பணத்தை நீட்டினாள்.||அந்தி நேரம்; வழியிலேயே இருட்டிவிட்டது. | \ கோபத்தால் இருவருமே ஆடிப்போயிருந்தார்கள். | திடீரென்று குலச் தன் எதிரில் நீட்டியிருந்த சேனிமாயியின் கையைப் பிடித்துத் தன் பக்கம் இழுத்துக் கொண்டான். அவள் அவன் மார்பில் வந்து விழுந்தாள். குலச் மெல்லிய குரலில், "சேனீ, தராவின் கல்யாணத்தைப் பற்றி மட்டும் பேசாதே; அவள் தான் என் செல்வம். லக்ஷ்மி. எல்லாமே அவள்தான்; எனக்கோ குழந்தை குட்டிகள் இல்லை; அவளையும் கட்டிக் கொடுத்து வெளியே அனுப்பிவிட்டால், அப்புறம் நான் வீட்டில் எப்படி இருப்பேன்?" என்று சொன்னான்.| "நீங்கள் ஏன் இப்படியெல்லாம் பேச வேண்டும்? நான் என்ன செய்வேன்? உங்களை மிகவும் நேசிக்க எனக்கு விருப்பமிருந்தாலும், உடனே அதைச் செய்ய முடியாதவளாய் இருக்கிறேனே-" என்றாள். |குலச் குழந்தையைப் போல் அறியாமையோடு, "தரா என் மீது மிகவும்

அதிகமாக சிநேகம் வைத்திருக்கிறாள். அவள் இல்லை என்றால் என்னால் உயிருடன் இருக்கவே முடியாது. உனக்கு இது பிடிக்கவில்லை அல்லவா?" என்று கேட்டான்.

"ஏன் பிடிக்கும் இது? என் தலைவிதி; வியாதிக்காரனைக் கல்யாணம் செய்துகொள்ள நேர்ந்துவிட்டது. ஏதாவது செய்து பார்க்கிறேன். குணமாகித் தேறினால் நல்லது; இல்லை; சாகத்தான் வேண்டும் என்று இருந்தால் செத்துப் போகட்டும். நீ இருக்கிறாய்...முடிந்தால் என்னுடனும் சிநேகமாய் இருக்கலாம் நீ—இல்லையென்றால் எங்காவது போய் விடுகிறேன். என் புருஷன் உயிருடன் இருக்கும் வரையில் இன்னொரு ஆண்பிள்ளையைப் பற்றி நினைக்கக்கூட மாட்டேன்—" என்றாள். அவளை இன்னும் சிறிது நேரம் மார்போடு அழுத்திக் கொண்டிருந்தான் குலச். தன் தாம்பத்திய வாழ்வின் இன்பத்தை இழந்திருந்த நிலையிலும் அவள் தன் கணவனுக்காக இறைவனை வேண்டுகிறாளே. இது குலச்சுக்கும் மிகவும் பிடித்திருந்தது. இது நல்ல விஷயம் அல்லவா?

மெல்ல மெல்ல சேனியை விட்டான்; ஆனால் அவள் அவனைவிட்டு அப்பால் செல்லவில்லை. அவள் தோளில் கைபோட்டுக் கொண்டு அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டு, "உன் மீது எனக்கு முன்பிருந்த ஆசை துளிக்கூட குறையவில்லை இன்றைக்கும். ஆனால் கபாஷி என்ன நினைப்பாளோ என்றுதான் பயமாய் இருக்கிறது" என்று சொல்லிவிட்டு அவன் முகத்தைக் கட்டித் தழுவி முத்தமிட்டாள் சேனிமாயி. குலச்சும் அவளை மறுபடியும் தன் கைகளுக்குள் இழுத்துத் தழுவ விரும்பினான்; ஆனால் அவள் விலகி ஒதுங்கிவிட்டாள். "சரி, வா போவோம்; யாராவது எங்கிருந்தாலும் வந்துவிட்டால்..." என்றாள்.

இருவரும் மேலே நடந்தார்கள். "பணம் இருந்தால் நானும் கோலாகாட்டுக்கு வரலாம். பட்டணத்தையும் பார்க்கலாம்; என் புருஷனுக்கு என்ன ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள் என்றும் தெரிந்து கொண்டு வரலாம்" என்றாள் அவள்.

"நானும் கிராமத்தை விட்டு வெளியில் போனதே இல்லை. ஒரு தடவை போகவேண்டுமென்று ஆசைதான் எனக்கும். கோலாயியுடன் வரமுடியுமா என்று பார்க்கிறேன்; நீயும் வருவாய் அல்லவா?"

"எல்லாம் பணத்தைப் பொறுத்திருக்கிறது. நான் ஆசைப்பட்டால் போதுமா? நீ அழைத்துக் கொண்டுபோவதனால் நானும் வருகிறேன்"

"நல்லது நான் யோசித்துப் பார்க்கிறேன். எனக்கும் டவுனில் வேலை இருக்கிறது. டாலிம் கிராமத்து நிலத்தை விற்றுவிட விரும்புகிறேன்; அது நிச்சயமானால் ரெஜிஸ்டர் பண்ண கோலாகாட் போக வேண்டும் என்று சொல்கிறார்கள். இரண்டு காரியமும் சேர்ந்து நடந்தாலும் நடக்கலாம்."

இன்னும் ஏதேதோ பேசிக் கொண்டிருந்துவிட்டு, ராத்திரி நேரம் கழித்து வீட்டுக்குத் திரும்பி வந்தான் குலச்.

## முப்பது

எத்தனையோ காரியங்களை நினைத்துக்கொண்டு எப்படியோ ஒரு நாள் குலச் டாலிமுக்குப் போனான். அவனுடைய வீட்டுக்கருகில் இருந்த எல்லா நிலங்களிலும் நடவு முடிந்திருந்தது. புதிய நிலம் முழுவதும் பாக்கியிருந்தது. தண்ணீர் இன்னும் நன்றாக வற்றவில்லை. இந்த நிலத்தில் மற்ற வருஷங்களிலும் ஐப்பசி ஆரம்பத்தில்தான் நடுவது வழக்கம். அப்படி ஒன்றும் அவசரமில்லை. அவசரப்படாமல் லாபமில்லை. நிலம் தரிசாகக் கிடந்தாலும் கூட குலச் திகரைத் தன் நிலத்தில் உழுவதற்காகத் தன் வீட்டில் வைத்துக் கொள்ளப்போவதில்லை. இது நன்றாய்த் தெரிந்த விஷயம்தான்; கபாஹி சொன்னாள்; சேனிமாயியும் அதையே சொன்னாள்; அதற்குப் பிறகும் திகர் தன் வீட்டில் அடியெடுத்து வைக்க இடம் கொடுத்தால் அது பெரிய தவறாக முடியும். தராவின் மேல் திகரின் பார்வை விழுவதைக் கூட குலச்சால் பொறுத்துக் கொள்ள முடியாது. பீமனுடன் கலந்து பேசி, ஒரு நேபாலிப் பையனை வைத்துக் கொண்டு ஒரே மாசத்தில் எந்த வயல் வேலையையும் முடித்து விட முடியும். அதற்குப் பிறகு கால்நடைகளைக் கவனித்துக் கொள்ளவும் அவன் பீமனையே ஆதரிக்க வேண்டும். தவிர, தன் அண்ணனுக்கே தன் நிலத்தைக் கொடுப்பது பற்றியும் கலந்து பேசி முடிவு செய்ய வேண்டியிருந்தது. அண்ணன் உடனடியாகவே அதிகப் பணம் தர முடியுமானால், இப்பொழுதே டவுனுக்குப் போய் சாசனம் எழுதிக் கொடுத்துவிடலாம். இதற்காக அவன் அடிக்கடி டாலிமுக்குப் போய் வர முடியாது. அவனுக்கு வேறு வேலை நிறைய இருக்கிறது.

மூன்றாவதாக, அவன் சந்திரனை அவசியம் பார்த்தே ஆக வேண்டியிருந்தது. ஆவணி முடியப் போகிறது. கேலாயினை அழைத்துக் கொண்டு சேனியும் தானும் கூடப் போவதானால் அதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டும். அதிக நாள் இல்லையே. மற்றொன்று, பளீரத்தைச் சந்திக்க முடிந்தால் அவனிடம் இது பற்றியும் வேறு ஒரு விஷயம் பற்றியும் கலந்து ஆலோசிக்கலாம். மற்றும் பல காரியங்கள். அவ்வப்போது நினைவுக்கு வருவதற்கேற்ப இருக்கும்.

சந்திரனைப் பார்க்கப் போனான். அவனுக்குக் காய்ச்சல். படுத்துக் கிடந்தான்.

"வா குலச்; எப்போது வந்தாய்?"

"மத்தியானமே வந்துவிட்டேன்; உனக்கு எப்போதிருந்து காய்ச்சல்?"

"இரண்டு நாளாகத் தான். மிகவும் கொதித்தது உடம்பு; கிட்டத்தட்ட ஹண்ட்ரெட் த்ரீ இருந்தது."

"என்ன செய்தாய்? ஜூரம் வரும் அளவுக்கு அலைந்திருப்பால்..." சந்திரன் படுக்கையில் உட்கார்ந்துகொண்டான். "ஒரு ஸ்டேஜ் கட்டும் வேலையை ஏற்றுக் கொண்டேன்"

"ஸ்டேஜா? அப்படியென்றால் என்ன?

"தியேட்டர் ஸ்டேஜ். டவுனில் பெரிய பெரிய ஸ்டேஜ்கள் இருக்கின்றன. அழகான தியேட்டர்கள்; நம் ஊரிலும் ஒரு தியேட்டர் வேண்டுமல்லவா?"

புரிந்து கொள்ளாமலேயே குலச் கேட்டான்; "ஆமாம்; வேண்டும்; அதற்காக?"

"நம் ஊர்க்காரர்களும் ஆசைப்படுகிறார்கள். மரம் மூங்கில் எல்லாம் வந்து சேர்ந்து கொண்டே இருக்கின்றன."

"அதையெல்லாம் மழைக்காலத்திற்குப் பிறகு ஆரம்பித்திருக்க வேண்டும்.."

"அடே, வேலை செய்வதற்குப் பருவமும் காலமும் உண்டா? இப்பொழுதே எல்லாம் சேர்த்து வைத்துக் கொண்டால் குளிர்காலத்தில் ஸ்டேஜ் கட்டுவது சுலபமாயிருக்கும். அது சரி, உன் வயல் தோட்டம் எல்லாம் எப்படி இருக்கிறது?"

குலச் எல்லாவற்றையும் சொன்னான்; பிறகு தான் வந்திருக்கும் காரியத்தையும் சொன்னான்.

"நல்லதுதான் குலச்; நீயும் வா; பட்டணத்தைப் பார்க்காமலேயே கிழவனாவது நல்லதில்லை. கவலைப்படாதே. சாஸனத்தை நான் ரிஜிஸ்டர் செய்து வைக்கிறேன். அது சரி. டாலிம் கிராமத்து நிலத்தை விற்க விரும்புகிறாயா?"

"ஆமாம்.."

"உன் வீட்டில் ஆடி மனை; தோட்டம். அதையெல்லாம்?"

"அவற்றை இப்போது விற்கப் போவதில்லை.."

"ஒன்று கேட்க விரும்புகிறேன் குலச்.."

"என்ன விஷயம்?"

"நீ எங்களுக்கு ஒரு டொனேஷன் தரவேண்டும்.."

"டொனேஷனா? அப்படியென்றால்?"

"நமது ஸ்டேஜ் கட்டுவதற்காக டாலிமில் இருக்கும் உன் புஞ்சை நிலத்தில் ஒரு துண்டு தர வேண்டும்."

குலச் யோசித்துவிட்டு, "ஜனங்களுக்கு வேண்டுமென்றால் தருகிறேன்; தரமாட்டேனா?"

"இருக்கிறவர்கள் கொடுக்காவிட்டால் கிராமம் எப்படி முன்னேறும்? எனக்கு ஒன்றுமே இல்லை; நான் வெறும் நான் தான்; எழுதவும் படிக்கவும் கூடச் சரியாகக் கற்றுக் கொள்ளவில்லை; அதனால் தான் நானே இது மாதிரி வேலைகளில் ஈடுபடுகிறேன். எல்லாரும் வைகிறார்கள். வையட்டுமே. என்ன, சரிதானே நான் சொல்வது.."

"உன்னை எவன் வைவான்? மற்றவர்களுக்காக எவ்வளவோ செய்கிறாய்? உன்னை ஊர்க்காரர்கள் புகழாவிட்டாலும் கட்டாயம் வாழ்த்துவார்கள்; ஆசி கூறுவார்கள்.."

"யார் எது வேண்டுமானாலும் சொல்லட்டும்; ஐ டூ மை டூட்டி. அப்படியானால் நீ உன் நஞ்சையில் இடம் கொடுக்கிறாய்?"

"அது தான் சொல்லிவிட்டேனே, தருவதாக. வெறும் தரிசு கிடப்பதற்கு பதிலாகக் கிராமத்துக் குழந்தைகள் விளையாடி மகிழ்வார்கள் அங்கே.." என்றான் குலச்.

நிலத்தை வாங்குவதை விட, கொடுப்பதில் தான் இன்பம் இருக்கிறது.' என்று குலச் இயல்பாகவே உணர்ந்து மகிழ்ந்தான். ஒரு பள்ளிக்கூடம் ஏற்படும்; ஒரு ஆஸ்பத்திரி அமையும்; ஒரு ஸ்டேஜும் வரும். ஒரு பொதுமக்களின் ஸ்தாபனம் தோன்றும்; நீ எப்போதும் இருக்கப் போவதில்லை. ஸ்தாபனம் நீடித்து நிற்கும். இந்த நன்கொடைக்கு உரியவனாவது பெருமையும் மகிழ்ச்சியும் தரும் விஷயம் அல்லவா. மேலும் என்னுடைய சொந்தப் பொருளை, என் சந்தோஷத்திற்கு, என் இஷ்டப்படி தானமாகக் கொடுத்தோ, விற்றோ பிறருக்கு மாற்றிக் கொடுப்பதுதான் சுதந்திரம்; குலச் இந்த சுதந்திரத்தின் ருசியை அநுபவித்தான். தன் அண்ணனுக்கு விற்ற நிலத்தின் விலையை அவன் ஒரு தம்பிடி கூடக் குறைக்கவில்லை. அவசியமானால் ரூபாய்களை நானாகக் கொடுத்தாலும் கொடுப்பேனே தவிர விலையைக் குறைக்க மாட்டேன். குலச் சொன்ன சொல் மாறமாட்டான் என்பது அண்ணனுக்கும் தெரியும். ஆகவே அவனும் இதைப் பற்றிப் பேசவில்லை.

குலச் துறையில் போய் பஸீரத்தையும் சந்தித்தான். பஸீரத்தின் படகிலேயே கேலாயீ பெரிய துறைவரையில் போக முடியும். அகலமான பெரிய படகு. கவலை இல்லை. அதில் மாடியும் உண்டு. வெய்யில் மழைக்குப் பயப்படத் தேவையில்லை. குலச் பயமில்லாமல் பட்டணத்திற்குப் போகத் தீர்மானித்தான். பஸீரத்திடமும் இதைப் பற்றிச் சொன்னான். அவனும் சந்தோஷப்பட்டான். அத்துடன் மிகவும் சொந்தம் பாராட்டி அந்த திட்டத்தை வரவேற்றான். போகத்தான் வேண்டும். நகரத்தைப் பார்க்கத்தான் வேண்டும். கோலாகாட் என்ன, வெகுதூரத்திலா இருக்கிறது? அரை நாள் பிரயாணம். குலச் மிகவும் துணிவுடன், "அப்படியொன்றும் கவலை இல்லை; இருந்தாலும் இந்த மழைக் காலத்தில் இரண்டு பெண்பிள்ளை களையும் வீட்டில் தனியாக விட்டுச் செல்வது தான் நல்லதாகப் படவில்லை. அது தான் ஒரு கவலை. முடிந்தால் நீங்கள் கொஞ்சம் இவர்களைப் பார்த்துக் கொள்ளுங்கள்.." என்று சொன்னான் பஸீரத்திடம்.

பஸீரத்தும் தன் சம்மதத்தைத் தெரிவித்தான். "சமயம் சந்தர்ப்பங்கள் நேரும்போது கட்டாயம் போய் அவர்களை விசாரித்துக் கொள்கிறேன். வெகுதூரம் இல்லையே" என்றான்;

குலச்சுக்கும் நம்பிக்கை வந்தது; ஆனால் பொழுது சாய்ந்து அவன் தனியாக வீட்டுக்கு வந்தபோது அவன் உள்ளத்தில் திடீரென்று துயரம் நிறைந்தது. சேனிமாயி அப்படிச் சொன்னாளே. குழந்தை குட்டிகள் இல்லாத வீட்டில் உள்ளே போகவும் பிடிக்காதே. வெறிச்சோடி ஒரே சூன்யமாய்த் தோன்றும் என்றாள் அவள். குலச்சின் வீட்டு வாசலில் குழந்தையின் சின்னஞ்சிறு கால் சுவடு எப்போது பதியும்? அவனுக்குப் பிள்ளை இருந்தால் உழவு வேலைக்கு நேபாலிப் பேட்டைக்குப் போய் ஆள் தேடும் அவசியமே இல்லையே. பையன் பிறந்தால் அவன் பெரியவனாகி ஏர் ஓட்டுவான். குலச் காளைமாடுகளைக் கொண்டு ஏர் உழுதால் பையன் எருமைக் கடாவைக் கட்டி உழுவான். அவன் நிலத்தின் சுற்றுப்புறத்தை வெட்டிப் போடுவான். குலச் பாம்பு அடிப்பான். இரண்டு சால் உழுவான். புதிய நிலம் திருத்துவான். புதிய விதை தேடுவான். குலச்சுக்கு அந்த நம்பிக்கையே இல்லை. கபாஹியைக் கொண்டு வந்து வைத்து மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. இதுவரை குழந்தை பிறக்கவில்லை அவளுக்கு. இத்தனை நாள் பிறக்காதது இனிமேலா பிறக்கப் போகிறது? பிறக்கவே பிறக்காதோ.

ஒரு ஆண் குழந்தை கூடப் பிறக்காவிட்டால் இத்தனை பாடுபட வேண்டிய அவசியம் என்ன? எனக்குப் பிறகு இந்த ஆஸ்தியெல்லாம் யார் கைக்குப் போய் சேருமோ யாருக்குத் தெரியும்? கபாஹிக்கு என்னை விட வயது அதிகம்; ஆனால் அவள் கிழவி ஆகிவிடவில்லை. அவளை விட வயதான பெண் பிள்ளைகளுக்குக் குழந்தைகள் பிறக்கின்றனவே.

இன்று கபாஹியிடமே உனக்குக் குழந்தை பிறக்கும் என்று நினைக்க ஏதாவது அறிகுறிகள் உண்டா, எதிர்பார்க்கலாமா என்று நேரிடையாகவே கேட்டு விட வேண்டுமென்று முடிவு செய்து கொண்டான் குலச். எதிர்பார்க்க முடியாதென்றால், அவன் என்ன செய்வான்? அதைப் பற்றி அவனால் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை.

## முப்பத்தொன்று

எல்லா ஏற்பாடுகளும் செய்து கொண்டு சந்திரன் குறித்த நேரத்தில் வந்து சேர்ந்தான். இதற்குள் குலச் நடவு செய்யக்கூடிய நிலங்களில் நட்டு விட்டான். நேபாலி உழவன் நல்ல உழைப்பாளி.

அவன் ஏர் ஓட்டுவதைத் தவிர மற்ற வேலைகளிலும் நல்ல உதவி செய்தான். கபாஹியும் தராவும் களைக்காமல் சளைக்காமல் நடவை மடித்தார்கள். சேனிமாயியும் மூன்று நாட்களுக்கு வந்து கூட இருந்து வேலை செய்தாள். நல்ல பருவ காலம். இரண்டு நாட்கள் முன்பே நடவு முடிந்தால் எல்லாவற்றிற்குமே நல்லது. கொஞ்சம் பள்ளமான நிலமும் களை எடுத்தெறிய வேண்டிய நிலமும் நடவாகாமல் தங்கி விட்டன. குலச்சின் மனம் கொஞ்சம் நிம்மதி அடைந்தது. இனி அவன் இல்லாவிட்டாலும் நேபாலியை வைத்துக் கொண்டு தராவும் கபாஹியும் நட்டு முடித்து விடுவார்கள். பதினைந்து நாளாக மழை பெய்யவில்லை. வெய்யில் கண் : கூசுகிறது. அன்று குலச் தெற்குத் திசையைப் பார்த்தான் மேகங்கள் சேர்ந்து கிடந்தன. அநேகமாய் இன்னும் மூன்று நான்கு நாட்களுக்குள் நல்ல மழை பெய்து வெள்ளமும் வரலாம்.

ஆண்டவா, வரக்கூடாதே.

குலச்சுக்கு பெரும்பாலும் நிலமெல்லாம் ஆற்றின் கரையில் இருக்கிறது. எல்லாம் பள்ளமானவை. வெள்ளம் புகுந்தால் பிழைக்காது; ஆனால் பல வருஷங்களாக ஆற்றில் வெள்ளம் வரவில்லை. இந்தப் பக்கம் ஆற்றுக்கு அணையும் கிடையாது.

ஆண்டவா வெள்ளம் வரக்கூடாதே.

குலச்சின் வீடு இருக்கும் பகுதி மேடானது. கிராமம் முழுவதும் வெள்ளத்தில் மூழ்கிய பிறகே அவன் வீடு மூழ்கும். வீட்டைச் சுற்றிலும் தாழ்வான நிலம்; அங்கே ஓர் குன்று போன்ற இடத்தில் அவன் வீடு இருக்கிறது. அப்படியே வெள்ளம் வந்தாலும் அவனுக்கு மட்டுமா வரப்போகிறது. எல்லாருக்கும் தான் வரும். வறட்சி புயல், வெள்ளம் இவற்றை யாரால் தடுக்க முடியும்?

ஆவணி மாதம் எட்டாம் தேதி ஞாயிற்றுக்கிழமை. அதற்கு முந்தின வெள்ளிக் கிழமை அவன் ரொம்ப யோசித்து ஆராய்ந்து. காலையிலிருந்தே தன்னை அலங்கரித்துக் கொண்டு தொழுகைக் காகச் சிபரியா கிராமத்து மசூதிக்குச் சென்றான் குலச். 'நமாஸ் செய்யும் சட்டதிட்டங்களும் சம்பிரதாயங்களும் அவனுக்குத் தெரியாது; ஆனாலும் அவன், ஈத் நாளிலும் பக்ரீத் நாளிலும் மசூதிக்குப் போய்க் கூட்டத்துடன் உட்கார்ந்து எழுவான். இந்த மூன்று வருஷங்களிலும் அவன் ஈத் நாள் தவிர வேறு தொழுகைக்குப் போய் நமாஸ் ஓதியதே இல்லை; அவனுக்கு மசூதிக்குப் போகும் நினைவே இருப்பதில்லை.

கடையில் இரண்டு மெழுகுவர்த்திகள் வாங்கிக் கொண்டான். கோலாகாட் போவதற்கென்று தைத்திருந்த புதுச் சட்டையைப் போட்டுக் கொண்டான். புது வேஷ்டியும் கட்டிக் கொண்டான். புரட்டாசி மாதமாதலால் மசூதியில் கூட்டமே இல்லை; அதிலும் வாலிபப் பருவத்து ஆட்கள் யாருமே இல்லை. வயலுக்குப் போக முடியாத கிழவர்கள் சிலர் மட்டுமே அங்கு இருந்தனர். கைகால் கழுவிக்கொண்டு மசூதிக்குள் போய் வத்திகளை ஏற்றும் இடத்தில் வைத்தான்; அவன் மனத்திற்குள்ளாகவே, அவனுக்கே புரியாமல் இப்படிப் பிரார்த்தனை செய்து கொண்டான்; "கோலா காட்டுக்குக் கிளம்புகிறேன். இதற்கு முன்னால் நான் அங்கே போனதில்லை. அல்லாவே, ஆபத்து இல்லாமல் காப்பாற்றுங்கள். சேனிமாயியும் வருவாள்; அவளுக்கும் ஒருவிதமான கஷ்டமும் நேரக்கூடாது. மேலும் ஆண்டவரே, எனக்குக் குழந்தையே இல்லை. ஒரு ஆண் குழந்தை வேண்டும்; இதைத் தவிர எனக்கு வேறு குறையே கிடையாது. மசூதியில் இரண்டு வத்திகள் ஏற்றி வைத்திருக்கிறேன்; ஆண்டவரே நீங்கள் என் பிரார்த்தனையைக் கேட்டருள வேண்டும்.

நமாஸ் படித்துவிட்டுத் திரும்பும்போது குலச்சுக்கு ஒரு சிறு சந்தேகம் ஏற்பட்டது. அல்லா என் பிரார்த்தனை அனைத்தையும் நிறைவேற்றுவாரா? ஏதோ ஒரு பிரார்த்தனை மட்டுமே செய்திருக்க வேண்டும்; எல்லாவற்றையும் சேர்த்துக் கேட்பது சரியில்லை; எது ஆனாலும் ஆகாவிட்டாலும் எனக்கு ஒரு ஆண்குழந்தை வேண்டும்; அவசியமானால் அதற்காக இன்னும் இரண்டு மெழுகு வத்திகளை ஏற்றி வைப்பேன். மசூதியில் வேண்டிக் கொள்வேன்.

பயிர் பிடித்துவிட்டது; கருகிக் கறுத்துக் கிடந்த பயிர்களும் உயிர் பெற்று வளர்ந்து விட்டன. தராவின் கையிலும் கபாஹி கையிலும் லட்சுமி இருக்கிறாள். ஒரு வாரம் காய்ந்து கருகிய பயிர்களும் பிழைத்துவிட்டனவே.

நல்ல வெய்யில் எரிக்கிறது. இந்த வருஷம் பயிருக்கு புகையாள் பூச்சித் தொல்லை இருக்காது. வயலின் ஆரோக்கியமான மணம் வீசத் தொடங்கியிருக்கிறது.

தன் நிலத்தைப் பார்த்துப் பார்த்து சந்தோஷப்பட்டான் குலச். இவை என்னுடையவை; எல்லாமே, நிலமும் மககூலும் எல்லாமே, எனக்குச் சொந்தம். அந்த மேட்டு நிலத்துப் பயிர் கொஞ்சம்

சிவந்திருக்கிறது. கொஞ்சம் சாணி எரு போடவேண்டும். ஒரு மூலையில் பறம்படித்த மண் சேர்ந்து கிடக்கிறது.

கேலாயிக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்று சேனிமாயி தன் தோட்டத்து வாழைத் தார் இரண்டை அனுப்பியிருந்தாள். நமாஸ் படித்தபின் அப்படியே கோஷ்டி, சேர்ந்து கேலாயிக்காக வேண்டிக் கொள்ள வேண்டுமாம். எல்லாரும் அப்படியே பிரார்த்தனை செய்தார்கள். "கேலாயிக்கு வியாதியாய் இருக்கிறது. வைத்தியம் செய்து கொள்வதற்காக நகரத்திற்குப் போகிறான்; அல்லா, ஆண்டவா, அவன் வியாதியைக் குணப்படுத்தவேண்டும்...அல்லா அருள்க."

அல்லாதான் அனைவருக்கும் கடைசி நம்பிக்கையும் துணையும் ஆவார். மனம் விட்டுக் கூட்டமாய்ச் சேர்ந்து பிரார்த்தனை ஆறுதலும் தன்னம்பிக்கையும் தருகிறது. குலச்சும் இன்று கேலாயிக்காக வேண்டிக் கொண்டான். கேலாயி செத்தே போனாலும் சேனிமாயிக்கு அது பெரிய தீமையில்லை, என்றாலும் அவள் மசூதியில் தொழுகை நடத்தும் கூட்டத்துக்கு வாழைப் பழம் அனுப்பியிருக்கிறாள். மற்றவர்களுடன் சேர்ந்து அவளும் வேண்டிக் கொண்டாள். கேலாயி பிழைத்தால் அவளுக்கும் சுகம் கிடைக்கும். குழந்தை குட்டிகள் பிறக்கும். ஒரு குடும்பம் அமையும். கேலாயி குணமடையட்டும் எப்படியாவது.

மசூதிக்குப்போய் வந்த மறுநாளும் குலச் வயலில் வேலை செய்தான். மறுநாள் ஏழாம் தேதி. சந்திரன் காலையிலேயே வந்துவிட்டான். டாலிமிலிருந்து மாட்டு வண்டி வந்தது. திகரும் அன்று ஒரு நாள் வீட்டுக்கு வந்தான். சுபாஹியும் விரைந்து சேனி வீட்டுக்குப் போனான். கேலாயியுடன் சேனியும் நகரத்திற்குப் போகிறாள்; இது சாதாரண விஷயம் இல்லை. சந்திரனும் குலச்சும் கூடவே போகிறார்கள். சுபாஹி வந்து சாமான்களை மூட்டை கட்டிக் கொடுத்தாள். வீட்டில் தனியாக உட்கார்ந்திருக்கும் தராவிடம் குலச், "நீங்கள் எதற்கும் கவலைப்பட வேண்டாம். வயலுக்குக்கூட நீங்கள் போய்த்தான் ஆக வேண்டும் என்பதில்லை. நேபாலியே எல்லாம் செய்வான். சித்தியும் நீயும் வீட்டிலேயே இருங்கள். மாடுகளைக் கவனித்துக் கொள்ளுங்கள்." என்று சொன்னான்.

"அங்கே எத்தனை நாட்கள் இருப்பீர்கள்?" என்று கேட்டாள் தரா. "சொல்லமுடியாது; கேலாயிக்காகச் செய்ய வேண்டியதைச்

சந்திரன் பார்த்துக் கொள்வான். எனக்குக் கச்சேரியில் வேலை இருக்கிறது. நிலம் விற்றதற்கு தஸ்தாவேஜுகள் செய்து தர வேண்டும். ஒரே நாளில் வேலை முடிந்து விட்டால் நல்லது தான். இல்லாவிட்டால் இரண்டு மூன்று நாட்கள் ஆகிவிடலாம். கால நிலையும் நம்பிக்கை தருவதாக இல்லை; மேகம் குவிந்து கிடக்கிறது. இன்று இரவே மழை பெய்யலாம்."

"அதிக நாள் ஆக்க வேண்டாம்; வேலை விரைவில் முடியவில்லையானாலும் வந்து விடுங்கள்; பிறகு ஒரு நாள் போய்க் கொள்ளலாம்.." என்றாள் தரா. "நான் ஏன் தாமதம் செய்யப் போகிறேன். அங்கே என்ன என் மாமா வீடா இருக்கிறது. நான் தங்கியிருக்க."

தரா ஒரு சிற்றுண்டிப் பொட்டலம் கட்டிக் கொடுத்தாள். சட்டை வேஷ்டிகளைச் சரி செய்து கொடுத்தாள். "பட்டண வாசத்து சமாசாரம். மிகவும் நன்றாக உடுத்துச் செல்ல வேண்டும்" என்றாள்.

"ஆமாம்.." என்றான் குலச். வெற்றிலைத் துணியையும் கட்டிக் கொடுத்து, "எனக்கு ரொம்பக் கவலையாகவே இருக்கும். சுருக்க வர வேண்டும்" என்றாள்.

அவள் கையைப் பிடித்துக் கொண்டு, "வருவேன், வருவேன். கட்டாயம் சுருக்க வந்துவிடுகிறேன். உன்னை விட்டுப் பிரிந்து என்னால் அதிக நாள் இருக்க முடியுமா?" என்றாள்.

வாசலுக்கு வந்து வானத்தை நிமிர்ந்து பார்த்துவிட்டு, "கால நிலை அவ்வளவாக நன்றாயில்லை. இன்று கட்டாயம் மழை பெய்தே தீர்க்கும். இத்தனை நாள் கடுமையான வெய்யில் எரித்திருக்கிறது. புயல் வராமல் இருந்தால் அதுவே பெரிது. நான் வரட்டுமா தரா?" என்று குலச் புறப்பட்டான். தரா வாசற்படியில் நின்று கொண்டு அவன் போனதையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

கேலாயி எலும்பும் தோலுமாய் ஒட்டி உலர்ந்திருந்தான். எப்படியோ அவனைத் தூக்கி விரைவாக வண்டியில் ஏற்றினார்கள். கபாஹி சேனியின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுத வண்ணம் விடை கொடுத்தாள். குழி விழுந்து கிடந்த கேலாயியின் கண்களில் கண்ணீர்த் துளி தெரிந்தது. "அல்லா இருக்கிறார், போ." என்றான் மோலோகா. தன்சிரியின் படகுத் துறை வரையில் ஒரு சின்ன ஊர்வலம் போல் இருந்தது. சிபரியா

கிராமத்துக்காரர்கள் நாலைந்து பேர் வந்து வழியனுப்பினார்கள். சிலர் கிசு கிசுக்கும் குரலில், "இனிமேல் குணமாகித் திரும்பி வருவான் என்று நம்புவதற்கில்லை. மயானத்தின் மண் கூப்பிடுகிறது இவனை." என்று பேசிக் கொண்டார்கள். வேறு சிலர், "அடே, வாலிபப் பருவம், பாவம், பட்டணத்து டாக்டர் கவனித்துப் பார்த்தால் தேறினாலும் தேறிவிடுவான். வேறு ஒன்றும் பெரிதாய் இவனுக்கு வியாதி இல்லையே. இருமல் ஒரு பெரிய வியாதியா என்ன?" என்றார்கள். "வியாதிக்காரன் என்று கூடப் பார்க்காமல் தன் புருஷனிடம் சேனி இத்தனை தூரம் அன்பாய் இருக்கிறாளே. வேறு யாரால் இப்படிப்பட்ட நோயாளியுடனே காலம் தள்ள முடியும். அவளுடைய தலையெழுத்து இப்படி" என்றவர்களும் உண்டு கூட்டத்தில். "தம் ஊர்க்காரன் ஒருவன் நகரத்தில் போய்ச் சாவதற்காகப் பிரயாணம் போகிறான். இப்போது நீங்களெல்லாம் கூடி அழுவதால் என்ன பிரயோஜனம் ? நம் ஊரிலேயே ஒரு ஆஸ்பத்திரி இருந்தால், இப்படி நீ பிடி நான் பிடி என்று இழுபறியாக நகரத்திற்குப் போக வேண்டிய அவசியம் இருக்காதே. கேலாயி குணமாகித் திரும்பாவிட்டால் அதற்கு நீங்கள் தான் முழுப்பொறுப்பு. யூ ஆர் ரெஸ்பான்ஸிபிள்; ஆனால் பார்த்துக் கொண்டே இருங்கள். கேலாயி வியாதி குணமாகித் திரும்பி வரப்போகிறான் கட்டாயம். சரி, வீ கோ.." என்று சந்திரன் பேசியதைக் கேட்டதும் எல்லாருமே வாயை மூடிக் கொண்டார்கள். சந்திரன் என்ன நினைக்கிறானோ அதைச் சொல்லிவிடுகிறான்; அவன் சொல்வதை மறுப்பதால் பயனில்லை.

திகரும் துறை வரை கூடப் போனான். கேலாயியைப் படகில் ஏற்றியதும் அவனாலும் அழாமல் இருக்க முடியவில்லை. "நான் தம்பியாயிருந்தும் அண்ணனுக்கு ஒன்றுமே செய்ய முடியவில்லை. உங்கள் யாவர் மீதும் அவன் பாரத்தைப் போட்டுவிட்டேன்" என்று குலச்சிடம் சொல்லி வருத்தப்பட்டான்.

"அண்ணி, குலச் அண்ணனும் சந்திரனும் கூட வருகிறார்கள்; நீ எதற்கும் கவலையே படவேண்டாம். ஏதாவது வேண்டுமென்றால் எனக்குச் சொல்லியனுப்ப மறந்துவிடாதே" என்று சேனியிடம் சொன்னான் திகர். இதன் அர்த்தம் எல்லாருக்கும் விளங்கிற்று; ஆயினும் இதைத் தவறாக நினைக்கவில்லை. அவன் உள்ளதைத்தானே சொன்னான். கேலாயிக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால் சொல்லியனுப்ப வேண்டியதும் அவசியம்தானே.

கபாஹியையும் தராவையும் கவனித்துக் கொள் என்று திகரிடம் சொல்ல நினைத்தான் குலச்; ஆனால் சொல்லவில்லை. அவனும் கபாஹியும் சேர்ந்து கொண்டு அவன் இல்லாத சமயத்தில் ஏதாவது செய்து விட்டால் என்ன செய்வது ? அவர்கள் அப்படிச் செய்யமாட்டார்கள் என்று எப்படி நம்புவது; ஆனால் தராவினிடம் அவனுக்கு முழு நம்பிக்கை உண்டு; அவன் யாரிடமும் ஒன்றும் சொல்லவில்லை. இரண்டு பேர் இருக்கிறார்கள்; இருவரும் பெண்பிள்ளைகள். ஒருவருக்கு மற்றவர் துணை; இருந்து விடுவார்கள் ஜாக்கிரதையாக.

பத்துமணிக்குப் படகு புறப்பட்டது. தன்சிரியின் புரட்டாசி வெள்ளம். கன்னி வெள்ளம். தண்ணீர் கரைகளைத் தொட்டுக் கொண்டு ஓடுகிறது. கலங்கலான நீர்ப்பெருக்கு. வானம் எங்கும் மேக மூட்டம். படகுக்குள், குலச், கேலாயி, சேனி, சந்திரன் ஆகியோர் இருக்கிறார்கள். இது மரணத்தை எதிர்த்துச் செல்லும் பிரயாணம். கீழே தண்ணீர் ஓடுகிறது. அதன் மேல் படகு போகிறது. ஒரு படகுக்காரன் அண்ணாந்து வானத்தைப் பார்த்துவிட்டு, "மழை வருவதற்குள் நாம் பெரிய துறைக்குப் போய்விட்டால் தான் நல்லது. ஆகாயத்தில் கார் மேகங்கள் ஏராளமாய்க் கவிந்து கிடக்கின்றன. ஆற்றில் படகு போகும்போது மழை வந்துவிட்டால் நாம் மேலே செல்வது மிகவும் கஷ்டமா யிருக்கும்." என்றான். சந்திரன் முதலிய நால்வரும் மேலே வானத்தைப் பார்த்தார்கள். கேலாயிக்குத்தான் துரதிர்ஷ்டமோ என்னவோ. பருவம் குடியைக்கெடுத்துவிட்டாலும் விடலாம்; ஆனால் எங்கே ஓட முடியும் இப்போது ?

அப்படியே ஓடிவிடுவதால் ஆபத்து விலகிவிடுமா? இத்தனை நாள் காய்ந்த கடும் வெய்யிலுக்குப் பிறகு, குலச்சும் சந்திரனும் வருவதால் மழை பெய்யாமல் இருக்குமா ?

படகு எத்தனை வேகம் போக முடியுமோ அத்தனை வேகமாய்ச் சென்றது.

## முப்பத்திரண்டு

மழை நிற்கவில்லை. விடாமல் பேய் மழை பெய்தது. எப்பொழுது விடும் என்பதும் தெரியாது. அவர்கள் பெரிய துறைக்குப் போய் சேரும் போது கடுமையான மழை படகைத்

துறைக்குக் கொண்டு போய்க் கட்டுவதற்குள் ஆற்றிலும் வெள்ளம் அதிகமாகிவிட்டது சேனியும் கேலாயியும் படகில் நனையாமல் இருந்தனர். சந்திரனும் குலச்சும் மழையைப் பொருட்படுத்தாமல் கரையில் ஏற்றினார்கள். இன்று பஸ் கிடைக்காது. துறையில் இருந்த ஒரு கூரையில் தங்கினர். இரவு சாப்பாட்டிற்கு வழி இல்லை. கையில் கொண்டு வந்திருந்த பட்சணங்களைச் சாப்பிட்டனர். மழையில் சிக்கிக் கொள்ளாமல் இருப்பதே பெரும் பிரச்னை ஆகி விட்டது. நோயாளி மழையில் நனையாமல் இருப்பதே பெரிய லாபம். நனைந்தால் அவன் செத்துப் போய் விடுவான்; அடுத்த நாள் காலையில் எப்படியோ பஸ்ஸில் சென்ற கேலாயியை ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டார்கள். இப்போது கேலாயியின் சாவும் வாழ்வும் டாக்டர் கையிலும் அல்லாவின் கையிலும் தான் இருக்கிறது. டாக்டர் பார்த்து விட்டு அதிகமாய் பயப்படும் அவசியம் இல்லையென்று தைரியம் சொன்னார். யாருக்கும் அவர் சொன்னதில் நம்பிக்கை ஏற்படவில்லை. கிராமத்திலிருந்து இங்கு வந்து சேர்வதற்குள் அவன் மிகவும் பலவீனமாக ஆகி விட்டிருந்தான். ஆஸ்பத்திரிக்கும் வரும்போது அப்போதே அவனுக்கு ஏதாவது நேர்ந்தாலும் ஆச்சரியப் படுவதற்கு இல்லை என்ற நிலைதான். சேனிக்கு டாக்டர் சொன்னதால் அவன் தேறினாலும் தேறிவிடலாம் என்று தோன்றிற்று.

சந்திரன் சொன்னதை ஞாபகப்படுத்திக் கொண்டு சேனிமாயி குலச்சிடம் சொன்னாள். "இவரை இப்படியே விட்டுப்போவது நல்லதன்று; டாக்டருக்கு ஏதாவது கொடுக்க வேண்டாமா? கூட வரும் அந்த இரண்டு பெண்களுக்கும் (நர்ஸ்) கொடுக்கத்தான் வேண்டும். அப்போதுதானே காரியம் நடக்கும்."

இடுப்பில் கட்டியிருந்த வலைப்பையை குலச் எடுத்துச் சேனியிடம் நீட்டினான். "நூற்றைம்பது ரூபாய் கொண்டு வந்தேன். படகில் பஸ்ஸில் என்ன செலவாயிற்றோ கணக்குப் பார்க்கவில்லை. அவர்களுக்கு என்ன கொடுக்க வேண்டும்" என்றான் குலச்.

"எனக்கென்ன தெரியும்?" என்றாள் சேனீ. குலச் பணத்தைச் சந்திரனிடம் கொடுத்தான். அவன் கிராமத்தில் பெரிய மனிதனாய் இருந்தாலும் அங்கே டாக்டர் முதலிய பெரிய மனிதர்களின் முன்னிலையில் மிகவும் பணிவுள்ளவனாகவே வணங்கி நடப்பான்.

அதற்காகச் சேனி குலச் இருவரின் எதிரில் எந்த விதமான பலவீனத்தையும் வெளியில் காட்டிக் கொள்ளவும் மாட்டான். இரண்டு கட்சிகளையும் எடுத்துச் சொன்னான். "இது சர்க்கார் ஆஸ்பத்திரிதான்; டாக்டர்களுக்கு அரசாங்கம் சம்பளம் தருகிறது; இருந்தாலும் எந்த நோயாளியையாவது நன்றாக கவனிக்க வேண்டுமானால் கொஞ்சம் மரியாதை காட்டியே ஆக வேண்டும். பெரிய பெரிய ஆஸ்பத்திரிகளில் கூட மேல் மட்டத்தில் ஆரம்பித்து ஏதாவது ஸம்திங் கொடுக்காவிட்டால் நோயாளி செத்தாலும் டாக்டர் திரும்பிப் பார்க்கக்கூட மாட்டார் என்று சொல்கிறார்கள். இங்கே அதற்குப் பாதியையாவது கொடுக்க வேண்டியதுதான். இது சரியில்லைதான்; ஆனால் சட்டம் போல் மாமூலாக இருந்து வருகிறதே."

"மனிதன் உயிரைவிடப் பணம் பெரியதில்லை; வேண்டுகோள் வடிவத்திலாவது ஏதாவது கொடுக்கத்தான் வேண்டும்." என்றான் குலச்.

"உனக்கும் பணம் தேவைப்படுமே. ஏதோ பத்திரம் ரெஜிஸ்டர் என்று சொன்னாயே. அங்கே யாருக்கு எவ்வளவு கொடுக்க வேண்டியிருக்குமோ" என்று நினைவுபடுத்தினாள் சேனி.

"நான் எப்படியாவது பார்த்துக் கொள்கிறேன். இந்தத் தடவை இல்லாவிட்டால் அடுத்த தடவை ஆகட்டுமே அது; இப்போ முக்கியம் வியாதிக்காரன் விஷயம்" என்றான் குலச். நகரத்தைச் சுற்றிப் பார்ப்பது பாக்கி; தங்கியிருக்கவும் சாப்பாட்டிற்கும் ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கும்." என்றாள் சேனி.

"அதெல்லாம் நடக்கும்; நீங்கள் இங்கே நான்கு நாள் இருக்க முடியுமா?" என்று சந்திரன் கேட்டான்.

"ஏன்?"

"எனக்கு மூன்று நாட்களுக்கு இங்கே வேலை இருக்கிறது. நீங்களும் அது வரை இருப்பதானால் சேர்ந்தே போவோம். இல்லையென்றால் நீங்கள் இருவரும் போங்கள். நான் உங்களுடன் வர முடியாது."

சேனியும் குலச்சும் ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்துக் கொண்டனர். "நாம் இருவரும் தனியே போக முடியாதா சேனி."

"என்னை இங்கே பஸ்ஸில் ஏற்றிவிட்டால் பெரிய துறையில் இறங்கி மேலே போக முடியும் என்னால், இருந்தாலும் சேர்ந்து போனால் நல்லதுதான்"... என்றான் சேனி.

குலச்சுக்கு கச்சேரிக் காரியம் நடக்கவில்லை. இரண்டு பார்ட்டிகளும் இருக்க வேண்டுமாம். குலச்சின் அண்ணன் வரவில்லை. அதற்காக குலச் வருத்தப்படவில்லை. நிலம் அவனிடம் இருக்கிறது. அண்ணன் கொஞ்சம் பணமும் கொடுத்திருக்கிறான். இந்தத் தடவை இல்லையானால் அடுத்த தடவை ஆகட்டுமே. பட்டணத்துக்கு வரப்போகவும் ஆரம்பம் ஆகிவிட்டது.

மூன்று பேரும் பகலில் ஒரு ஹோட்டலில் தான் சாப்பிட்டார்கள். சந்திரனுக்கு அது ருசியாக இருந்தது. சேனிக்கும் குலச்சுக்கும் அந்த ருசி பிடிக்கவில்லை. காய் கறிகள் கசந்தன. பரப்பும், சாதமும், மீனும் இருந்தன சாப்பாட்டில், வேறு எதுவும் இல்லை. ஆனால் இதற்கே மொத்தம் ஐந்தே கால் ரூபாய் செலவு; ஒருவர் சாப்பாட்டிற்கு ஒன்றே முக்கால் ரூபாய் அக்கிரமம்தான். ஒரு டீக்கடையில் ரஸகுல்லாவுடன் டீ குடித்தது மிகவும் குஷியாயிருந்தது. நகரத்தில் டீ ஒரு மாதிரிப் போடுகிறார்கள். சீனியும் பாலும் கலக்கிறார்கள். குடித்தால் மயக்கம் வருவதில்லையே தவிர, இனிப்பாயிருக்கிறது. ரஸகுல்லா சாப்பிடுவது குலச்சுக்கு மிகவும் பிடித்தது. தித்திப்பு வகை எல்லாமே நன்றாயிருந்தன. குலச் ஒரு லட்டும் தூத்பேடாவும் கேட்டு வாங்கித் தின்றான். நிறையக் காசு செலவழிந்தது. அது தவறாகப் படவில்லை. பட்டணத்துக்கு வந்தால் செலவு ஆகத்தான் ஆகும். மழை பெய்ததால் நகரத்தை அதிகமாகச் சுற்றிப் பார்க்க முடியவில்லை. சந்திரன் இரண்டு ரிக்ஷாக் காரர்களைக் கூப்பிட்டு ஒன்றில் தான் ஏறிக்கொண்டு மற்றதில் அவர்கள் இருவரையும் உட்கார வைத்துக் கொண்டு சில இடங் களைக் காட்டினான். கச்சேரி, ஹைஸ்கூல், பருவாபவனம், யமுனை, தோல் கம்பெனி போன்றவற்றைக் காட்டினான்.

முதலில் சேனியும் குலச்சும் சற்று வியப்படைந்தனர். மிகுந்த குதூகலத்துடன் இங்கும் அங்கும் பார்த்துக் கொண்டு வந்தார்கள். ஆனால் சிறிது நேரத்திற்குப் பிறகு அந்த வியப்பு இருக்கவில்லை. எல்லாமே அவர்களுக்குப் பழக்கமானவை போலவே இருந்தது. அவர்கள் பட்டணத்தில் வெகுகாலம் இருந்ததுபோலவே தோன்றியது. சந்திரனுக்கு வருத்தம். "உங்களுக்கு அதிர்ஷ்டம் இல்லை. பருவ நிலை நன்றாக இருந்திருக்க வேண்டும். சுற்றிப் பார்த்தால் நன்றாயிருக்கும். நீங்களும் வந்தீர்கள். மழையும் வந்தது. எங்கே சுற்றுவது-எதைப் பார்ப்பது?" என்றான்.

"எல்லாம் பார்த்தாய் விட்டது. பட்டணமும் கிராமத்தைப் போலத்தான் இருக்கிறது. ஜனங்கள் அதிகம். சில பெரிய கடைகள் இருக்கின்றன. வேறு என்ன புதுமை. நான் நகரமென்றால் வேறு எப்படியோ இருக்குமென்று நினைத்தேன். ஒரே நாளில் அலுத்து விட்டது" என்றான் குலச். அவனுக்கு வேறுகவலை, அவனுக்குத் தராவின் நினைவு வந்துவிட்டது; அவளும் கபாஷியும் தனியாய் இருக்கிறார்கள். மூன்று நாட்களாகப் பேய் மழை பெய்கிறது. கால நிலையின் அறிகுறி நன்றாயில்லை. மழை பெய்யட்டும்; அதனால் ஒன்றும் ஆகாது; தன்சிரியில் வெள்ளம் வந்துவிடக் கூடாதே. அவன் மாடு கன்றுகளை விட்டு வந்திருக்கிறான். தண்ணீர் அதிகமானால் பெண்பிள்ளைகள் மாடு கன்றுகளை வைத்துக் கொண்டு தனியாய் என்ன செய்ய முடியும்? ஆனால் அவன் வீடு மேட்டில் இருக்கிறது. அஸ்திவாரமும் மேடாகவே போட்டிருக் கிறான். சாதாரணமாக அங்கே தண்ணீர் ஏறாது.

ராத்திரியும் அவர்கள் ஹோட்டலில் சாப்பிட்டார்கள். "ராத்திரி எங்காவது படுத்துக் கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டுமே. நான் நாளைக் காலையில் ஊருக்குப் போய் விடுகிறேன். எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை" என்றான் குலச்.

"அந்தக் கவலை வேண்டாம். எனக்குத் தெரிந்த பையன்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் ரூம் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். நான் வரும் போதெல்லாம் அவர்களிடம் தான் தங்குவது வழக்கம். நாமும் இரவை அங்கே கழிக்கலாம்." என்றான் சந்திரன்.

"அங்கே இடம் இருக்குமா?"

"இருக்கும். கொஞ்சம் சிரமமாய் இருக்கும். கூரைக்குச்சு. இடம் குறைவுதான். உங்கள் இரண்டுபேருக்கும் சௌகரியம் செய்து கொடுத்துவிடுகிறேன். நான் எனக்கு ஏதாவது ஏற்பாடு செய்து கொள்வேன்."

மூன்று பேரும் ரிக்ஷா வைத்துக் கொண்டு போய் நகரத்தின் ஒரு மூலையில் இருக்கும் குடிசையின் எதிரில் இறங்கினார்கள். ஒரு அரிக்கனுடன் ஒரு பையன் வெளியே வந்தான். "இவர்கள் இருவரும்தானே?" என்று கேட்டான். "ஆமாம், நீ இவர்களுக்கு இடம் ஏற்பாடு செய்திருக்கிறாய் அல்லவா?" "அதோ படுக்கையை போட்டு வைத்திருக்கிறேன்; நாம் இருவரும் ரமேஷின் வீட்டுக்குப் போக வேண்டும். அங்கே யது மட்டும் தான் இருக்கிறான். ஒரு

விரிப்பு சும்மா கிடக்கிறது. அதில் நாம் இருவரும் படுத்துக் கொள்ளலாம்.

"என்னிடமும் ஏதோ துணிகள் இருக்கின்றன" என்றான் குலச். "நீங்கள் இங்கேயே படுத்துக் கொள்ளுங்கள். நாங்கள் பக்கத்தில் தான் இருப்போம். எதற்காவது தேவைப்பட்டால் எங்களை எழுப்ப வேண்டியிருந்தால் கூப்பிடுங்கள்" என்றான் பையன். சந்திரனும் அவர்களிடம் சொல்லிக்கொண்டு ரமேஷின் வீட்டுக்குத் தூங்கச் சென்றான். சேனியும் குலச்சும் எங்கே எப்படிப் படுத்து கொள்வார்கள் என்பதைப் பற்றி சந்திரன் நினைத்தே பார்க்கவில்லை. ஒரு பலகையில் படுக்கை விரிக்கப்பட்டிருந்தது. வேறொரு பலகை சும்மாக் கிடந்தது; அதில் படுக்கை இல்லை. இங்கும் அங்கும் பார்த்துவிட்டு. "நீ அந்தப் படுக்கையில் படுத்துக் கொள்; நான் இப்படியே இதில் படுத்துக் கொள்கிறேன்" என்றான். "வேறு ஒருவருடைய படுக்கையில் படுத்துக் கொள்ளப்பிடிக்காது எனக்கு. நீ இங்கே பலகையில் விரித்திருக்கும் படுக்கையில் வந்து தூங்கு. நான் அதில் படுத்துக் கொள்கிறேன்" என்றாள் சேனிமாயி. "வேண்டாம், அதிலேயே படுத்துக் கொள். இதில் வெறும் துணியைத்தான் விரித்திருக்கிறேன்"

சேனி விரித்திருந்த படுக்கையில் தூங்கிப் போகவில்லை. "என்ன வேண்டுமானாலும் செய்து கொள்" என்று குலச் படுகையில் படுத்துவிட்டான். அவனுக்கு மிகவும் களைப்பு. வெளியே விடாமல் மழை பெய்து கொண்டிருந்தது. அந்தச் சத்தத்தை தவிர வேறு சத்தமே இல்லை. சற்றே குளிரவும் செய்தது. குடிசையின் சுவர் இடுக்கு வழியாக காற்று வீசிற்று. சேனிமாயி தன் மூட்டையை அவிழ்த்து வேறு ஒரு ஜோடி துணியை எடுத்துக் கட்டிக் கொண்டு. உடுத்தியிருந்த துணிகளை உலர்த்தினாள். பிறகு தான் கொண்டுவந்திருந்த ஒரு துணியை எடுத்துக் கொண்டு வந்து குலச் படுத்திருந்த பலகைக்கு வந்து விரித்து. "மற்றொருவர் படுக்கையில் என்னால் படுக்க முடியாது; கொஞ்சம் நகர்ந்து கொள். இதை விரிக்கிறேன்." என்றாள். படுத்துக் கொண்டதும் அவள் விளக்கை அணைத்தாள். சிறிது நேரம் இருவரும் பேசாமல் தூக்கம் வருவித்துக் கொள்ள முயன்றனர். இருவருக்கும் தூக்கம் வரவில்லை.

"சேனி.." என்று கூப்பிட்டான் குலச்; அவள் ஏனென்று கேட்டாள். "நாளைக்கு நாம் இங்கிருந்து கிளம்பி விட வேண்டும்;

பலத்த மழை பெய்திருக்கிறது. அங்கே என்ன ஆயிற்றோ தெரியவில்லை"

"ஆமாம்; ஆற்றில் வெள்ளம் வராவிட்டால்தான் க்ஷேமம்-" என்று சொல்லிக் கொண்டே அவள் குலச்சின் பக்கமாய் ஒருக்களித்துக் கொண்டாள். அவனும் அவ்வாறே செய்தான். "நீ உன் பணம் காசுகளை எனக்காகச் செலவு செய்கிறாய். நோயாளி நிஜமாகவே குணமடைந்துவிடுவானா?" என்றாள் அவள். அவள் குரலில் சந்தேகம் தொனித்தது.

"எப்படி ஆகிறதோ? குணமானாலும் ஆகலாம்.."

"தேறமாட்டான் என்றே எனக்குத் தோன்றுகிறது; அவன் குணமடைய வேண்டும் என்று எதிர்பார்த்தேன்.."

பொதுவாக, "ஆமாம்.." என்றான் குலச். மீண்டும் இருவரும் சிறிது நேரம் ஒன்றும் பேசாமல் மழைச் சத்தத்தைக் கேட்டுக் கொண்டிருந்தனர். "நாம் இரண்டு பேரும் சேர்ந்தே இருந்திருக்கலாமா இரவில்; சந்திரன் ஒன்றும் நினைக்கமாட்டானா?" என்று கேட்டாள் சேனிமாயி.

குலச், "அவன் எதுவும் நினைக்கமாட்டான்; அவன் ஒரு தனி வகையான ஆள்" என்றான்.

"நிஜமாகவா?" என்று கேட்டுக் கொண்டே அவனை இன்னும் நெருக்கிக் கொண்டு, "நினைத்தால் நினைத்துக்கொள்ளட்டுமே.." என்றாள் சேனி.

## முப்பத்தி மூன்று

பெரிய துறைக்கருகில் பஸ்ஸிலிருந்து இறங்கியதும் குலச்சும் மற்றவர்களும் கண்ட தன்சிரியின் தோற்றம் அவர்களைத் திடுக்கிட வைத்தது. ஆற்றின் பரப்பு முழுவதும் ஒரே நீர்ப்பெருக்கு. எங்கு பார்த்தாலும் ஒரே நுரை. தண்ணீர் கரையை உடைத்துவிடும்போல் இருந்தது. இன்று மழை சற்று நின்றிருந்தது. இதே மாதிரி இருந்துவிட்டால் தண்ணீர் பெருகுவது ஒரே நிலையில் இருந்துவிடும். ஆனால் மெல்ல மலைமேல் இன்னும் மழை பெய்தால் இந்தத் தடவை தன்சிரி கரையை உடைக்காமல் இருக்காது. இதில் சந்தேகமே இல்லை. நதி வழியாகவே கீழே போய் டாலிம் துறையில் இறங்கினால் அவர்கள் சீக்கிரமாக

ஊருக்குப் போய்ச் சேரலாம். ஆனால் அப்படிச் செய்ய முடியாது. சின்னப்படகில் போவது ஆபத்து. பெரிய படகோ இல்லை. பஸீரத்தின் படகு திரும்பிப் போய்விட்டிருந்தது. சந்திரன் இருந்தாலும் ஆலோசனை செய்து ஏதாவது வழி சொல்வான். அவனுக்குத் தைரியமும் உண்டு, அறிவும் உண்டு. இல்லாவிட்டால் அவன் கிராமத்திலும் நகரத்திலும் எங்குமே முன்னே நிற்பவனாய் ஆகியிருக்கமுடியுமா? அவன் அங்கேயே தங்கிவிட்டான். யாரையோ பார்க்க வேண்டுமாம். சிபரியா கிராமத்தில் வைத்திருக்கும் பள்ளிக்கூடத்திற்கு கிராண்ட் வாங்க யாரையோ பார்க்க வேண்டுமாம்; இன்னும் எத்தனையோ ஜோலிகள். அவன் இன்னும் இரண்டு மூன்று நாள் கழித்தே திரும்புவான். நம்முடனேயே சுற்றிக் கொண்டிருந்தால் வேலை நடக்குமா?

சேனியும் குலச்சும் நடக்க ஆரம்பித்தார்கள். பாதையோ சரியில்லை. தூரமும் அதிகம்; கோடைக்காலத்தில் குறுக்குப்பாதை உண்டு; ஆறு ஏழு மைலில் போகலாம். இப்போது இந்த மழைக் காலத்தில் சுற்றி வளைத்துக் கொண்டு போக வேண்டியிருப்பதால் பத்துமைல் ஆகிறது. பத்து மைல் காலால் நடந்து போவது குலச்சுக்கு ஒன்றும் சிரமமான வேலையில்லை. சேனிமாயி மிகவும் கஷ்டப்படுவாள். பாதையும் ஒரே வளையும் சேறுமாய்க் கிடக்கிறது.

அன்று காலையிலேயே ஆஸ்பத்திரியில் இருவரும் கேலாயியிடம் சொல்லிக் கொண்டுதான் புறப்பட்டார்கள். "டாக்டர் நீ குணமடைந்துவிடுவாய் என்கிறார். கவலையே படாதே" என்று தைரியம் சொன்னபின், குலச் அவனிடம் பதினைந்து ரூபாய் பணம் கொடுத்து, "ஒரு கஷ்ட நஷ்டம் ஏற்பட்டாலும் கையில் பணம் இருக்க வேண்டும்; இதை வைத்துக் கொள்" என்றான். கேலாயி கண்ணீர்த் துளிகளுடன் தன் நன்றியைத் தெரிவித்தான். சேனீ அவன் முகத்தை தடவி... கால்கைகளை அமுக்கிவிட்டு, "நான்... இங்கு ஒரு வசதியும் இல்லை. எல்லாரும் முகம் தெரியாதவர்கள். செலவும் ரொம்ப ஆகும்; இல்லாவிட்டால் நான் இங்கேயே இருந்துவிடுவேன்." என்றாள்.

கேலாயி மிகவும் சோர்ந்து தழுதழுக்கும் குரலில், "நீ இங்கு இருக்க வேண்டிய அவசியம் இல்லை; எங்கே தங்குவாய்? எங்கு சாப்பிடுவாய்? குலச் அண்ணனுடன் நீயும் போ..உம்..நம் வீட்டில் ஒன்றுமே இல்லை. எங்கள் கிழவன் உனக்கு எப்படிச்

சோறுபோடுவான்? திகர்தான் என்ன செய்ய முடியும்? எனக்கு ஒன்றும் புரியவில்லை. நீ என்னுடன் சுகமாக வாழவே இல்லையே. நிறையக் கஷ்டமும் பட்டுவிட்டாயே. குலச் அண்ணன் உன்னை நேசிப்பான்..." என்று சொன்னவன் களைத்துப் போய் பேசுவதை நிறுத்தினான். அவன் கண்களில் கோடிகளில் கண்ணீர் தளும்பிற்று. சேனியும் குலச்சும் அவனை உற்றுப் பார்த்தார்கள். அவனுடைய கண்களில் உயிரின் சிறு சுடரும் தென்படவில்லை. அவன் மரணத்தை நோக்கிப் போய்க்கொண்டிருப்பதாகத் தோன்றிற்று இருவருக்கும். சேனியின் கண்களும் கலங்கிக் குழம்பிவிட்டன. ஒருக்கால் தன் எஜமான் என்பதற்காக இல்லையாயினும், வாழவிரும்பும் ஒரு வாலிபனுக்காகவேகூட அவள் கண்கள் கலங்கிற்று. இதற்குப்பிறகுதான் ஆஸ்பத்திரியை விட்டுப் புறப்பட்டார்கள். அவர்கள்பெரிய துறைக்கு வரும்போது நண்பகல் ஆகிவிட்டது சீக்கிரமாகவே வீட்டுக்குபோய்விட்டால் தான் நல்லது. இல்லாவிட்டால் இருட்டிவிடும்.

இரண்டு பேருக்குமே சேற்றில் நடந்து பழக்கம் உண்டு. இருவருமே வாலிபப்பருவம். உடல் வலிமையும் உள்ளவர்கள். இருபத்தேழு வயதுள்ள குலச் இருபத்தோரு வயதுள்ள சேனிமாயி. காட்டுவழியாக இருவரும் மெல்லவே நடந்தனர். தெற்குத் திசை வானத்தில் ஏராளமான மேகங்கள். பருவகால மேகத்தை நம்பவே முடியாது. வழியில் மழை வந்தால் தலையை மறைத்துக் கொள்ளக்கூட இடமில்லை. நனைந்து விரைக்க வேண்டியதுதான்.

யாருமே இல்லாத பாதையில், பழக்கமுள்ள ஒரு வாலிப வயதுப்பெண்ணையும் கூட அழைத்துக் கொண்டு அமைதியைக் குலைத்துக் கொண்டு வழி நடப்பதில் ஒரு தனி ஆனந்தம் உண்டு. இருவருடைய மனத்திற்குள்ளும் எத்தனையோ கதைகள் இருக்கின்றன. ஆனால் சொல்லிக் கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. குலச்தான் இன்றைக்குச் சேனிமாயிக்குத் துணை. அடைக்கலம் எல்லாமே. அவள் அவனிடமே தன்னை ஒப்படைப் பாள். அவனும் அவளை ஆபத்திலிருந்து காப்பாற்றுவான். குலச் இந்தக் கணம் வரையில் கூட அவளுடன் தனக்கு இருக்கும் உறவைப்பற்றி ஒருமுடிவுக்கு வர முடியவில்லை. இன்னும் கேலாயி உயிருடன் இருக்கிறான். அவன் இன்னும் பல நாள் உயிருடன் இருக்கவும் வாய்ப்பு உண்டு. அப்படியானால் குலச் சுக்குக் கவலையே இல்லை. ஆனால் கேலாயி பிழைக்காவிட்டால்... குலச்சால் அவளைக் கவனித்துக் கொள்ள முடியும்; அவளுக்கு

அவனால் செலவுக்குப் பணமும் கொடுக்க முடியும்; ஆயினும் அவர்கள் இருவருக்கும் சமுதாயத்தில் எந்த வகை உறவு இருக்கும்? கபாஹி இருக்கிறாள்; தரா இருக்கிறாள். கூடவே சமூகமும் இருக்கிறதே. இதை யோசித்துக் கொண்டிருந்த குலச்சின் இந்தச் சிந்தனையைக் கலைத்து, "என்ன யோசிக்கிறாய்? என்னைப் பற்றி அவ்வளவு யோசிக்கத் தேவையே இல்லை." என்றாள் சேனி.

"யோசிக்காமல் இருக்க முடியுமா?"

"யோசித்து என்ன செய்யப் போகிறாய் ? என் விதிப்படியே நடக்கும் எல்லாம். ஏது நடந்தாலும் எனக்குத் தானே எதுவும்; நீ கவலைப்படாதே." என்றாள்.

"நீ எப்படி வாழ்க்கை நடத்துவாய்?"

"கபாஹி இருக்கும்போதே நீ என்னிடம் இப்படி சிநேகமாக இல்லையா? இதே மாதிரி என்னிடம் சிநேகமாய் இரு. வேறு எனக்கு என்ன வேண்டும்? நீ என்னிடம் சிநேகமாய் இருக்கும் வரை எனக்கு பயமே இல்லை"

முன்பொருநாள் சேனிமாயி தன் வீட்டைவிட்டுக் குலச்சுடன் அவனுக்கு மனைவியாய் இருக்க வேண்டும் என்ற ஆசையுடன் ஓடிவந்துவிட்டாள். வாழ்வு முழுதும் அவனுடன் இருக்கும் எண்ணத்துடன்தான் அன்று வந்தாள். அந்த நம்பிக்கை சுக்குநூறாகச் சிதறிவிட்டது. அவளுடைய வாழ்க்கை வேறு விதமாயிற்று. அதே சேனி சூழ்நிலை காரணமாக அவனிடமே மறுபடியும் வந்திருக்கிறாள்; எப்படி அவள் வந்தும் கூட அவளைச் சொந்தமாக்கிக் கொள்ளும் வழி அடைபட்டிருந்தது. அவனுடைய வாழ்வில் ஆச்சரியப்படத்தக்க விதத்தில் கபாஹி வந்து சேர்ந்திருந்தாள். அவளுக்கும் அவனுக்கும் கணவன் மனைவி என்ற உறவு ஏற்பட்டிருக்கிறது. அதுவும் சமூகம் ஒப்புக் கொண்ட வழியிலேயே வந்திருக்கிறது.

கேலாயி இன்னும் உயிருடன் இருக்கிறான். சேனிமாயி தனக்குக் குழந்தைகள் பிறக்கும் கனவு காண்கிறாள். சமூகம் என்ன நினைத்தாலும் நினைக்கட்டும். சேனிமாயிக்கும் குழந்தைகள் பிறந்தால் அவற்றின் தகப்பன் கேலாயி இல்லை, தான்தான் என்பது குலச்சுக்கு நன்றாகவே தெரியும். உண்மையில் குழந்தைகள் பிறந்தால்.

கபாஹியால் தகப்பனாகும் பெருமையை குலச்சுக்குத் தரமுடியாது. குலச் தன் உள்ளத்தின் ஆழத்தில் ஊடுருவிப் பார்த்தபோது ஒரு விஷயத்தை உண்மையை மிகத் தெளிவாய் திடமாய் அநுபவித்து அநுபவபூர்வமாய்த் தெரிந்து கொண்டான். கபாஹி, சேனிமாயீ, இருவரில் ஒருத்தியையும் அவன் மனமார விரும்பவில்லை. அவர்கள் அவனுடைய வாழ்வில் இல்லையென்றாலும் அவனுக்குப் பெரிய குறையாக மூளியாக அது இருக்காது. சமுதாய ரீதியில் அவர்களுடன் அவனுக்கு அத்தகைய உறவு இருந்தாலும் மனமார்ந்த உறவு இல்லை அது. அவர்கள் இருவரில் ஒருத்தியையும் அவன் மனமார விரும்புவதை, அவனுடைய உயிரின் உத்தமமான வேட்கையை நிறைவு செய்ய முடியாது என்பது அவனுக்கும் புரிந்தது மிகவும் ஆழமாய்ச் சிந்தித்த பிறகுதான் இது புரிந்தது; ஆக அவர்களை அவன் மனமார விரும்பவில்லை; அவர்கள் இல்லாவிட்டாலும் அவன் வாழ்க்கை நடக்கும்.

இதைப் புரிந்து கொண்டபோது அவன் பயந்து கலங்கினான். கார் மேகங்கள் கீழே இறங்கியிருந்தன. அப்போது பகல் பாக்கியிருந்தது. ஆனால் அந்தியும் கவிய இருந்தது. ஒரு பீடி பற்ற வைப்பதற்காகச் சற்று நின்றான் குலச். ஆலமரத்தடியில் உட்கார்ந்து சேனிமாயியும் தண்ணீர் கூஜாவைத் திறந்தாள். அவர்கள் ஏதோ ஒரு கிராமத்துக்கு வந்து சேர்ந்திருந்தார்கள், பீடியைப் பல்லில் இடுக்கிக் கொண்டு அப்படியே எதிரில் சுற்றிலும் பார்வையைச் செலுத்தினான். கண் பார்க்கும் தூரம் வரை பசுமையான வயல்கள். பயிர்கள் பசுமையாய்த் தழைத்து வளர்ந்திருந்தன. காற்றில் அசையும்போது பசுமை அதிகமாய்த் தெரிந்தது. பயிர்கள் சரசரவென்ற ஒலியுடன் காற்றில் நடனம் ஆடுகின்றன. அவன் மனத்தில் சற்று முன் தோன்றியிருந்த பயமும் நடுக்கமும் விரைவில் எங்கோ ஓடி மறைந்தன. அவனுக்குப் பெரிய ஆனந்தம் ஏற்பட்டது. அவன் ஏகாந்தமாக இமைக்காத கண்களுடன் வயல்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். சேனியும் பார்த்துக் கொண்டிருந்தாள். "இந்த வயல்களுக்குத் தான் எத்தனை எழில்...ஆஹா...அற்புதம்...அருமை" என்று கனவு காணும் ஆவேசத்தில் குலச் பேசினான்.

"இந்தப் பயிர் நம்மூரிலும் இப்படித்தான் இருக்கிறது.", என்று சொல்லிக் கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தான். திடீரென்று எதையோ பார்த்துவிட்டு எழுந்து நின்று, சட்டென்று அந்தப் பக்கம் ஓடினான் அவன்.

"அந்தப் பக்கம் எங்கே போகிறாய், குலச்?" என்று கேட்டாள் சேனிமாயி; அவன் பதில் சொல்லாமல் போவதைத் தானும் எழுந்து நின்று பார்த்தாள் சேனிமாயி. சிறிது நேரத்தில், குலச் ஒரு எருமைக் கடாவை மூக்கணாங்கயிற்றைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தான். "யாருடையது இது?" என்று கேட்டாள் சேனீ.

"யாருடையதோ தெரியாது; வேலியை முறித்துக் கொண்டு நெல் வயலில் இறங்கி ஏராளமான பயிரைத் தின்று அழித்திருக்கிறது. கடா விழுந்து இப்படி அழித்தால் நெல் எப்படிக் காணும் கண்டு முதல் செய்யும் போது? சரி, வா... போவோம்..." எருமையை விரட்டிவிட்டான். அது அவனை முறைத்துவிட்டுப் புல் மேயத் தொடங்கிற்று. "வயலில் பயிர் செய்துவிட்டால் மட்டும் போதாது. பாதுகாக்க வேண்டும் பத்திரமாக. இப்படி மாடு தின்று அழித்தால் மனிதர்களுக்கு என்ன மீதி இருக்கும்?" மேலே நடந்தார்கள். வழியில் இருவருக்குள்ளும் விசேஷமாக ஒன்றும் நடக்கவில்லை.

அந்தி நேரம் வந்ததும் சேனியை அவள் வீட்டில் கொண்டுபோய் விட்ட குலச், மிகவும் விரைவாகத் தன் வீட்டை நோக்கி நடந்தான். கேலாயி பற்றி மோலோகாவுக்கும் மற்றவர்களுக்கும் சேனியே சொல்லிவிடுவாள் என்பது குலச்சின் எண்ணம்.

போய் வந்த செலவு. சந்திரன் மூலமாக டாக்டருக்கும் நர்ஸ்களுக்கும் கொடுத்தது, கேலாயி கையில் கொடுத்த ரொக்கம், ஹோட்டல் செலவுகள் முதலிய எல்லாம் போக அவன் கொண்டு போன பணத்தில், இருபத்தேழு ரூபாய் பாக்கியிருந்தது. பையில் இருந்து பணத்தை எடுத்து ஏழு ரூபாயைத் தான் வைத்துக் கொண்டு மீதி இருபது ரூபாயைச் சேனியின் கையில் கொடுத்து, "சில நாட்கள் நடக்கும், மறுபடியும் நான் இந்தப் பக்கம் எப்போது வருவேன் என்று சொல்ல முடியாது. அவசியமிருந்தால் நீயே வா" என்றான். சேனிமாயி கையை நீட்டிப் பணத்தை வாங்கிக் கொண்டாள். அந்த இருட்டிலே அவனை ஒரு தடவை பார்த்தாள். அவன் நிற்கவில்லை.

வீட்டுக்கு வந்தபோது வாசலில் திகர் கபாஹியுடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். இரண்டு பேரையும் முறைத்துப் பார்த்தான் குலச். "வந்தாயிற்றா?" என்று திகர் கேட்டான். அவன் கேட்டதற்குப் பதிலே சொல்லாமல் பின் பக்கம்

போனான். தராவைக் கூப்பிட்டான். தரா அவசரமாய் வெளியே வந்து அவன் மூட்டையை வாங்கிக் கொண்டு அவனுக்குக் கைகால் கழுவத் தண்ணீரும் கொண்டு வந்து கொடுத்தாள். அப்பொழுது வெளியே இருட்டிவிட்டது. செம்பையும் அரிக்கன் லைட்டையும் எடுத்துக் கொண்டு குலச் வாசலுக்கு வந்தான். சொம்பை வைத்துவிட்டு விளக்குடன் மாட்டுக் கொட்டிலுக்குப் போனான். வெளிச்சத்தில் மாடுகன்றுகளை ஒவ்வொன்றாகப் பார்த்தான்.

"தரா எல்லாவற்றிற்கும் தீனி வைத்தாயா? எருமைக்கு வயிறு நிரம்பி இருக்காது; புல் அரிந்து கொண்டு வந்து போட்டிருக்க மாட்டீர்கள். வெள்ளைக் கிடாரி..சரி, சரி....அதோ நிற்கிறது. அவன் விளக்கோடு போவதைப் பார்த்து கடா எழுந்து நின்றது. அவனும் அதன் தலையைத் தடவிக் கொடுத்தான். அதுவும் தன் கரிய கண்களால் அவனைப் பார்த்தது. அன்பு கனிந்த பார்வை. சொம்பிலிருந்து வலது காலில் தண்ணீர் ஊற்றிக் கொண்டபோது திடீரென்று அவனுக்கு என்னவோ நினைவு வந்தது. சொம்பை அங்கேயே வைத்துவிட்டு, குச்சி காம்புகளால் பந்தம் கட்டினான். அதைக் கொளுத்திக் கொண்டு வயல் பக்கம் வேகமாய் ஓடினான்.

"இப்போதே அங்கு போக வேண்டுமா?" என்று தரா கேட்டாள். "ஒரு தடவை வயலைப் பார்த்துவிட்டு வருகிறேன். ஆற்றில் நிறையத் தண்ணீர் வந்திருக்கிறது. அது எங்கேயாவது உடைத்துக் கொண்டால் எல்லாமே போய்விடும்" என்று சொல்லிக் கொண்டு பந்தத்துடன் அவன் போய்விட்டான். கபாஹி திகரிடம், "வந்த உடனே வயலைப் பார்க்கக் கிளம்பிவிட்டான். ராத்திரிக்குள் அது ஓடியா போய் விடப்போகிறது? காலையில் போய்ப் பார்த்தால் போதாதா? நம் இருவரிடமும் ஒரு வாய் வார்த்தை கூடப் பேசவில்லை. வயல் பக்கம் ஓடியிருக்கிறான். இந்த மனிதனுக்கு வேறு கவலையே கிடையாது" என்று சொன்னாள்.

தரா அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தவள் உடனே உள்ளே போய் அவனுக்குச் சோறு சமைக்கத் தொடங்கினாள்.

## முப்பத்தி நான்கு

மறு நாள், பயங்கரமான கரிய மேகங்களால் ஆகாயம் மறைந்திருந்தது. இரவெல்லாம் பெய்த மிகப் பெரிய மழைக்குப்

பிறகு காலையில் மழை நின்று இருந்தது; என்றாலும் மறுபடியும் மழை பெய்வதற்கான ஆயத்தம் ஆகாயத்தின் கருப்பத்திலே தெரிந்தது. தெற்கே விடாத மேகங்களின் கர்ஜனை இடி முழக்கம் கேட்டது. பயங்கரமான மின்னல்; நடக்கக்கூடாத ஆபத்துக்கு பூமி பயத்தால் நடுங்கிக் கொண்டே தயாராகிறது. இன்னும் சில கணங்களுக்குள் பேய் மழை பெய்யப்போகிறது. இதுபோல விடாமல் மழை பெய்வதின் விளைவு மிகக் கெடுதலாகவே இருக்கும். விடியற்காலையில்தான் உழவுக்குப் புறப்படும் நேரத்தில் எழுந்து குலச் வெளியே வந்தான். சுற்றிலும் பார்த்தான்; இன்று உழ முடியாது. ஆற்றின் வெள்ளம் கரையில் மோதிக் கொண்டிருக்கிறது; இன்னும் கரை உடையவில்லை. ஆற்றுநீர் உள்ளே வராமலேயே மழை ஜலம் வயல்கள் முழுவதையும் மறைத்திருந்தது. வயலில் இடுப்பளவு தண்ணீர். குலச் பயத்துடன் கொஞ்ச தூரம் வரை பார்வையைச் செலுத்தினான். பிறகு மண்வெட்டியை எடுத்துக்கொண்டு ஆற்றின் கரைக்குப் போனான். அங்கே மற்றவர்களும் அரிவாளும் மண்வெட்டியும எடுத்துக்கொண்டு கரைக்கு வந்திருந்ததைக் கண்டான். எல்லாருமாகச் சேர்ந்து வரப்போகும் வெள்ளத்திலிருந்து தம் நிலங்களைக் காத்துக் கொள்ளக் கரையில் மண்ணை வெட்டிக் கொட்டியும் பக்கத்தில் இருக்கும் காட்டு மரங்களை வெட்டிப் போட்டும் அணையிட்டு, கரையை உயர்த்த முடிவு செய்திருந்தார்கள். இன்று வெள்ளத்தைத் தடுக்கும் அணை போட முடியாது. என்ன செய்தாலும் இரவுக்குள் கிராமத்தைக் காப்பாற்ற முடியாமலும் போகலாம். சிபரியா கிராமத்து வாலிபர்களும் பெரியவர்களும் கூடியிருந்தார்கள்; அவர்கள் தைரியத்தை இழந்துவிட்டார்கள். தன் சிரியைத் திருப்பி அனுப்ப வேண்டும்; இல்லாவிட்டால் அது மரணத்தைத்தான் கூட அழைத்து வரும்; மண் வெட்டியாலும் கையாலும் கூடையாலும் எப்படியெல்லாம் முடியுமோ அப்படியெல்லாம் மண்ணை வெட்டிப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள. எப்படியாவது ஒரு முழம் கரையை உயர்த்திவிட்டால் ஆபத்திலிருந்து தப்பித்து விடலாம். அந்தப் பக்கத்துக் கரை இயற்கையிலேயே உரயமாய் அமைந்துவிட்டது. டாலிம் கிராமத்துத் துறைப் பக்கமும் உயரம் தான். நடுவில், அரைமைல் நீளத்துக்கு தாழ்வான கரை; இதன் வழியாகத்தான் கிராமத்துக்கு ஆபத்து வரக்கூடும். மூச்சைப் பிடித்துக் கொண்டு சிறிதும் ஓய்வு கொள்ளாமல் காலையிலிருந்து மாலை வரை எல்லோரும் சேர்ந்து கரையைச் சிறிது உயர்த்திவிட்டனர். மூங்கில்களையும் மரங்களையும் கொண்டு

முளை அடித்து வைக்கோலும், கோரையும் வேறு காய்ந்த புற்களையும் போட்டு, அதன்மேல் மண்ணை கொட்டி அணை அமைத்தார்கள். மழை மிகவும் பலமாகப் பெய்து விட்டாலும் கரை உடையாது. தண்ணீரும் ஊருக்குள் புகுந்து விட்டது.

மற்றவர்கள் போன பிறகும் குலச் தன் நிலம் இருக்கும் பக்கம் கரைக்கு மண் வெட்டிப் போட்டான். வெள்ளத்தில் அவனுடைய புதிய நிலங்கள்தான் பெரிதும் பாதிக்கப்படும். கடைசியில் அவனுக்கு மிகவும் பசி வந்துவிட்டபடியால், நிலத்தை சுற்றிப் பார்த்துவிட்டு வீட்டுக்கு வந்தான். அப்பொழுது பகல் தேய ஆரம்பித்திருந்தது. கபாஹியும் தராவும் கவலையுடன் அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். குளத்தில் ஒரு முழுக்குப் போட்டுவிட்டு அவன் வந்தவுடனே தரா சாப்பாடு பரிமாறினாள். அவன் மனக்கவலையுடன் சாப்பிட்டு எழுந்தான். ஒரே களைப்பு; இருந்தாலும் ஓய்வு எடுத்துக் கொள்ளும் நேரம் இல்லை. அவன் ஒரு கால் சட்டையைத் தேடி எடுத்துப்போட்டுக் கொண்டு கூரையில் சொருகியிருந்த சாட்டையையும் உருவி எடுத்துக் கொண்டு கிளம்பினான். அவன் கையில் வெற்றிலை பாக்கை மடித்துக் கொடுத்த கபாஹி . "மறுபடியும் எங்காவது போகிறாயா என்ன?" என்று கேட்டாள். அவன் பதில் சொல்லவில்லை. "திகர் நேற்றைக்கும் வந்திருந்தான்; இன்றைக்கும் வந்து உட்கார்ந் திருந்தான்.." என்றாள்.

"அவன் எதற்காக வந்தான் இங்கே? என் வீட்டிற்கு அவன் என் வர வேண்டும்?"

"ஒரு மனிதன் வருவதால் என்ன குற்றம்? கேலாயியை அழைத்துப் போய் பட்டணத்தில் விட்டு வந்திருக்கிறீர்கள்; அதைப் பற்றித் தெரிந்து கொள்ளக்கூட அவன் வரக்கூடாதா என்ன?"

"அவனுடைய அண்ணிதான் இருக்கிறாளே. அவளைக் கேட்டால் தெரியாதா? இங்கே வந்து வெற்றிலை போட்டுக் கொண்டு வீண் அரட்டையும் வம்பு பேசிக் கொண்டிருந்தால் கேலாயியைப் பற்றித் தெரிந்துவிடுமோ? இந்த வேலையற்ற வனுக்கு வேறு வேலையே கிடையாது. கிராமத்திலுள்ள அத்தனை பேரும் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு ஆற்றிற்குக் கரை கட்டிக் கொண்டிருக்கிறார்கள். இந்த வேலையற்ற தடியன் இங்கே வந்திருக்கிறான் அரட்டையடிக்க.."

கபாஹிக்கும் கோபம் வந்துவிட்டது. குலச் அவளிடம் இப்படிக் கடுமையாகப் பேசியதே கிடையாது. அவளும் கடுமையாகவே. "நீ மட்டும் வீடு வீடாகப போய் அரட்டையடிப்பதில்லையோ? எனக்கும் தெரியுமே. நாள்தோறும் ஒரு தடவை சேனியின் வீட்டுக்குப் போகாவிட்டால் உன் மனத்துக்கு நிம்மதி இருப்பதில்லையே. நீ சம்பாதித்த காசைச் செலவழித்துக் கொண்டு கேலாயியையே கோலாகாட்டுக்கு அழைத்துக் கொண்டுபோக வேண்டிய அவசியம்தான் என்னவோ?"

குலச் மிகவும் கடுமையும் கொடுமையும் ஏறிய குரலில், "கபாஹி, இன்று உன் நிலை மிகவும் மோசமாகிவிடப் போகிறது. என் பணம்-நான் செலவழிக்கிறேன். ஆற்றிலேயே எறிவேன்; நீ யார் இதைக் கேட்க? ஒரு வைப்பாட்டிற்கு இத்தனை வாயா?"

"நான் வைப்பாட்டியானால் நீ யார்? இன்னொருத்தன் பெண்டாட்டியைப் பட்டணத்துக்கு இழுத்துக்கொண்டுபோய்ச் சுற்றித் திரிய உனக்கு வெட்கமாயில்லையா? இங்கே ஊரே கைகொட்டிச் சிரிக்கிறது."

சடக்கென்று திரும்பித் தாங்க முடியாத கோபத்துடன் கையிலிருந்த சாட்டையால் கபாஹியை அடிக்க ஆரம்பித்தான். "ஓடிவந்த நாயே, போக்கிரி செருக்கி, போடி வெளியே..போ என் வீட்டிலிருந்து.." என்று சொல்லிக் கொண்டே அடித்தான்.

கபாஹி ஆடாமல் அசையாமல் நின்றாள். சத்தமும் போடவில்லை; அழவும் இல்லை. ரொம்ப அழுத்தமாய், "அடி, எவ்வளவு முடியுமோ அவ்வளவு வரை அடி; இப்போதே என்னை அடித்து விரட்டினால்தான், சேனிமாயியைக் கொண்டுவந்து வைத்துக் கொள்ள முடியும். கேலாயியை அவன் சாவதற்காகவே பட்டணத்தில் கொண்டுபோய் விட்டு வந்தாய்; இதோ நான் போய்விடுகிறேன். நான்தானே உங்கள் வழியில் குறுக்கே நிற்கிறேன் தடையாக.." "போ..போ..உன்னைப் போக வேண்டாமென்று இங்கே யாரும் தடுக்கவில்லை. தொலை; எங்கே போக ஆசையோ அங்கே போ. மறுபடியும் உன்னை நான் கூப்பிட வந்தால் என்னை நாயே என்று கூப்பிடு. எனக்கு மட்டும் தெரியாதோ; துறையில் பஸீரத் படகை வைத்துக் கொண்டு உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறான். நாஹருடன் நிக்கா செய்து கொண்டு பஸீரத்துடன் கண்ணடித்துக் கூடினவள் தானே நீ.."

தரா பயந்து திடுக்கிட்டு நின்றாள்; அவர்கள் இருவரையும் பார்த்து, "உங்கள் இரண்டு பேருக்கும் இன்றைக்கு என்ன வந்து விட்டது? ஏதோ போறாத காலம்தான். இப்படிச் சண்டைபோட வேண்டிய அவசியம்தான் என்ன?" என்றாள்.

குலச் வெளியே வந்து கட்டியிருந்த கால்நடைகள் எல்லாவற்றையும் அவிழ்த்துவிட்டான். சேனிமாயி வீட்டுப்பக்கம் விரட்டி அடித்து ஓட்டிக் கொண்டு போனான்.

கபாஹி சிறிது நேரம் நின்றிருந்தாள். தனக்குத்தானே பேசிக் கொள்வதுபோல், "இவனுக்குத் தங்க இடமோ மனிதர்களோ இல்லை; நான் வந்துதான் குடியும் குடித்தனமும் செய்து வைத்தேன்; குடும்பமும் நடத்தினேன். இன்றைக்கு நான் ஓடி வந்தவள் ஆகிவிட்டேன் இவனுக்கு. இந்தப் பழிகாரன் வீட்டில் இனிச் சோறு தின்னமாட்டேன். பஸீரத்துடன் போகிறேன் அல்லது வேறு எவனுடனாவது போகிறேன். கை இருக்கிறது; உழைத்துச் சாப்பிடுவேன். இல்லாவிட்டால் உலகம் இருக்கவே இருக்கிறது. பிச்சையெடுத்துத் தின்பேன்; நீங்கள் எல்லாம் ராஜபோகத்தை அநுபவியுங்களேன்." என்று சொல்லிவிட்டு, ஒரு மூட்டையை வயிற்றோடு அழுத்திக் கொண்டு மெல்ல மெல்ல வீட்டிலிருந்து வெளியே போனாள். அவள் பார்வையிலிருந்து மறைகிறவரை தரா பார்த்துக் கொண்டு நின்றாள். பிறகு, "என்ன நடக்கிறதோ, எனக்கொன்றும் தெரியவில்லையே" என்று சொல்லிக்கொண்டாள். வீட்டிற்குள் தனியே இருக்கப் பிடிக்கவில்லை தராவுக்கு. வாசலுக்கு வந்தாள். ஒரே மேக மூட்டம்; புழுக்கமும் தாங்க முடியவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் பெரிய மழை பெய்யும். வாசலில் இருக்கும் இரண்டு சாமந்திப் பூச்செடிகளைப் பார்த்தாள். இரண்டும் காய்ந்து போயிருந்தன. வாடிக் கருகிய பூக்கள் சில காம்போடு தொங்கின. அடுத்தாப்போல் இருந்த சூரியகாந்திச் செடியை பார்த்தாள். காலையில் ஒரு பூ பூத்திருந்தது. இப்பொழுது மேற்கே போன சூரியனுடன் கூடவே அதுவும் மேற்கு நோக்கித் திரும்பி இருந்தது. சூரியன் மேகங்களின் இடையே மறைந்திருந்ததால் அந்தப் பூவின் மலர்ச்சி சற்றே வாடி மங்கியிருந்தது; ஆனாலும் பூவின் இதழ்கள் புதியனவாகவே இருந்தன. சிறிது நேரம் அந்தப் பூவையே பார்த்துக் கொண்டு இருந்துவிட்டு உள்ளே போனாள். வானத்தில் பிரளயத்தின் அறிகுறி தென்பட்டது.

மாடுகன்றுகளை ஓட்டிக் கொண்டு சிபரியா கிராமத்தின் கோடிக்குச் சென்றான் குலச். ஐரக்கின் வீட்டின் பக்கம் கொஞ்சம் மேடான இடம். அங்கே எப்போதுமே தண்ணீர் ஏறுவதில்லை. வெள்ளம் வரத்தான் போகிறது; ஆகவே வெள்ளம் ஏறாத இடத்தில் கால்நடைகள் பத்திரமாக இருக்கட்டுமே-வெள்ளம் வராமல் இருந்துவிட்டால், நாலைந்து நாட்கள் கழித்து அவற்றை மறுபடியும் ஓட்டிக் கொண்டு வரலாம். குலச் வேகமாக வீட்டுக்கு வந்து கொண்டிருந்தான். வழியில் சந்திரனைக் கண்டான். அவனும் அவசரமாகப் போய்க் கொண்டிருந்தான். "எங்கிருந்து வருகிறாய் சந்திரா?" குலச் கேட்டான். "டவுனிலிருந்து வருகிறேன். தன்சிரியில் வெள்ளம் வரும் என்று அங்கே தெரிந்தது. ஆற்றுக்கு மேலே பெரிய வெள்ளம் வந்திருக்கிறது. இங்கும் வரலாம். சொல்ல முடியாது. நிவாரண வேலைக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். நீங்கள் பத்திரமாக வந்து சேர்ந்தீர்களா?"

"எப்படியோ வந்து சேர்ந்துவிட்டோம். நம் கிராமத்தார்கள் சேர்ந்து அணை போட்டிருக்கிறோம்; இப்போது நன்றாகவே இருக்கிறது; ஆனால் பெரிய மழை வந்தால் அது தாங்காது-"

"மழை வரும் கட்டாயம். வானத்தைப் பார்த்தால் தெரிய வில்லையா? நீ இந்தப் பக்கம்.."

"கால்நடைகளை ஓர் இடத்தில் பத்திரமாகவிட்டு வந்தேன். வெள்ளம் வந்தால் யாருக்கு யாரைப்பற்றி கவலை இருக்கும்-"

"சரி நேரா டைம், நான் டவுனில் எஸ்.டி.ஓவிடம் சொல்லி விட்டு வந்திருக்கிறேன், ரிலீஃப் அனுப்ப வேண்டுமென்று; ஒரு ரிலீஃப் கமிட்டி அமைக்க வேண்டும். வெள்ளம் வந்தால்_சரி, உன் களஞ்சியத்தில் நெல் இருக்கிறதா?"

"ஏதோ கொஞ்சம் இருக்கிறது?"

"ஆட்கள் எப்படியாவது தப்பித்துக் கொள்வார்கள். நெல்லைப் காப்பாற்ற வழி செய் முதலில்; ஆபத்து வருகிறது; நெல், பணம் காசு நிறையத் தேவைப்படும்.."

"நமக்கு ஆபத்து உடனே வராது; இருந்தாலும் நீ நினைவு வைத்துக் கொள்."

"கட்டாயம்; நீங்கள் எல்லாரும் இருக்கும் நெல்லை மச்சில் ஏற்றிவிடுங்கள். நான் துறையிலிருந்து பஸீரத்தின் படகைக்

கொண்டு வருகிறேன். அவசியமானால் நீயும் ரிலீஃப் வேலைக்குக் கிளம்ப வேண்டும்.." என்று சொல்லிக் கொண்டே விரைவாகப் போனான். சந்திரன். அவனுக்கு நிற்க நேரமில்லை.

"வெள்ளத்தில் மூழ்கிப் போனாலும் போவேனே தவிர பஷீரத்தின் படகில் நான் ஏறமாட்டேன்.." என்று சொல்லிக் கொண்டான் குலச். இன்று அவன் கபாஹூறியை எவ்வளவு வெறுக்கிறானோ அவ்வளவு வெறுப்பு அவனுக்கு பஷீரத்திடமும் இருந்தது. வீட்டுக்கு வந்தான். வாசலில் வந்து சற்று நின்றான். யதேச்சையாக அவனுடைய பார்வையும் சூரியகாந்திச் செடிமேல் சென்றது. அந்தி வர இருந்த பசப்பில் அந்தப் பூ ஏற்கனவே வாடிவிட்டிருந்தது. சிறிது நேரம் அந்தச் சூரிய காந்திப் பூவையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு அவன் ஆற்றின் பக்கம் போகக் கிளம்பினான்.

அப்பொழுது அந்தி முற்றி விட்டிருந்தது. மேகங்கள் மேலும் தாழ்ந்து இறங்கி வந்திருந்தன. ஏதோ பயத்தால் பயிர்களும் வாடிக்கிடந்தன போலும். வெறி பிடித்துக் குதித்தோடி வரும் தன்சிரியைப் பார்த்தான். அவனுக்குக் கண்ணீர் சுரந்தது. கரைக்கும் தண்ணீருக்கும் நாலு அங்குல இடைவெளிதான் மீதி இருந்தது. கையற்றுப் போய் வீட்டுக்குக் கிளம்பினான்; சொல்லோணாத் துயரத்துடன் தன் வயல்களைப் பார்த்தான். பைத்தியம் பிடித்தவன் போல் வீட்டுக்கு வந்தான்.

"கபாஹூறியா அது? எங்கே போகிறாய்?" என்று சந்திரன் கேட்டான். அவள் தலையைத் தூக்கி அவனைப் பார்த்தாள். "அந்தி நேரத்தில் எங்கே கிளம்பினாய்?" என்றான் சந்திரன் மறுபடியும்.

"நீ எங்கிருந்து வருகிறாய்?"

"டவுனிலிருந்து....எங்கே போகக் கிளம்பினாய்?"

"என்னை வீட்டிலிருந்து விரட்டி விட்டான்.."

"விரட்டிவிட்டானா? யார்?

"குலச்சுதான்.."

"விளையாடாதே கபாஹூறி; பெரிய மழை வரப்போகிறது? இது என்ன தமாஷ்? உண்மையைச் சொல்..என்ன நடந்தது?"

"உண்மையாகத்தான் சொல்கிறேன். கோலாகாட்டிலிருந்து வரும்போது சேனி ஏதாவது சொன்னாளோ என்னவோ

என்னைப் பற்றி, நேற்றிலிருந்து என்னுடன் பேசவில்லை; இன்று ஏதோ ஒரு சமாசாரம் கேட்டதற்காகச் சாட்டையால் அடித்து விரட்டிவிட்டான்."

"என்ன? குலச்சா இப்படிச் செய்தான்? நீ என்ன சொன்னாய்?

இரண்டு பக்கமும் பார்த்துவிட்டு, "அந்த விஷயம் பற்றி யாருக்குமே எதுவும் தெரியாது. எப்படியோ அது சேனிக்குத் தெரிந்துவிட்டதோ என்னவோ?"

"எந்த விஷயம்?"

"வேறு என்ன விஷயம்? பஸீரத் விஷயம்தான்..."

"பஸீரத் விஷயமா? அவனைப் பற்றி எந்த விஷயம்...?"

"அதனால்தானே நான் நாஹுர் வீட்டிலிருந்து வெளியேறி வந்தேன்"

"சரி, அதனால் இப்போதென்ன?" என்றான் சந்திரன். அவன் பொறுமை இழந்து விட்டான்.

"பஸீரத் மறுபடியும் எங்கள் வீட்டுக்கு வந்ததை இவன்-குலச் பார்த்திருக்கிறான்..."

"பார்த்திருக்கட்டுமே; அதனால்..." என்று அவளை நேரிடையாகப் பார்த்தான் சந்திரன். கபாஹி கூட்டி விழுங்கிக் கொண்டு பயத்துடன், "யாராவது ஏதாவது சொல்லியிருக்கலாம்..." என்றாள். "பஸீரத் என்றால், இங்கே இருக்கிறானே இவன்தானே?" என்று அவளைப் பார்த்தான். கபாஹி தன் பார்வையைக் கீழே செலுத்தினாள். சந்திரனுக்கெதிரில் எல்லாவற்றையும் சொல்லி ஆக வேண்டியிருந்தது. "பஸீரத் வருவதாகவே வைத்துக் கொண்டாலும் அதனால் என்ன?" என்று கேட்டான் அவன் மறுபடியும். யாரோ பழைய நிகழ்ச்சிகளை குலச்சிடம் சொல்லியிருக்கிறார்கள்; பழைய சங்கதிகள் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு அவன் மிகவும் கோபப்பட்டுக் கொண்டு கனல் தெறிக்கிறான். சேனிமாயிதான் அவனிடம் சொல்லியிருப்பாள் எல்லா விவரமும்"

சந்திரன் மிகவும் அமைதியுடன், "ரொம்ப நாளாக நானும் உன்னிடம் ஒரு சமாசாரம் சொல்லவேண்டும் என்றிருந்தேன். டோண்ட் மைண்ட்; குலச் தராவைக் கல்யாணம் செய்து கொள்ள

வேண்டுமென்று ரொம்ப நாளாக நினைத்திருந்தான். ஆனால் நடுவில் ஏதோ குழப்பம் நேர்ந்துவிட்டது. இப்போதும் உனக்குப் பிடித்தால் பஸீரத்துடன் போய்விடலாம். அவன் உனக்காகவே தான் இத்தனை நாளும் இன்றுவரையிலும் கல்யாணம் செய்து கொள்ளாமலேயே இருந்துவிட்டான். குலச் இருக்கட்டும்..." மழை பெரிய தூற்றல்களாக விழுந்தது. சந்திரன் மிக விரைவுடன், "சரி, பின்னால் எது வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். இப்போது வா-மழை வந்துவிட்டது; துறையில் அநேகமாய் பஸீரத்தின் படகு இருக்கும். நாம் சீக்கிரமாகவே ஆற்றைத் தாண்டி அககரைக்குப் போய்விடுவோம்" என்றான்.

கபாஹி ஒரு தடவை தான் வந்த வழியை வேட்கை மிகுந்த பார்வையுடன் பார்த்தாள். பிறகு எதுவுமே பேசாமல் சந்திரனைப் பின் தொடர்ந்து மிக விரைவாய்த் துறையை நோக்கி நடந்தாள்.

"பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. எல்லாம் சரியாகிவிடும். நான் சரி செய்கிறேன். உன்னை அடித்திருக்கிறான். சரி, ஐ ஷெல் ஸீ-நீ வருத்தப்படாதே....எல்லாம் சரியாகிவிடும்.." என்றான் சந்திரன்.

ஹோ என்ற இரைச்சலுடன் வந்த மழையில் சத்தத்தில் அதற்குப் பிறகு சந்திரன் பேசியது ஒன்றும் காதில் விழவில்லை. இருவரும் போய் கொண்டிருந்தார்கள்.

## முப்பத்தைந்து

ஆழ்ந்த இரவு. இருட்டு அச்சம் தரும் இரவு. வானத்தின் இதயம் உடைந்துவிட்டது. காற்றின் சுர்சுர் என்ற சத்தம் கேட்கிறது. எங்கோ இடி விழுவதால் இதயத்தை நடுங்க வைக்கும் கர்ஜனை கேட்கிறது. இடையிடையே கண்ணைக் கூச வைக்கும் மின்னல் பளீர் பளீர் என்று வெட்டுகிறது.

பிரளயமே கீழே இறங்கி வருகிறது.

தன்சிரியின் கரை உடைந்துவிட்டது; வெள்ளத்தின் வெறி பிடித்த ஓட்டம்; கரையை உடைத்துக்கொண்டும், அணைகளைத் தகர்த்துக் கொண்டும், கனமான இருட்டின் இடையே நான்கு புறமும் பரவி விட்டிருந்தது. ஆற்றுப்பெருக்கின் பயங்கரமான சத்தம், ஆபத்திற்குள்ளான பூமி தேவியின் அழுகுரல் போல் அவல

ஓசையாய்க் கேட்டது. கோரமான, தடுக்கவே முடியாத வேகத்துடன் தன்சிரி தேவி வெறி கொண்டவளைப் போலத் தன் இஷ்டப்படி ஒரு பக்கத்திலிருந்து பிடித்து அழித்துக் கொண்டு வருகிறாள். தொலைவில் உள்ள கானகத்து விலங்குகள் கூக்குரல் இடுகின்றன. நெல் வயல்களெல்லாம் ஒப்பாரி வைத்துப் பிலாக்கணம் பாடுகின்றன, சர்...சர்...; பர்பர் என்று பூமி தேவியின் அஞ்சி நடுங்கும் குரல் கேட்கிறது. மனிதக் குரலே கேட்கவில்லை. விளக்கை ஏற்றி வைக்க ஆன மட்டும் முயன்றாள் தரா. முடியவில்லை. அணைந்து அணைந்து போகிறது. வானிலும் மண்ணிலும் எல்லா இடத்திலும் பரந்து அப்பிக் கிடந்த இருட்டென்னும் மலைப்பாம்பு எல்லாவற்றையும் விழுங்கிக் கொண்டிருக்கிறது. இருட்டு-ஒரே இருட்டு.

நள்ளிரவு. வெளியே தன்சிரியின் வெறிகொண்ட வெள்ளம். தலையணையில் தன் முகத்தைப் புதைத்துக்கொண்டு கிடந்தான் குலச்; அவன் உள்ளத்தில் அறியமுடியாத ஆயிரம் அவலக் கவலைகள்; தரா மெல்ல வந்து அவன் அருகில் நின்று கொண்டாள். ஜாடை அறிந்து குலச் படுக்கையின் ஓரமாக ஒதுங்கிக் கொண்டான். "இத்தனை காற்றுமழையும் கலந்து அடிக்கிறது. சித்தி எங்கே போனாளோ தெரியவில்லையே தெரியவில்லையே" என்றாள் தரா. அவன் பதில் சொல்லவில்லை. வெளியில் பெருகும் வெள்ளத்தையும் பெய்யும் மழையையும் காதால் கவனித்தாள் தரா. "இன்று என்ன நடந்தது? சித்தியை வைது அடித்து விரட்டியது எதற்காக?" தரா மறுபடியும் கேட்டாள். அவளுடைய கையைத் தேடிப்பிடித்துத் தன் கைமேல் வைத்துக் கொண்டு, மெல்லிய குரலில், "உனக்கு ஒன்றும் தெரியாது..எவ்வளவோ சமாசாரங்கள்..." என்றான்.

தரா அவனுடைய உடம்பை அன்போடு தடவினாள். "என்ன சமாசாரம்?" "ஒரு தடவை உன்னை ஸபீயத்தின் மகன் ஊமைக்குக் கட்டிக் கொடுக்கச் சதியாலோசனை செய்தாள்; இப்போது அதே மாதிரி திகருக்காக...இது உனக்குத் தெரியாது..."

"அதனால் என்ன? அதற்காக அடித்து விரட்டவா வேண்டும்?"

"எனக்கும் அது சரியென்று தான் படவில்லை; இன்று எனக்குக் கோபம் மிகவும் அதிகமாய் வந்துவிட்டது. ஏன் என்றும் தெரியவில்லை. உன்னிடம் உன் சித்திக்குப் பாசமிருந்தால் திரும்பி வருவாள். நீ கவலைப்படாதே."

தரா படுக்கையில் உட்கார்ந்தாள். குலச் பேசவில்லை. தொலைவில் வெள்ளத்தின் ஓசை; வானம் இடிந்து பூமியின் மேல் விழுந்துவிட்டது. நடுநிசியின் சூரைக்காற்று பைத்தியம் பிடித்து எங்கோ வீசிப்பறக்கிறது.

"தரா, காதில் விழுகிறதா? தன்சிரி அணையை உடைத்துக் கொண்டு வந்து விட்டாள்."

"வெள்ளப் பெருக்கும் நம் நிலத்தை மூழ்க அடித்துவிடுமே" தரா கவலைபட்டாள். "ஆற்றில் வரும் வெள்ளத்தை மனிதனால் தடுக்க முடியாது" என்றான் குலச். வீட்டின் கூரைமேல் பொழியும் மழையின் ஓசை விடாமல் கேட்கிறது. குலச்சின் மார்புக்கருகில் தரா மெதுவாகப் படுத்துக் கொண்டாள். அவளைத் தன்னுடன் நெருக்கிக் கொண்டு, "உனக்கு பயமாக இருக்கிறதா?" என்று கேட்டான். அவள் பதிலே சொல்லாமல் அவன் மார்பில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவளைத் தோள்களால் கட்டி அணைத்துக் கொண்டு, "இனிமேல் உன்னை என்னிடமிருந்து யாரும் பறித்துக் கொண்டு போக முடியாது..." என்றான் குலச். அவளை இறுக அணைத்துத் தழுவி, "வெள்ளம் வரும்போது யாரும் அதைத் தடுத்து நிறுத்தமுடியாது" என்றான். "வெள்ளம் வந்து விட்டது; இந்தப் பசலியின் விளைவு முழுவதும் நாசமாகிவிட்டது. உன் சித்தியும் போய்விட்டாள். எல்லாம் போய்விட்டது; போகட்டும். நீ இருக்கிறாய்" என்றான்.

தரா மிகவும் கெட்டியாக அவனைப் பற்றிக் கொண்டாள். அவளுடைய சங்கையில்லாத மூச்சுக்காற்றால் அந்த ஈரமான இரவும் வெப்பமுடையதாயிற்று. குலச் அமைதியாகச் சொன்னான். "நீ இருக்கிறாய்; நீதான் எனக்கு எல்லாச் செல்வமும்" உண்மையான இந்தப் பெரிய சமாசாரத்தை அவன் எப்போதும் சொன்னதில்லை, என்று நினைத்துக் கொண்டான் குலச். அவன் வெட்டிக் கொட்டிச் சீர்திருத்திச் சாகுபடிக்குக் கொண்டு வந்த நிலத்தின் வழியாக வெள்ளம் ஓடி வந்திருக்கிறது. தன்சிரியின் பெருக்கினுடைய வெறிபிடித்த வேகம். ஆற்று வெள்ளம் நிற்காது; ஓடிக் கொண்டே இருக்கும் ஆறு.

இரவின் சூரியகாந்திப்பூ வெளிச்சத்தைத் தேடுகிறது. வாழ்க்கையும் ஓடிக் கொண்டே இருப்பதுதான்.

"தரா..." என்றழைத்தான் குலச்.

தரா பேசாமல் இருக்கிறாள்.

தராவைத் தன் மார்பில் சாய்த்துக் கொண்டு, "வெள்ளம் வந்தாலும் நம் வீடு மிதந்து போய்விடாது. நம் வீட்டின் மனையும் அஸ்திவாரமும் மேடானவை." என்றான்.

ஜர் ஜர் என்று பெய்யும் மழையின் ஆழமான சத்தம். இந்தச் சத்தத்திற்கு அப்பால் வேறு தரையே இல்லையோ./ஒரே தண்ணீர் காடுதானோ..."

தரா இன்னும் கெட்டியாக, அழுத்தமாக, குலச்சைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டாள்.

"நீ தான் என் வீடு; என் நிலம்-என் எல்லாச் செல்வமும் நீயே."

பூமியின் கொதித்த கர்ப்பத்தில் நனைந்த வானம் இறங்கி வந்திருக்கிறது. தன்சிரி கரையை உடைத்துக் கொண்டிருக்கிறது. புதிதாய் பண்படுத்திய நிலத்தில் புரட்டாசி வெள்ளம் வண்டலைக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறது.

அதே நேரத்தில் சந்திரன் அநேகமாய் எங்காவது பெரிய மனிதன் மாதிரி நின்று கொண்டு ரிலீஃப் பற்றி கவலைப் பட்டுக் கொண்டிருப்பான். அல்லது யாராவது ஒரு கபாஹிக்குத் தைரியம் சொல்லிக் கொண்டிருப்பான். மழைக்காலத்து வெள்ளம் வந்தது..வெள்ளம் வடிந்தும் போய் விடப்போகிறது; ஏன், எதற்காக அஞ்சவேண்டும்?

Printed at The Central Electric Press A12/1 Naraina Indl Area, Phase-I, New Delhi-110028